# மறை நூன் முகம



சென்னை

டெம்பிள் அண்ட் கோ

1923

 [விலை அணா 10

# விஷய விவரம்

# மறைநூன்முகம்

## (முதற்பாகம்)

---

## 1. வேதம்

### பெருநூல்

உலகத்தில் அநேக மதங்கள் வழங்குகின்றன. அம் மதங்களை அனுசரிப்பவர்கள் அநேகர்களாயும் அநேக விதமானவர்களாயும் இருக்கிறார்கள். அவரவரும் அருமையாகப் போற்றிப் பெருமையாகப் பாராட்டும் கிரந்தம் ஒன்று ஒவ்வொரு மதத்திலும் இருக்கின்றது. அதனை வேதம் என்றும் பெருநூல் என்றும் வழங்குகிறார்கள். அதனில் விளக்கப்பட்டிருக்கும் தத்துவங்களும் கொள்கைகளும் கடவுளினால் பிரத்தியக்ஷமாகக் கூறப்பட்டன, அல்லது தெய்வம் மனிதவடிவமாக அவதரித்தபோது அவரால் கூறப்பட்டன, அல்லது கடவுளுடைய அருளும் ஆவேசமும் பெற்ற அடியார்களான ஞானத்திற்கும் இருப்பிடமாய் விளங்கிய இருடிகளினால் கூறப்பட்டன என்று நம்புவதற்கான ஏதுவும் அவரவருக்கும் புலப்படும். அந்தந்த மதத்தினரின் பெருநூலில் கூறப்பட்டுள்ள நீதிகளும் நியாயங்களும் மிகுந்த உத்கிருஷ்டமானவைகளாயிருக்கின்றன. அவைகளுக்கு [illegible] ஆனாலும் [illegible] பெருமை [illegible]

யையும் அவ்வாறுக்கு உடான பெருமை யுடையனவாகக் காணப்படவில்லை யென்று சொல்லலாம்.

மதிப்புரை

உலகத்திலுள்ள மற்றச் சாதியார்களுக்கு இருப்பது போல இந்துக்களுக்கும் பெருநூல் ஒன்று இருக்கின்றது. அதனை அவர்கள் "வேதம்" என்பார்கள். அது உலகத்திலுள்ள மற்ற மதக்கிரந்தங்க ளெல்லாவற்றினுஞ் சிறந்த தென்று மேற்றேயத்துப் புலவசிகாமணிகளும் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். அதனி லடங்கிய விஷயங்கள் மிக்க பெருமை வாய்ந்தனவாகவும் அரிய யோக்கியதை யுடையனவாகவும் இருப்பதனால், அதனினினும் உயரிய மதநூலை மனிதன் இதுவரையில் பார்த்ததில்லையென்று மேனாட்டுப் பண்டிதர்கள் சிலர் அதனைக் கொண்டாடி யிருக்கிறார்கள். அதன் அருமை பெருமைகளைக் கண்டு தம் மதத்தை நீத்து இந்துமதத்தைத் தழுவிய பிறநாட்டார் பலர் உளர். ஷோபன்ஹார் என்னும் ஜெர்மானிய ஸம்ஸ்கிருத வித்துவான் அவ்வாறு இந்துமதத்தைக் கைக்கொண்டவரெனவும், இந்தியாவின் பிராசீன முனிவர்களுடைய தத்துவ சாஸ்திரத்தைக் கடைப்பிடித்தவரெனவும் சொல்லத்தக்கவராவர். வேதத்தின் ஒரு பகுதியாகிய உபநிஷத்துக்களைப்பற்றிச் சொல்லுமிடத்து, அவை தமக்கு இம்மையில் இன்பமளித்த அமுதமெனவும், மறுமையிலும் தமக்கு இன்ப மளிக்கத்தக்க தேவாமுதம் எனவும் அவர் வெளிப்படையாக உலகத்திற்குப் பிரகடித்துள்ளார்.

வேதத்தின் ஜீவசக்தி

வேதம் அநாதியானது, எல்லாக் காலத்திலும் நிலையாயிருக்கத்தக்கது என்று இந்துக்கள் நம்புகிறார்கள். அது எப்

பொழுது எந்தக் காலத்தில், எவரால் ஏற்பட்டதென்று எவ
ரும் சொல்லமுடியாதிருக்கின்றது. அதன் ஆதியை விசா
ரிக்குமளவில், அது பழமையென்னும் புகையினால் சூழப்
பெற்று விளக்கமுறா திருக்கிறதென்று மேற்றிசைப் புலவர்
களும் கூறுகிறார்கள். அதாவது, அது தோன்றிய காலம்
எதுவென்று எவராலும் ஆராய்ந்து தெளியக்கூடவில்லை.
நமது ஞாபகத்திற்கு எட்டிய ஆதிகாலம் முதல் இதுவரையில்
எத்தனையோவிதமான துரைத்தன மாறுபாடுகள் இந்தியா
வில் நிகழ்ந்திருக்கின்றன. ஸ்வமதாபிமான வெறியினாலும்,
கொடுங்கோலினாலும், கள்ள நியாயங்களினாலும் இந்துக்க
ளுடைய வேதத்தைத் தகர்த்துத் தவிடு பொடியாக்குவ
தற்கு எத்தனையோ பேர் எத்தனையோ முறை எத்தனையோ
விதமாகப் பிரயத்தனப்பட்டார்கள். வேதத்தில் இந்துக்
களுக்குள்ள நம்பிக்கையைக் கெடுத்து, அதன் தத்துவக்
கொள்கைகளைக் குலைப்பதற்குப் பெரு முயற்சிகள் செய்தார்
கள். ஆட்சியதிகாரமுள்ள அரசர்களும் தீர்க்க திருஷ்டியில்
லாத மதோன்மத்தர்களும் வேதத்தை யழிப்பதற்கு மானி
டாதீதமான மகாப்பிரயத்தனங்கள் செய்தார்கள். இவை
களுக்கெல்லாம் சளைக்காமல் சலிக்காமல் இந்துக்களின்
வேதப்பொருளானது பரமசாந்தாகாரமாயும், ஆன்மதிருப்தி
விளைவிப்பதாயும், உயிர்களை யூட்டுவதாயும் இன்றைக்கும்
நிலைநின்று விளங்குகின்றது. இந்துக்களில் படிப்பாளிகளும்
படிப்பில்லாதவர்களும் அதை நம்பியே விவகரிக்கின்றார்கள்.
பௌதிக சாஸ்திரப்பயிற்சி இக் காலத்தில் மிகப் பரவியிருக்
கின்றது; பழமையானவைகளை யெல்லாம் தலைகீழாக்
கவிழ்த்துப் புதியவைகளை ஏற்படுத்துவதற்கான மூர்க்கமான
முயற்சிகள் அநேகம் நடைபெறுகின்றன. இத்தகைய பிரதி
கூலமான சந்தர்ப்பங்கள் வாய்த்திருக்கும் இக் காலத்

இந்துக்களின் வேதமானது ஒளிமழுங்காமல் உத்தம பிரகாசத்தோடு இலகுகின்றது. வாயுமண்டலத்தில் நிகழும் பலவிதமாக புயல்களையும் புரட்டல்களையும் பொருட்படுத்தாமல், அவைகளினால் ஒருசிறிதும் வாதிக்கப் பெறுமல் சூரியன் உயர்ந்துநின்று ஒளிதந்து உலகத்து உயிர்கள் அனைத்தினையும் ஆதரித்து வளர்ப்பது போல இந்துக்களின் வேதத்தினின்றும் வீசுகிற ஞானகிரணமானது நாஸ்திகம், பிரகிருதிவாதம், அநுமானவாதம் முதலான பற்பல மதக்கொள்கைகளினால் ஏற்படும் விப்ரமங்களை யகற்றித் தெளிவான தெய்வமார்க்கத்தைக் காட்டியருளத் தக்கதென்று அறிவுடையாரெவரும் ஏற்று ஆனந்திக்கத் தக்கதாயிருக்கின்றது.

## விதேச வியாபகம்

பௌதிக சாஸ்திரங்கள் தோன்றிப் பிரபலமாயுள்ள நாடுகளிலும் இந்தியருடைய வேதம் கொண்டாடப்படுகிறதென்று இன்றைக்குநாம் கேள்விப்படுகிறோம். இந்துக்களின் வேதம் அவ்வாறு அன்னிய தேசங்களில் தலையெடுப்பது அதிசயமன்று. ஏனெனில், அந்தத் தேசங்களில் உள்ளவர்கள், அறிவு விளக்கம் இல்லாததனால் எந்தக் கொள்கையையும் எந்த மதத்தையும் நம்பியேற்று அவைகளில் விடாப் பற்றுடையவர்களா யிருந்தார்கள். பௌதிக சாஸ்திரங்கள் தோன்றிய பின் காரண காரிய நியாயமும், பல திருஷ்டாந்தங்களைக் கொண்டு ஒரு பொதுவான சித்தாந்தம் செய்யும் தர்க்க சாஸ்திர முறையும் அவர்களுக்கு ஏற்பட்டன. இப்படி ஏற்பட்ட ஆராய்ச்சியினால் அவர்களுக்கு அறிவு மிகுந்தபின் [illegible] பௌதிக சாஸ்திரத்தினால் புலப்பட்ட சித்தாந்தங் [illegible] அவர்கள் தங்களுடைய மதக் கொள்கை [illegible]

வினை ஆராய்ந்து பார்க்கத் தலைப்பட்டார்கள். அந்த ஆராய்ச்சியில் அவர்களுடைய பழைய கொள்கைகளெல்லாம் தவறானவை யென்றும் ஆதாரமற்றவை யென்றும் விளங்கலாயின. ஆனதனால், இந்திய மாமுனிவரின் சித்தாந்தங்கள் மேனாடுகளில் நிலைகொண்டு பரவுவதற்கு இதுவே நல்ல தருணமாயிற்று.

நமது தத்துவ சாஸ்திரமும் மதக்கிரந்தங்களும் ஆதிகாலந் தொடங்கி ஊனமில்லாமல், ஊறுபாடில்லாமல், வேறுபாடில்லாமல், எவராலும் மாற்றப் பெறாமல் ஸ்வயமாக இந்நாளளவும் காப்பாற்றி வைக்கப்பட்டிருக்கின்றன. இது இந்து சாஸ்திரங்களுக்குரிய அருமையான யோக்கியதையாகும். இதனால் அவைகளுக்கு ஒருவிதமான அபூர்வ சக்தியும் அழியாத ஜீவகளையும் உண்டாயிருக்கின்றன. இப்படிப்பட்ட சக்தி பிறதேசங்களில் வியாபகமாயுள்ள மற்ற மதங்களினிடத்து இல்லை. இந்த அருமையான சக்திவிசேஷத்தினாலே இந்து வேதம் முதலிய மதக் கிரந்தங்கள் புதிய நாடுகளில் தலையெடுத்து விளங்குவதற்காயின.

## பிரகிருதி புருஷ பேதம்

மற்ற மதக் கிரந்தங்களைப் பார்த்தால் அந்த மதங்கள் ஆதியில் ஏற்பட்டபோது இருந்த கொள்கைகளுக்கும் சித்தாந்தங்களுக்கும் இப்பொழுது அந்த மதத்தவர்கள் கைக்கொண்டிருக்கும் ஆசாரனைக்கும் மிகுந்த வித்தியாசம் காணப்படுகிறது. அந்த மதஸித்தாந்தங்களைப் பாதுகாப்பதற்காக வந்த ஆசாரிய பரம்பரையினர் தம்முடைய அறியாமையினால் ஆத்மா அநாத்மா (nature and non-nature), பிரகிருதி புருஷன் (matter and spirit), ஜடம் பிராணன் (body and life) ஆகிய இப்படிப்பட்ட தோந்தங்களை

குள்ள சம்பந்தம் (connecting link) இன்னதென்று தெரிந்துகொள்ளாமல் கைவிட்டார்கள். அந்தச் சம்பந்தம் தெரியாததனால் அவர்களுடைய மதத்திற்குரிய சாஸ்திரத் தன்மை நீங்கியது; அவர்களுடைய மதமென்பது பலவிதமான நம்பிக்கைகளையும் கொள்கைகளையும் குறிப்பதாயிற்று. ஆசாரிய பரம்பரையின் அறியாமையின் பயனாக இப்பொழுதுள்ள அவர்களுடைய மதக்கிரந்தங்களில் மேற்சொல்லிய சம்பந்த லேசமும் இல்லாமற் போயிற்று; சிற்சில இடங்களில் புதைபொருளாகச் சில குறிப்புக்கள் மாத்திரம் அங்கங்கே அகப்படுகின்றன.

## ஏக தத்துவம்

இந்துக்களின் வேதமாகிய மதக்கிரந்தங்களின் விஷயம் அப்படிப்பட்டதன்று. வேதத்தின் மூல வாசகங்கள் ஆதியிலிருந்தபடியே இப்பொழுதும் காப்பாற்றப் பெற்றிருக்கின்றன. அப்படிக் காப்பாற்றி வைக்கும் முறை இந்தியாவில் மாத்திரமே யுள்ளது. இந்த முறையினால் மதக்கிரந்தங்களில் பிற்காலத்தவரெவரும் தம் மனம் வந்தவாறு வாக்கியங்களை எழுதிச் சேர்க்கமுடியாதாயிற்று; பழைய வாக்கியங்களை விபரீதமாகத் திருத்தவும் மாற்றவும் முடியாதாயிற்று. ஆனதனால், மற்ற மதக்கிரந்தங்களில் பிரகிருதிக்கும் புருஷனுக்கும் இடையிற் காணப்படுகிற பெரிய அவாந்தரம் இந்து மதக்கிரந்தங்களில் காணப் படுவதில்லை. பிரகிருதி புருஷனைத் திரிவதும், புருஷன் பிரகிருதியாகத் தோன்றுவதும் இந்துமதக் கிரந்தங்களில் அவாந்தரமின்றி எளிதாகவும் இயல்பாகவுங் காணப்படுகின்றன. கணிதநூல் பயின்றவனொருவன் ஒன்றுக்கு மேற்பட்ட எண்களினின்று ஒன்றுக்குக்கீழ்ப்பட்ட தசபின்னங்

களுக்குக் (decimals) கணக்கிட்டு இறங்குவது எளிதாயிருப்பதுபோல, புருஷனினின்று பிரகிருதிக்கு இறங்குவது இந்து மதசாஸ்திரிக்கு எளிதும் இயல்புமாகும். கணிதசாஸ்திரத்தைப் பயிலாதவன் தசபின்னங்களுக்கும் தசபின்னமல்லாத எண்களுக்கும் (decimals and non-decimals) பெரிய வித்தியாசத்தைக் கற்பித்துக்கொள்வான் அது மடமையேயாகுமன்றோ? அதுபோலவே தத்துவமறியாத ஸித்தாந்த போதகாசிரியன் பிரகிருதிக்கும் புருஷனுக்கும் பெரிய வித்தியாசத்தைக் கற்பித்துக்கொள்கிறான். தத்துவ வாராய்ச்சியுள்ள சாஸ்திரியோ, பிரகிருதியினின்றும் புருஷனுக்குச் சுலபமாக ஏறவல்லான். பிரகிருதியே புருஷனாக ஏறுமென்றும், புருஷனே பிரகிருதியாகத் திரும்புமென்றும், இப்படி ஏறுவதும் இறங்குவதும் இயல்பென்றும் தத்துவசாஸ்திரி அறிவான். ஒரே தத்துவம் பிரகிருதியாகவும் புருஷனாகவும் (matter and spirit) பரிணமிக்கிறது. மேனாட்டார் பௌதிக சாஸ்திரங்களை ஆதாரமாகக்கொண்டு பிரகிருதியைச் சோதிக்கிறார்கள். அந்த மார்க்கத்தின்படி அவர்கள் பிரகிருதியின் பரமாவதிவரையில் (முடிவுவரையில்) போகிறார்கள். அங்கிருந்து புருஷனை யெட்டுவதற்கு வழி அவர்களுக்குத் தெரியவில்லை. பிரகிருதிப் பிரபஞ்சத்திற்கும் (world of matter) புருஷப் பிரபஞ்சத்திற்கும் (world of spirit) இடையில் பெரிய அவாந்தரம் (gulf) அவர்களுக்குத் தோன்றுகின்றது. பிரகிருதிக்கும் புருஷனுக்கும் உள்ள சம்பந்தத்தை (the connecting link between spirit and matter) விளக்கும் இந்து வேத சாஸ்திரங்களைப் பார்த்தவுடனே மேற்சொல்லிய அவாந்தரத்தைக் கடக்கமாட்டாமல் கஷ்டப்பட்டுக்கொண்டிருந்த மேனாட்டார் இவைகளைச் சந்தோஷமாகக் கைப்பற்றிப் பிரகிருதியினின்றும் புருஷனுக்

துத் தடையின்றிச் சுலபமாகச் செல்கிறார்கள். ஆகையால், இந்து வேத சாஸ்திரங்கள் மேனாட்டில் பிரபலமடைவது ஆச்சரியமாகாது. இந்து வேத சாஸ்திரங்களினால் மானிட வர்க்கத்தினரனைவரும் சீக்கிரகாலத்திலே அறிவு மிகுந்து மேன்னிலை யடைவார்களென்று எண்ணுவதும் ஆச்சரிய மாகாது.

## மேனாட்டுப் பண்டிதர்கள்

இந்துக்களின் வேதத்தைப்பற்றி ஐரோப்பிய பண்டிதர்கள் கொண்டுள்ள அபிப்பிராயத்தைப் பருகிப் பழகியவர்களுக்கு மேலே சொல்லிய விஷயங்களெல்லாம் விபரீதமாகத் தோன்றும். நாம் தேசாபிமானத்தினாலும் மதாபிமானத்தினாலும் நமது வேதத்திலுள்ள குற்றங் குறைகளைக் கவனியாமல் பெருமையாகப் பாராட்டுகிறோமென்று அவர்கள் சொல்லுவார்கள். வேதத்தின் கடைப்பகுதியாகிய உபநிஷத்துக்கள் மிக உயரிய கருத்துக்களடங்கி மேன்மையாக விளங்கினும், வேதத்தின் முற்பகுதிகளெல்லாம் மிகச் சாமானியமானவை; மாக்ஸ் முல்லர் என்னும் புலவர் கூறியபடி அவை குழவிப் பருவத்து மானிட ராசியின் மழலைச் சொற்களே யாகும் என்று அவர்கள் நினைப்பார்கள். மாக்ஸ் முல்லரைவிட ஏ. ஏ. மாக்டானெல் என்னும் ஐரோப்பிய ஸம்ஸ்கிருத பண்டிதர் இந்துக்களின் விஷயத்தில் பரிந்து பேசும் தன்மை வாய்ந்தவர். அப்படிப்பட்டவரும் வேதத்தின் ஒரு பகுதியாகிய பிராம்மணங்களைப்பற்றிச் சொல்லுமிடத்து, "அவை பயனற்ற தர்க்கங்களின் தொகுதி; பாண்டித்தியப் பெருமையைப் பிரகடிப்பவை, ஆசிரிய அகங்கார மிகுந்தவை, மனம் வந்தவாறு ஒன்றுக்கொன்றைப் பொருத்திக் கூறுபவை, அந்தப் பொருத்தங்களும் அநேக இடங்களில்

மிக ஆபாஸமாயிருக்கும், இப்படிப்பட்ட அறிவீனமான விஷயங்களடங்கிய கிரந்தத்தை வேறெங்கும் காண்பதரிது" என்னுங் கருத்துப்பட எழுதியிருக்கிறார். மேனாட்டுப் பண்டிதர்கள் இவ்வாறு சொல்லுகையில், மற்ற மதக்கிரந்தங்களை விட இந்துக்களின் வேதம் மிகச் சிறந்ததென்று நாம் சாதிப்பது பொருந்துமோ என்னும் ஐயம் மேற்சொல்லிய கொள்கையுடையாருக்கு நிகழ்வது இயல்பே.

## திருஷ்டி பேதம்

மேனாட்டுப் புலவர்கள் பெரும்பாலார் இந்துக்களின் வேதத்தைப்பற்றி நல்லபிப்பிராயங் கொள்ளவில்லை யென்பது நிஜமே. அவர்கள் நல்லபிப்பிராயங் கொண்டிருப்பார்களானால் அது ஆச்சரியம் விளைக்கத்தக்கதேயாகும். ஏனெனில், ஒரு ஜாதியாரின் பரமார்த்த விஷயங்களைப் போதிக்கும் ஆதி நூலை தேவாகமமெனக் கருதிப் படிப்பவனுக்கு அது ஒருவிதமான பொருள் தரும். அதே நூலை வித்தியா விநோதமாயும் சரித்திரவிநோதமாகவும் ஆராய்கிறவனுக்கு அது வேறு விதமாகவே புலப்படும். அதனின்றும் பரமார்த்த ஞானத்தைப் பெறவேண்டுமென்னும் எண்ணங்கொண்டு, அதனை நன்குணர்ந்த ஆசிரியருடைய உபதேசபலம் பெற்று, அதனைப் படிக்கிறவனுக்கு ஆழ்ந்த கருத்துக்களும், பெரிய நோக்கங்களும், அரிய விஷயங்களும் அந்த நூலில் அகப்படும். வித்தியா விஷயமான பாண்டித்திய பலத்தைக் கொண்டு, மேலுவிதமான சிரத்தையும் பக்தியுமில்லாமல், தொன்மை யாராய்ச்சி செய்கிறவனுக்கு அவ்வருநம் பொருள்கள் விளங்கா.

## அலங்கார காவியமன்று

இந்துக்களின் வேதமோவெனின், மனத்திற்கு இன்மை பயக்கும் பொருட்டுக் கற்பித்த கதாரசங்கள் அமைக்கப்பட்டதன்று; சொற்பகட்டினாலும் வர்ணனை விசேஷங்களினாலும் நம்மை உற்சாகப்படுத்துவதற்காக அமைக்கப்பட்டதன்று. (ஆயினும், மந்திர பாகத்தில் இவ் வியமான இயற்கை வர்ணனைகளைக் காணலாகும்). அது கண்ணுக்குப் புலப்படும் பிரபஞ்சத்திற்கு அதீதமாயுள்ள உண்மைகளை விரித்துரைக்கும் நோக்கங்கொண்டே அமைக்கப்பட்டிருக்கின்றது. உலகத்திலுள்ள மதகிரந்தங்களெல்லாம் இத் தன்மையனவே யாகும். இந்த நோக்கங் கொண்ட இந்துக்களின் வேதம் வெறுங் கலாவிநோதனுக்கு இனிமை பயக்குமோ? அதனிலும், பிராமணங்கள் என்னும் பாகமானது சுருதிகீதங்களின் வியாக்கியானமாதலின், அது சரித்திர வாராய்ச்சி செய்பவனுக்கும் காவியாலங்காரப் பிரியனுக்கும் ஸாஹஸ க்தா விநோதனுக்கும் உருசியாயிருக்குமோ? இராதென்பது திண்ணம். வேதமே பரமப் பிரமாணமெனக் கொண்டாடும் நாமும் அதனிலுள்ள உபநிஷத்துக்குரிய உயர்பதம் கர்ம காண்டத்திற்கு இருக்கிறதென்று சொல்லவில்லையே. கர்ம காண்டத்தை 'அபாவித்தை' (அற்ப அறிவு அல்லது அதம ஞானம்) எனவும், உபநிஷத்துக்களைப் 'பாவித்தை' (பேரறிவு அல்லது உத்தம ஞானம்) எனவுங் கொண்டிருக்கிறோம். அபாவித்தையாவது ஆத்மஞானத்தை நாடுகிறவனைப் பல வித கர்மங்களினால் பரிசுத்தப்படுத்திப் பாவித்தைக்கு ஏற்றவனாக்கும் ஸம்ஸ்காரபாரிசகமாகும். வைதிக கர்மங்களின் தன்மையையும், அவைகளினால் விளையத்தக்க பெரும் பயனை

யும் அறியாதவர்களுக்குச் சுருதிகீதங்களும் பிராம்மணங்களும் 'மானிடக் குழவியின் மழலை' யல்லாது வேறு என்னவாத் தோன்றும் ? ஞானசாரியக் கருவமும், பொருந்தாத உபமானங்களு மல்லாமல் அவர்கள் வேறு என்ன காண்பார்கள் ? மானிடக் குழவியின் மழலையென புரொபெஸர் மாக்ஸ் மூல்லர் கூறிய நம் பெருநூலில் எவ்வளவு பெருமைவாய்ந்த ஆன்ம தத்துவம் அமைந்திருக்கிறதென்பது அதனைப் பக்தி சிரத்தைகளோடு முறைப்படி ஆராய்பவர்களுக்கே புலப்படுமல்லாது மற்றவர்களுக்குப் புலப்படாது.

## வழிநூல்கள்

ஸ்மிருதி, புராணம், இதிகாசம் என்னு மிவை மூன்றும் வேதத்தின் வழிவந்த நூல்களாம். இவைகளும் இந்துமதத்திற்கு ஆதாரமாயிருக்கின்றன. இவற்றுள் சுருதிகளே பிரபலமான பிரமாணமாகும். அவைகளுக்கு அடுத்தபடியாக ஸ்மிருதிகளையும் புராணங்களையும் இதிகாசங்களையும் பிரமாணமாகக் கொள்கின்றோம். இவை மூன்றும் சுருதிகளில் ஏற்கெனவே சொல்லப்பட்ட கொள்கைகளையே விரித்துப் போதிப்பனவாகும். சுருதிகளிற் கூறப்பட்ட உண்மைகளை ஒழுங்காக அமைத்து விதிரூபமாக (விதிகளாக) வெளியிடுவன ஸ்மிருதிகள். அந்த உண்மைகளையே இனிய கதைகளாகவும் சரித்திரங்களாகவும் ஜனரஞ்சகமாக உரைப்பன புராணங்களும் இதிகாசங்களுமாம்.

## கிருத்திரிமத்திற்கு இடமில்லை

வேத வாக்கியங்கள் வாய்மொழியாகப் பரம்பரைத் தத்துவமாய்ப் போதிக்கப்பட்டு வருகின்றமையின், அவை 'சுருதிகள்' எனப்பட்டன. தமது ஆகமங்கள் கடவுளினாலே அளிக்கப்பட்டன வென்பது இந்துக்களின் திடமான நம்

பிக்கை. ஆதலின், அவைகளை அவர்கள் மிகப் பிரதானமாகக் கொண்டாடுகிறார்கள். அவைகளை உள்ளபடியே காப்பாற்றி வைப்பதில் அவர்களுக்குச் சிரத்தை யதிகம். அந்தக் காரணத்தினால் கிருத்திரிம லேககர்களும் ஒரு சார்பான மதக்கொள்கையையுடைய பக்ஷபாதிகளும் அந்தச் சுருதிகளில் கைவைத்துத் தமக்கு இஷ்டமான வாக்கியங்களைப் புகுத்தவும், அநிஷ்டமானவைகளை ஒழிக்கவும் இடமில்லாதாயிற்று. இவ்விதமாக இந்துக்களின் வேதம் அன்றைக்கு இருந்ததுபோல் இன்றைக்கும் சுத்தமாகவே இருக்கின்றது. வேதமந்திரங்களை, ஒவ்வொரு வார்த்தைக்கும் பதத்திற்கும் இலக்கண விதியின்படி குறிக்கப்பட்டிருக்கிற ஸ்வரத்தோடல்லாமல், உச்சரிக்கக் கூடாதென்னும் மீறொண்ணு விதியொன்று உண்டு. இதனால் வேதமந்திரங்களை வாய்ப்பாடமாக ஓதுவதில் இந்துக்கள் அணுவளவும் பிசகாமல் ஜாக்கிரதையாக உச்சரித்து அவைகளின் ஸ்வரூபத்தையும் தன்மையையும் காப்பாற்றி வந்திருக்கிறார்கள். அந்த ஸ்வரங்களைப் பேதிப்பதனால் பொருள் வேறுபடும், கிரியை வேறுபடும், பயனும் வேறுபடும். ஒவ்வொரு ஸ்வரத்திற்கும் ஒவ்வொருவிதமான பிரயோசனம் உண்டு. இவ்வாறு இந்துக்களின் வேதங்கள் வாய்மொழியாகக் கேட்டுக் கற்றுக்கொள்ளத் தக்கவை. ஆனதாலே, அவை சுருதிகள் எனப்படுகின்றன (ச்ரு = கேட்கிறது).

## அறிவுக் களஞ்சியம்

வேதம் என்னும் சொல் 'வித்' (=அறிகிறது) என்னும் வடமொழிப் பகுதிபடியாகப் பிறந்தது. ஆகையால், வேதம் என்னும் சொல்லுக்கு அறிவு அல்லது ஞானம் என்று அர்த்தம். 'அறிவு' என்று வேதங்களுக்குப் பெயர் கொடுப்பானேன்

னெனின், மனிதன் தெரிந்துகொள்ள வேண்டிய உத்தம விஷயங்களெல்லாம் அவைகளில் அடங்கி யிருக்கின்றன. இலத்தீன் (Latin) பாஷையில் அதற்கு நேரானது 'ஸயன்ஷியா' (*scientia*) என்னும் பதம். அந்தப் பதத்திற்கும் 'அறிவு' என்றே அர்த்தமாகும். பிரகிருதி சம்பந்தமான விஷயங்களில் மானிடனுக்குக் 'ஸயன்ஸ்' (science) என்பது எப்படியோ, அப்படியே ஆத்மஸம்பந்தமான விஷயங்களில் வேதங்களின் தொகுதியானது பிரமாணமாகும். அதாவது, வேதங்கள் என்பவை ஆத்மா அல்லது ஜீவனைப்பற்றிய 'ஸயன்ஸ்' (சாஸ்திரம்.) இம்மைச் சுகத்திற்கும் மறுமைச் சுகத்திற்கும் பிரகிருதி சாஸ்திரம் (the science of matter), ஆத்ம சாஸ்திரம் (the science of spirit) என்பன இரண்டும் மனிதனுக்கு இன்றியமையாதனவாகும்.

எவ்வளவுக் கெவ்வளவு ஆத்மசாஸ்திர விஷயத்தில் நமது பண்டைப் பெருமையைப் புதுப்பித்துக்கொள்கிறோமோ, பௌதிக சாஸ்திரங்களின் ஆதாரத்தைக் கொண்டு ஆத்மசாஸ்திரத்தை எவ்வளவுக் கெவ்வளவு நிலைப்படுத்திக் கொள்கிறோமோ அவ்வளவுக் கவ்வளவு இந்துக்களாகிய நாம் உயர்வடைவோம். மனிதன் தெரிந்துகொள்ள வேண்டிய உத்தம விஷயம் ஒவ்வொன்றும், அவனுக்குத் தேவையானது ஒவ்வொன்றும் இந்து வேதங்களிற் காணத்தகும். வேதங்களிற் காணுதது வேறு எங்கும் காண்பதற்காகாது என்று சாமானியமாகச் சொல்லுவார்கள். இப்படிச் சொல்வதனால், நீராவியந்திரம், மின்சாரவிசை, மின்சாரத் தபால் முதலாக நாம் நாள்தோறும் காண்பவைகளைப்பற்றிய விவரங்களை யெல்லாம் வேதங்களிற் காணலாகும் என்பது கருத்தன்று. இவை யெல்லாம் மனிதனுடைய சரீர சௌகரியத்திற் குரியவை; பிரகிருதி சம்பந்தமானவையாகையால், ஆத்ம

சம்பந்தமான அறிவைப் புகட்டுவதற்கென ஏற்பட்ட கிரந்தத்தில் இவை இடம் பெறா.

## பிரபஞ்ச ஞானம்

வேதங்கள் பிரகிருதிப் பிரபஞ்சத்தை யொட்டிய விஷயங்களைப் பற்றிப் பேசாததற்கு மற்றோர் காரணமும் உண்டு. பிரகிருதிசம்பந்தமான அறிவு ஐம்புலன் களினின்றும் பெறத்தக்கது. ஸ்தூலப்பிரபஞ்சத்து அறிவெல்லாம், புலன்களின் உணர்ச்சியும் மனத்தின் பாவனையும் பலபலவிதமாகக் கலப்பதனால் அமைந்ததாகும். அதாவது, பொறியுணர்வு, மனோபாவனை (perception and conception) என்னும் இவை யிரண்டின் சேர்க்கையாலே பிரகிருதி சம்பந்தமான ஞானம் ஏற்படுகின்றது. இவை யிரண்டையும் கற்பனைத்திறமை கொண்டு புணர்த்துவதனாலே பலவித மான யந்திரங்களும் ஸாதனங்களும் யுக்திகளும் மனித னுடைய சௌகரியத்தின் பொருட்டே புதிது புதிதாக அமைக்கப் படுகின்றன. பிரகிருதி ஞானத்திற் கெல்லாம் மேற் சொல்லிய காரணங்களின் சேர்க்கையே மூலாதாரமாகும். பலவகையான கலைகளிலும் வித்தைகளிலும் எத்தனையோ விஷயங்கள் இதுவரையில் தோன்றியிருக்கின்றன. இன்னும் எத்தனையோ தோன்றக் கூடும் இவை யனைத்தும் பிர கிருதியிலே தோன்றிப் பிரகிருதியிலே பெருகுகின்றன. ஆத லால், இவைகளை யெல்லாம் மனிதன் தன்னுடைய ஐம்புலன் களைக் கொண்டே சாதித்துக்கொள்ளல் கூடும். பிரகிருதி சம் பந்தமான அறிவைப் பெருக்குவதற்கும், பலவகையான சாதனங்களைக் கற்பித்துக்கொள்வதற்கும், இம்மையில் இன் பத்தைப் பெருக்கிக்கொள்வதற்கும் தேவாகமம் வேண்டிய

தில்லை. அவைகளை மனிதன் தன் ஐம்புலன்களைக் கொண்டே அமைத்துக்கொள்ளலாம்.

## பிரபஞ்சாதீத ஞானம்

பிரபஞ்ச விஷய ஞானம் இங்ஙனமாக, பிரபஞ்சாதீத விஷயம் இதற்கு முற்றும் மாறானது. பிரபஞ்சாதீத விஷயங்களை உணரும் திறமை ஐம்புலன்களுக்கு இல்லை. இப்புலன்களுக்கு அவை ஒரே இருள் போன்று காணும். புலன்களால் அறியமுடியாத வுலகத்து விஷயங்களைப்பற்றி நமக்குச் சொல்லத்தக்கது பிரகிருதிப் பிரபஞ்சத்து சாஸ்திரங்களில் எதுவும் இல்லை. எவ்வளவு புத்திமானானாலும், எவ்வளவு பெரிய பண்டிதனானாலும், எவ்வளவு சாமர்த்திய முடையவனானாலும், எவ்வளவு பெரியவனானாலும் அப்படிப்பட்ட உலகமொன்று இருக்கிறதென்று ஐம்புலன்களின் அத்தாட்சியை மாத்திரமே கொண்டு இதுவரையில் எவனும் நிரூபித்ததில்லை. புலன்களுக்கு எட்டாத உலகத்தைப் புலன்களைக்கொண்டு நிரூபிப்பது எப்படி சாத்தியமாகும்? ஆதலால், வேறு சாதனங்களினால் சாதிக்கமுடியாத அப்பெருங் காரியத்தைச் சாதிப்பதற்கு வேதங்கள் மேற்கொண்டன. தம் உதவியில்லாமல் எளிதில் தெரிந்துகொள்ளக் கூடிய விஷயங்களைப் போதிப்பது அனாவசியமென்று அவைகளை வேதங்கள் நீக்கின. பிரகிருதி சம்பந்தமான விஷயங்கள் தாற்காலிகமானவை; ஆத்ம சம்பந்தமான விஷயங்களோ, என்றென்றைக்கும் நிரந்தரமாக நிலைத்திருக்கத் தக்கவை. ஆனதனாலே, மனிதன் தெரிந்துகொள்ளத்தக்க விஷயங்களெல்லாம் வேதங்களில் அடங்கி யிருக்கின்றனவென்று சொல்லப்பட்டது. பிரகிருதியின் ஆதி தத்துவம் இன்னது என்பதையும், ஆத்ம சம்பந்தமான ஒவ்வொரு

நுண்ணிய விஷயத்தையும் விஸ்தாரமாக வேதங்கள் விவரித்துரைப்பதனுல், எவராலும் விடுவிக்க முடியாத உலக தத்துவம் வேதங்களில் விளக்கமுற்றது. இப் பௌதிக உலகத்தில் எவ்விதமாக நடந்துகொண்டால், நாம் இதற் கப்பாலுள்ள சூக்ஷ்ம வுலகத்தில் நல்ல நிலைமை பெறுவதற்காகுமோ அவ்வாறு நடந்துகொள்வதற்கான நற்பாடங்களை வேதங்கள் போதிக்கின்றன. ஆனதனுலேயே வேதங்களில் இல்லாதது வேறெங்கும் இல்லை என்பதாயிற்று.



## 2. வேதப் பகுதிகள்

வேதங்களின் முக்கியமான பகுதிகள் யாவை, அவை களின் உட்பிரிவுகள் யாவை, அவைகளி லடங்கிய விஷயங் கள் எத்தன்மையன வென்பதை விசாரிப்போம். வேதங்களி லடங்கிய விஷயங்களைப்பற்றி இங்கே மிகச் சுருக்கமான சில குறிப்புகள் மாத்திரம் கொடுக்கக் கூடுமேயல்லாமல், அவை களை விவரிக்கமுடியாது. ஏனெனில், வேதங்களின் விஷயம் வெகு விஸ்தார மானது. பிள்ளைகள் பெரியவர்களாகித் தம் பாண்டித்தியத் திறமையினாலும் ஆத்ம ஸாம்ராஜ்ய மடையும் ஆசையினாலும் நிதானமாக அவைகளை ஆராய்ச்சி செய்து தெரிந்துகொள்ள வேண்டும்.

வேதங்கள் நான்கு. அவை இருக்குவேதம், யஜுர் வேதம், ஸாமவேதம், அதர்வவேதம் என்பனவாம். ஒவ் வொரு வேதமும் ஸம்ஹிதை, பிராம்மணம், உபநிஷத்து என்னும் மூன்று பகுதிகள் உடையது. ஸம்ஹிதையை மந் திரபாகம் என்றும் சொல்லுவார்கள்.

### ஸம்ஹிதை

ஸம்ஹிதை என்னும் சொல்லுக்குத் 'தொகுதி' என்று அர்த்தம். பலவகையான கர்மங்களைச் செய்யுமளவில் பாடத் தக்க கீதங்களும், செய்யத்தக்க பிரார்த்தனைகளும் வேதத் தின் முதற்பகுதியாகிய ஸம்ஹிதை யென்பதில் தொகுத்து வைக்கப்பட்டிருக்கின்றன. அந்த ஸ்துதி கீத பிரார்த்தனை களுக்கு 'மந்திரங்கள்' எனப் பெயர். 'மந்திரம்' என்னும் சொல் 'மந்' (நினைத்தல்) என்னும் பகுதியடியாகப் பிறந் தது. ஏனெனில், ஆத்தும ஞானப் பெருக்கத்தின் பொருட்டு அவைகளின் பொருளைச் சிந்திக்கவேண்டும் என்பது கருத்து. யக்ஞ யாகாதிளில் பற்பல சமயங்களில் மந்திரங்களைச்

சொல்ல வேண்டி யிருக்கிறது. ஸோமரஸத்தைப் பிழியும் போதும், அதனை நிவேதிக்கும் போதும், தேவதைகளுக்கு நெய்யை ஹோமஞ் செய்யும் போதும், வேறுபல சந்தர்ப்பங் களிலும் மந்திரோச்சாரணஞ் செய்யவேண்டும்.

## இருக்கு வேதம்

இருக்குவேதம் என்பது துதிவடிவமான பாக்கள் நிறைந்தது. 'ரிச்' (=ஸ்துதி கீதம்) என்னும் பகுதியினின்றும் இருக்குவேதம் என்னும் பதம் உண்டாகியது. இதனில் அடங்கி யிருப்பன வெல்லாம் கீதங்களே.

## யஜுர் வேதம்

யஜுர் வேதத்து விஷயங்கள் வேள்விகளில் பிரயோகிக்கத் தக்கவரிசையில் அமைக்கப் பட்டிருக்கின்றன. ஆதலால், இது வேள்விப்பாக்கள் நிறைந்த வேதமாகும். இதன் பெயர் 'யஜ்' (=ஆராதித்தல்) என்னும் தாதுவினின்றும் பிறந்த 'யஜுஸ்' என வந்தது. அந்தத் தாதுவினின்றே 'யக்ஞம்' என்னுஞ் சொல்லும் பிறந்திருக்கிறது; வேள்விவடிவமான ஆராதனை என்பது அதன் பொருள். இந்த வேதம் இருவகையான பாடங்கொண்டது. அவைகளில் ஒருவகை கிருஷ்ண யஜுர் வேதம் (கறுப்பு யஜுர் வேதம்) எனப்படும். இதனை அனுசரிப்பவர்கள் தைத்திரீய சாகையினர். மற்றொரு பாடம் சுக்கிலயஜுர் வேதம் (வெள்ளை யஜுர் வேதம்) எனப்படும். இதனையனுசரிப்பவர்கள் வாஜஸநேயசாகையினர். யஜுர் வேதத்தில் இருக்குவேதத்திலுள்ள பாக்கள் மாத்திரமே யல்லாமல் உரைநடை வாக்கியங்களும் அடங்கியிருக்கின்றன.

### ஸாம வேதம்

ஸாம வேதத்திலுள்ள பாக்கள், 75-ஐத் தவிர மற்றவை யெல்லாம், இருக்கு வேதத்தினின்றும் எடுத்து, ஸோமயாகத்தில் அவைகளைப் பிரயோகிக்கும் முறையில் தொகுத்து வைக்கப் பட்டிருக்கின்றன. குறிப்பிட்ட சிலஇராகங்களிலேயே கானஞ் செய்வதற்கென ஏற்பட்டமையின், இந்த வேதம் கானக் கிரந்தமென வழங்கலாயிற்று.

### அதர்வ வேதம்

இருக்கு யஜுஸ் ஸாமம் என்னும் மூன்றும் 'வேதத்திரயம்' என்னும் சிறப்புப் பெயரால் வழங்கப் பெறும். அதர்வ வேதம் இந்தத் தொகுதியிற் சேர்க்கப்படவில்லை. ஏனெனில், வேள்விகளில் உபயோகிக்கத்தக்க கீதங்களெல்லாம் மேற் சொல்லிய மூன்று வேதங்களிலேயே அடங்கிப்போயின; அதர்வ வேதத்திலுள்ள கீதங்கள் பெரும்பாலும் இருக்கு வேதத்தினின்று எடுக்கப்பட்டவை. அதர்வ வேதமானது மற்ற வேதங்களைப்போ லல்லாமல் வேறுவிதமாய் அமைந்துள்ளது. இதனில் பிரபலமான மந்திரங்கள் பல அடங்கியிருக்கின்றன. அந்த மந்திரங்களை மனனஞ் செய்கிறவர்கள் அற்புத சக்திகளை யடைவார்கள்; அவற்றுள் மேம்பாடுள்ளனவாய சில மந்திரங்கள் முக்திநெறி பயக்கத்தக்கவை. இந்த வேதத்திற்குப் 'பிரம்மவேதம்' என்றும் பெயருண்டு. ஏனெனில், இதனிலுள்ள மந்திரங்கள் 'பிரம்மா'வினால் சொல்லத் தக்கவை. 'பிரம்மா' என்பவர் வேள்வி முழுமையுங் கண்காணித்து, ஹோத்திரி, அத்துவரியு, உத்காத்திரி என்பவர்களால் நிகழும் பிழைகளைத் திருத்தும் புரோகிதர். இதுவல்லாமல், பிரம்மதத்துவத்தையும், அதனை யடையத்தக்க வழிவகைகளையும் விவரித்துரைக்கும் முக்கியமான உபநிஷத்துக்

கள் பெரும்பாலும் இவ் வேதத்தின் அநுபந்தமா யிருப்ப தனால், இது 'பிரம்ம வேதம்' என வழங்கப்பெற்றது.

## வேள்வி விளைப்போர்

மேற்சொல்லிய நான்கு வேதங்களிலுமுள்ள ஸம்ஹிதை என்னும் பாகங்கள் யக்ஞ யாகாதிகளில் பிரயோகிக்கத்தக்க மந்திரங்களாகவும், யக்ஞ யாகாதி விவரணங்களாகவும் இருக்கின்றன. எவன் பொருள்தேடி யக்ஞம் செய்ய விரும்பி முன்நிற்கிறானோ அவன் 'யஜமானன்' எனப்படுவன். அவன் நான்கு புரோகிதர்களின் உதவியைக்கொண்டு அந்த யக்ஞத்தை நடப்பிக்கிறான். அந்தப் புரோகிதர்களாவார் :

1. ஹோத்திரி—அக்கினியில் ஹோமம் செய்கிறவர்.
2. அத்துவரியு—யக்ஞத்தை நடப்பிக்கும் நிருவாக கர்த்தர்.
3. உத்காத்திரி — ஹோத்திரியினால் ஆவாஹனஞ் செய்யப் பட்டு, அவர் அளிக்கும் ஆகுதியை ஏற்பதற்கு வந்த தேவதையை ஆராதிப்பதற்காக ஸ்துதி கீதங்களைப் படனம் செய்கிறவர்.
4. பிரம்மா—மேற்சொல்லிய மூன்று புரோகிதர்களின் காரியங்களை மேற் பார்ப்பவர்.

## யஜுர்வேத சங்கிதை

யஜமானனுக்காக வேலை செய்யும் இந் நான்கு புரோகிதர்களுள் பிரதானமானவர் அத்துவரியு. யக்ஞத்திற்கான ஏற்பாடுகளைக் கிரமமாக வமைத்து அதனை நடப்பிப்பவர் அவரே. அவர் யஜுர் வேதத்தை நன்றாக அத்தியயனஞ் செய்திருக்க வேண்டும். யக்ஞத்தில் அவர் செய்ய வேண்டிய காரியங்களைத் திறமையுடன் நிர்வகிப்பதற்கான விஷயங்களெல்லாம் இந்த வேதத்திற் சொல்லப்பட்டிருக்கின்றன. யக்ஞத்தின் அங்கங்கள், சாமக்கிரிகள், அவிஸு முதலியவைகளை ஆக்கும் விதம் முதலான விஷயங்களெல்லாம் இதனில் அட

ங்கி யிருக்கின்றன. பலிபீட மென்னும் வேதியை யமைக்கும் விதம், பலியிடத்தக்க பிராணியின் இலக்ஷணம், செங்கல் அகப்பை கம்பம் கயிறு ஆதியாக யாகத்திற்கு அவசியமா யுள்ள சாமக்கிரிகளைச் செய்யும் விதம்—ஆகிய இவைகளை யெல்லாம் யஜுர் வேதம் கற்பிக்கின்றது. அன்றியும், பற் பல சாமக்கிரிகளின் அதிதேவதைகளையும், யக்ஞபாகங்க ளுக்குரிய அதிதேவதைகளையும் ஆராதிப்பதற்கான ஸூக் தங்கள் இந்த வேதத்தில் அடங்கியிருக்கின்றன. இத் தகைய விஷயங்களெல்லாம் அடங்கியிருப்பதனால், யஜுர் வேதத்தை 'அத்துவரிய வேதம்' என்று வழங்குவது நியா யமே. இந்த வேதத்தின் ஸம்ஹிதை நாற்பது அத்தியாயங் கள் கொண்டது. அவைகளில் 1886 சுலோகங்கள் இருக் கின்றன. இந்தச் சுலோகங்களுள் ஏறக்குறைய பாதி இருக்கு வேதத்திலும் காணப்பெறும்.

## இருக்குவேத சங்கிதை

இருக்குவேத ஸம்ஹிதை 10 மண்டலங்கள் கொண் டது. இந்த மண்டலங்களில் 1017 ஸூக்தங்கள் அடங்கி யிருக்கின்றன. ஏதாவதொரு ஆகுதி கொடுக்கும்போது அதற்குரிய தேவதை யாகசாலைக்கு இறங்கி வந்து அவ் வாகுதியைப் பெற்றுத் திருப்தியடையுமாறு இருக்குவேத த்திலுள்ள ஒரு ஸூக்தத்தினால் ஹோதா (ஹோத்திரி) அந் தத் தேவதையை ஆவாகனஞ் செய்கிறான். வேறு வேறு தேவதைகளுக்கு வேறு வேறு ஸூக்தங்கள் ஏற்பட்டிருக் கின்றன. இவையல்லாமல் இவற்றினும் உயர்தரமான ஸூக் தங்களும் உண்டு. அவை பரமாத்மாவாகிய கடவுளின் பொரு ட்டு ஏற்பட்டவை. யாகாதிகளைக் குறிக்கும் இந்த வேத பாகம் கர்ம ஸம்பந்தமானதென்று சிலவேளை இகழப்படுவ

தாயினும், உயர் நோக்குடையவர்கள் பரமாத்மாவைப் பணிந்து உய்வதற்கான போதனைகளும் வழிவகைக் குறிப்புக்களும் இதனில் அடங்கி யிருக்கின்றன வென்பது இந்த ஸூக்தங்களினால் விளங்குகின்றது.

## ஸாமவேத சங்கிதை

ஸாமவேதம் என்னும் சொல்லுக்கு 'கானஞானம்' என்று அர்த்தம். இது ஸோம யாகத்தில் உத்காதாவானவன் உச்சரிக்கவேண்டிய மந்திரங்களடங்கியது. இந்த வேதம் 15 காண்டங்களுடையது. அவை 32 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றன. அந்த அத்தியாயங்களில் 460 கீதங்கள் அடங்கியிருக்கின்றன. இந்த வேதம் நான்கு பகுதிகள் கொண்டது: 1. பிரகிருதி, 2. உஹா, 3. இரஹஸியம், 4. ஆருணம். இந்த நான்கு பகுதிகளும் ஸ்வரத்தோடு கானஞ்செய்தற்கு ஏற்றவாறு அமைக்கப்பட்டிருக்கின்றன. இவை நான்கும் சேர்ந்ததே சாமவேதம் எனப்படுவது. எழுத்துப் பிரதிகளில் இந்த வேதத்து மந்திரங்களிலுள்ள சொற்களின்மீது, அவைகளின் ஸ்வரத்தைக் குறிப்பதற்காக எண்கள் இடப்பட்டிருக்கும்.

## அதர்வவேத சங்கிதை

இது பிரம்மவேதமென்று முன்னரே கூறியிருக்கின்றோம். இது 20 காண்டங்கள் கொண்டது; இவைகளிலுள்ள மந்திரங்கள் 731.

## பிராம்மணம்

வேதத்தின் முதற்பகுதியாகிய ஸம்ஹிதை அல்லது மந்திரம் என்பதைப்பற்றி இதுவரையிற் சொன்னோம். இனி இரண்டாம் பகுதியாகிய பிராம்மணங்களைப்பற்றி விசாரிப்போம். யாகம் செய்யும் முறைகளும், அதனிற் செய்யத்தக்க

கைவினைகளும், எளிதில் அர்த்தமாகாத சொற்கள் விதிகள் மந்திரங்கள் ஆகிய இவைகளின் பொருளும் இந்தப் பாகத்தில் விவரிக்கப்பட்டிருக்கின்றன. ஒருமந்திரத்திற்கும் அதனை யோதும்போது செய்யும் கிரியைக்கும் உள்ள சம்பந்தத்தைப் பிராம்மணங்கள் எடுத்துக் காட்டுகின்றன. அன்றியும், ஒரு காரியம் செய்வதனால் உண்டாகும் நற்பயன்களையும், நிஷேதமான வஸ்துக்களை உபயோகிப்பதனால் விளையத்தக்க தீப்பயன்களையும் இவை எடுத்துரைக்கின்றன; முறைப்படி செய்யும் கர்மத்தைத் துதித்து, முறைவழுவைக் கண்டிக்கின்றன. முறைப்படி இயற்றுகிறவனுக்கு விளையும் நற்பேறுகளையும், முறைப்படி செய்யாதவனுக்கு நேரும் தண்டனைகளையும் உதகரிப்பதற்காகப் பூர்வத்தில் பெரும்பயன் படைத்தவர்களின் கதைகளையும் தண்டனைக்குள்ளாகிக் கஷ்டப்பட்டவர்களின் கதைகளையும் பிராம்மணங்கள் கூறுகின்றன.

## விதியும் அர்த்தவாதமும்

இவ்வாறு பிராம்மணங்கள் என்பவை, பொதுவாகச் சொல்லுமிடத்து, ஸம்ஹிதையி லடங்கிய மந்திரங்களின் வியாக்கியானம் எனத் தகும். வேதங்களுக்குப் 'பிரம்மன்' என்றொரு பெயரும் உண்டு. பிரம்மத்தின் வியாக்கியானங்களாதலின் 'இவை 'பிராம்மணங்கள்' எனப்பட்டன. ஆராய்ந்து பார்க்குமிடத்துப் பிராம்மணங்களில் இரண்டு இலக்ஷணங்கள் இருக்கின்றன. சில இடங்களில் விதி ரூபமாகவும், சில இடங்களில் அர்த்தவாதமாகவும் இவை அமைந்திருக்கின்றன. விதிகள் என்பவை யாகக் கிரியைகளைச் செய்யும் வகைகளின் விவரமாகும். அர்த்தவாதங்கள் என்பவை மேற்சொல்லிய விதிகளின்படி தவறாமல் நடப்பதனால் விளையும் பெரும்பயன்களையும், அந்த விதிகளை மீறி நடப்பதனால்

ளையும் பெருங் கஷ்டங்களையும் தண்டனைகளையும் விவரிப் பனவாம். சம்பத்தை விரும்புகிறவன் வாயு தேவருக்கு வெள்ளாட்டைப் பலியிட வேண்டுமென்று சொல்வது விதி. விரைவில் மிக்கவர் வாயு தேவரானமையின் அவரை உத்தே சித்து யக்ஞபூர்வகமாக ஆராதிப்பதனால் நாம் விரும்பும் நற்பயன் விரைவில் வந்தெய்தும் என்று சொல்வது அர்த்த வாதம். மற்றும், யக்ஞசாலையில் உபயோகிக்கும் ஸ்தம்பத் தை*க் கருங்காலி மரக் கட்டையினால் அமைக்க வேண்டு மென்று சொல்வது விதியாகும். இந்த மரக் கட்டையினால் ஸ்தம்பம் செய்வித்து வேள்வி யியற்றித் தேவர்கள் சொர்க்க போக மடைந்தார்களென்று சொல்வது கதை. இப்போது யக்ஞஞ் செய்யும் யஜமானனும் இந்த மரக் கட்டையை உபயோகித்தால் சொர்க்க போகங்களைப் பெறுவான் என்று சொல்வது அர்த்தவாதமாகும்.

## ஆரணியகம்

பிராம்மணங்களின் கடைப்பகுதி விசித்திரமான புதிய வகையில் அமைந்துள்ளது. இந்தப் பகுதியின் உட்பிரிவுகளு க்கு 'ஆரணியகங்கள்' என்று பெயர். இவைகளில் பிரசித்த மான உபநிஷத்துக்கள் சில அடங்கியிருக்கின்றன. ஆரணிய கம் என்னுஞ் சொல்லுக்குக் "காட்டுப் பிரபந்தங்கள்' என்று அர்த்தம். இவை யக்ஞ யாகாதிகளை இனிச் செய்யமாட்டாத வர்களாய் ஒழிவுற்றுக் காட்டுக் கேகி வானப்பிரஸ்தர்களா யிருக்கும் பக்திமான்களின் உபயோகத்தின் பொருட்டு ஏற்பட்டனவாம். இவைகளிலடங்கிய விஷயங்கள் மிக உயர்தரமானவை, பவித்திரமானவை. ஆதலின், இவை

* பசுவைக் கட்டிவைக்கும் ஸ்தம்பம்; இது யூபஸ்தம்பம் எனப்படும்.

களை ஊர்களிற் சொல்லக்கூடாதென்று காடுகளில் தனிமையான ஆசிரமங்களில் ஆசிரியர் தம் சிஷ்யர்களுக்குக் கற்பிப்பர். உபநிஷத்தோடு கூடிய ஆரணியகங்கள் பிராம்மணங்கள் என்னும் பகுதியில் அடங்கியிருப்பதனால், வேதங்களை மந்திரங்களென்றும் பிராம்மணங்களென்றும் இரண்டு பெரும் பிரிவுகளாகவே பிரிக்கலாம்.

## உபநிஷத்துக்கள்

உபநிஷத்துக்கள் என்பவை ஒரு தனித் தொகுதி யெனச் சொல்வார்கள். ஏனெனில், கர்மகாண்ட மென்னும் மந்திரங்களும் பிராம்மணங்களும் கர்மத்தைப்பற்றி விவகரிக்கின்றன; உபநிஷத்துக்களோ கர்மத்தைப் பாராட்டாமல் பிரம்மதத்துவத்தையும், அதனை யடைவதற்கான வழிவகைகளையும்பற்றி விவகரிக்கின்றன. 'ஞானகாண்டம்' என்னும் தனித் தலைப்பின்கீழ் உபநிஷத்துக்களைப்பற்றி மற்றோரிடத்திற் சொல்லுவோம். ஆயினும், அவை பிராம்மணங்களிற் சேர்ந்திருப்பதனால், சில முக்கியமான உபநிஷத்துக்களை மாத்திரம் இங்குக் குறிப்பிடுவோம்.

## இருக்குவேதப் பிராம்மணம்

இருக்கு வேதத்தைச் சேர்ந்த பிராம்மணங்கள் இரண்டு உண்டு. அவை ஐதரேய பிராம்மணம், கௌஷீதகீ பிராம்மணம் எனப்படும். ஐதரேயப் பிராம்மணம் நாற்பது அத்தியாயங்கள் கொண்டது; அவை எட்டுப் 'பஞ்சிகை' களாகப் பிரிக்கப்பட்டுள்ளன. ஒவ்வொரு பஞ்சிகையிலும் ஐந்து அத்தியாயங்கள் அடங்கியிருக்கின்றன. இதில் முக்கியமாக விவரிக்கப்படுவது ஸோமயாகம். இதன் முதற் பகுதியில் ஒரே நாளிற் செய்யும் அக்கினிஷ்டோமம், 360 தினங்கள் நீடிக்கும் கவாமயனம், 12 நாட் காரியமாகிய துவாதசாஹம் என்

மும் யக்ஞங்கள் விவரிக்கப்பட்டிருக்கின்றன. இரண்டாம் பகுதி அக்கினி ஹோத்திரத்தையும், அதற்குச் சம்பந்தித்த விஷயங்களையும் கூறுகின்றது. கடைசிப் பகுதியில் அரசனுடைய பட்டாபிஷேகமும், இராஜ புரோகிதனுடைய நிலைமையும் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

கௌசீதிகீ பிராம்மணத்திற்கு ஸாங்காயனப் பிராம்மணம் என்றொரு பெயரும் உண்டு. ஐதரேயப் பிராம்மணத்தைப் போலவே இதனிலும் ஸோம யாகமே பிரதானமாகச் சொல்லப்பட்டிருக்கின்றது இதன் முதற்பகுதியில் 'அக்கினி யாதானம்' (ஹோமாக்கினி மூட்டல்), 'அக்கினிஹோத்திரம்' (தினந்தோறும் காலை மாலைகளிற் செய்யத்தக்க வேள்வி), பௌர்ணமியிலும் அமாவாசையிலும் செய்யத்தக்க இஷ்டிகள், மாதவாரியிற் செய்யும் நான்கு இஷ்டிகள் ஆகிய இவை விவரிக்கப்பட்டிருக்கின்றன. இந்தப் பிராம்மணத்தில் ஓர் ஆரணியகமும், கௌசீதிகீ யுபநிஷத்து என்னுமோர் உபநிஷத்தும் அடங்கியிருக்கின்றன. வேறு சில சில்லறை யுபநிஷத்துக்களும் இதனில் உண்டு.

## யஜுர்வேதப் பிராம்மணம்

கிருஷ்ண யஜுர் வேதத்திற்கு இரண்டு பாடங்கள் உள. அவை மைத்திராயணீய பாடம், தைத்திரீய பாடம் என்பனவாம். மைத்திராயணீய பாடத்திற்குப் பிராம்மணம் பிரத்தியேகமாக இல்லை. ஸம்ஹிதையின் இடையிடையேயுள்ள உரைநடையே அதற்குப் பிராம்மணமாகும். அவ்வாறு பிராம்மணமெனக் கருதத்தக்க உரைநடையல்லாமல் தைத்திரீயினிகளுக்குப் பிரத்தியேகமான பிராம்மணமும் ஒன்று உண்டு. அது தைத்திரீயப் பிராம்மணம் எனப்பெறும். அது மூன்று அத்தியாயங்கள் கொண்டது;

அதற்கு அநுபந்தமாகத் தைத்திரீய ஆரணியகம் ஒன்று உளது. அந்த ஆரணியகம் நான்கு அத்தியாயங்கள் கொண்டது. அந் நான்கு அத்தியாயங்களில் இரண்டு உபநிஷத்துக்கள் அடங்கியிருக்கின்றன. அவை தைத்திரீய உபநிஷத்து, மஹாநாராயண உபநிஷத்து என்பனவாம். மஹாநாராயண உபநிஷத்தை யாக்ஞிகீ உபநிஷத்து என்பார்கள்.

சுக்கில யஜுர் வேதத்திற்குப் பிரத்தியேகமாக ஒரு பெரிய பிராம்மணம் உண்டு. அதில் கர்மங்கள் மிக விவரமாகவும் விரிவாகவும் கூறப்பட்டிருக்கின்றன. அது சதபதப் பிராம்மணம் எனப்படும். அதாவது, ஒரு 'நூறு மார்க்கங்கள்' அடங்கியது. அதில் நூறு அத்தியாயங்கள் இருப்பதனால் அதற்கு இந்தப் பெயர் வந்தது. அதற்கு மாத்தியந்தின பாடம் என்றும், காண்வ பாடம் என்றும் இரண்டு பாடங்கள் உள. மாத்தியந்தின பாடம் 14 காண்டங்கள் கொண்டது, காண்வ பாடம் 17 காண்டங்கள் கொண்டது; அதில் கடைசிக் காண்டம் ஓர் ஆரணியகம். அவ் வாரணியகத்தின் கடைசி ஆறு அத்தியாயங்களும் சேர்ந்து பிருஹதாரணியக உபநிஷத்து ஆகும். இந்தப் பிராம்மணம் அறிவுக் களஞ்சியம் எனத் தகும். ஏனெனில், யக்ஞ யாகாதி கிரியைகளெல்லாம் இதில் தெளிவாகவும் ஒழுங்காகவும் விவரிக்கப்பட்டிருக்கின்றன; இதனுள் அடங்கியிருக்கும் உபநிஷத்தோ, தத்துவ விசாரணைக் கிரந்தங்களுள் மாணிக்கமெனத் தக்கது. சுக்கில யஜுர் வேதத்தின் கடைசி யத்தியாயம் ஈசோபநிஷத்து எனப்படும். இதுவல்லாமல், 17 சில்லறை யுபநிஷத்துக்கள் இந்தச் சுக்கில யஜுர் வேதத்திற்குச் சேர்ந்திருக்கின்றன.

## ஸாமவேதப் பிராம்மணம்

ஸாமவேதத்திற்கு இரண்டு பிராம்மணங்கள் இருக்கின் னை. அவைகளில் ஒன்று தண்டிசாகை என்றும், மற் றொன்று தலவகாரசாகை என்றுஞ் சொல்லப்படும். தலவ கார சாகையைச் சேர்ந்த பிராம்மணத்தில் கேனோபநிஷத்து அடங்கியிருக்கின்றது. பஞ்சவிம்சப் பிராம்மணமென்பது தண்டிசாகையினை ருடையது. அது 25 அத்தியாயங்கள் கொண்டதென்பது அதன் பெயரினாலேயே விளங்கும். அது ஸோமயாகத்தைப் பற்றிச் சொல்வது. சிறிய இஷ்டிகள் முதற்கொண்டு நூறு நாள் நீடிக்கத்தக்க யாகங்களும், அநேக ஆண்டுகள் நீடிக்கத்தக்க யாகங்களும் அதனில் விவரிக்கப்பட் டிருக்கின்றன. தண்டிசாகைக்கு மற்றோர் பிராம்மணமும் உண்டு. அது சாந்தோக்கியப் பிராம்மணம் எனப்படும். அந் தப் பிராம்மணத்தின் முதலிரண்டு அத்தியாயங்களில் ஜனன ஸம்பந்தமான கிரியைகள், விவாகக் கிரியைகள் முதலியன வும், தேவதாப் பிரார்த்தனைகளும் அடங்கியிருக்கின்றன. மற்றப் பத்து அத்தியாயங்களுஞ் சேர்ந்து சாந்தோக்கிய உபநிஷத்து எனப்படும். அநேக சில்லறை யுபநிஷத்துக்களும் ஸாம வேதத்தில் அடங்கியிருக்கின்றன.

## அதர்வவேதப் பிராம்மணம்

இந்தப் பிராம்மணத்தில் அநேக உபநிஷத்துக்கள் அட ங்கி யிருப்பதனால், இது விசேஷமானதென்று சொல்ல வேண்டும். அதர்வ வேதத்தைச் சேர்ந்தது கோபதப் பிராம் மணம். இது இரண்டு காண்டங்கள் உடையது. முதற் காண்டத்தில் 5 அத்தியாயங்களும், இரண்டாங் காண்டத் தில் 6 அத்தியாயங்களும் இருக்கின்றன. இதனில் அடங்கி

யிருக்கும் பல உபநிஷத்துக்களையும் புலர் பலவிதமாகச் சொல்லுகிறார்கள். அவைகளுள் பிரமாணமாகக் கொள்ளத் தக்கவை 27 உபநிஷத்துக்கள் என்னலாம். இந்த வேதத்தைச் சேர்ந்த பிரபல உபநிஷத்துக்களுள் முண்டகோபநிஷத்து, பிரசினோபநிஷத்து, மாண்டூக்கியோபநிஷத்து என்பன மூன்றும்.



# 3. கர்மகாண்டம்

## காண்டத் தொகுப்பு

வேதங்களை இதுவரையில் மந்திரம், பிராம்மணம், உபநிஷத்து என்னும் மூன்று பாகங்களாகப் பிரித்திருந்தோம். அப்படியல்லாமல் இப்பொழுது வேதங்களைக் கர்மகாண்டம் ஞானகாண்டம் என்னும் இரண்டு பெரும் பிரிவுகளாக்குவோம். இந்தப் பாகுபாடு அந்தந்தப் பகுதியின் நோக்கத்தை அனுசரித்துச் செய்ததாகும். சொர்க்காதி போகங்களை விரும்பி, அவைகளை யளிக்கத்தக்க கர்மங்களைச் செய்வதே கர்மகாண்டத்தின் நோக்கம். ஞானகாண்டத்தின் நோக்கமோ வெனின், அறிவைப் போதிப்பது. அறிவாவது பிரம்மஞானம். கர்மங்களை நீத்துத் துறவறமேற்கொண்டு அந்தப் பிரம்மஞானத்தை அடைய வேண்டுமென்பார் ஒருசார்பார்; ஈசுவரனுடைய ஊழியக்காரனாகக் கர்மங்களைச் செய்து, அவைகளை ஈசுவரார்ப்பணஞ் செய்வதனாலே பிரம்மஞானத்தைப் பெறலாமென்பார் மற்றொரு சார்பார். மந்திரங்களும் பிராம்மணங்களும் கர்மகாண்டத்திற் சேரும். உபநிஷத்துக்க ளனைத்தும் ஞானகாண்டம் எனப் பெறும். இப்பொழுது வேதங்களின் கர்மபாகங்களைப் பற்றிப் பேசுவோம்.

## கர்மம்

'கர்மம்' என்னும் சொல்லுக்கு 'வினை' (செய்கை) என்று அர்த்தம். வேதங்களில் விதிக்கப்பட்ட காரியங்களைக் குறிப்பதற்காக அந்தச் சொல்லை யுபயோகிக்கும்பொழுது அது ஸம்ஸ்காரங்கள், விதியுக்தமாகச் செய்யும் காரியங்கள் என்று அர்த்தமாகும். வினை அல்லது செய்கை என்னும் பொதுப் பெயரினால் மனிதன் செய்யத்தக்க காரியங்களெல்லாம் குறிக்கப் பெறும். வைதிக காரியங்களும் இலெளகிக காரியங்

களும் செய்கை என்னும் சொல்லில் அடங்கும். ஆத்மஞான பிவிருத்திக்கு இலெளகிக காரியங்களும் பெரிய சாதனங் களானதனாலே, பொதுப்படச் சொல்லுமிடத்து அவையுங் கர்மங்களே. இவ்விடத்தில் வைதிக கர்மங்கள் என்னும் அர்த்தத்திலேயே 'கர்மம்' என்னும் சொல்லை யுபயோகிப் போம்.

## கர்மங்களின் பாகுபாடு

இந்துக்களிற் பற்பல சாதியாரும் செய்யத்தக்க கர்மங் கள் மூன்று வகைப்படும்: 1. சிரௌத கர்மங்கள் — சுருதி அல்லது வேதத்தில் விதிக்கப்பட்ட காரியங்கள்; 2. ஸ்மார்த்த கர்மங்கள்—ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்ட சடங்குகள்; 3. ஆகம கர்மங்கள்—ஆகமங்கள் என்னும் தருமக் கிரந்தங் களில் விதிக்கப்பட்ட அனுஷ்டானங்கள். ஆகமங்கள் என் பவை ஸ்மிருதிகளுக்கும் புராணங்களுக்கும் இடைப்பட்ட நிலைமை வாய்ந்த பிரமாணக் கிரந்தங்களாகும். சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் விதிக்கப்பட்ட சடங்குகளையும் ஸம்ஸ்காரங் களையும் துவிஜர்கள் (இருபிறப்பாளர்) செய்யத்தக்கவர்க ளாவார்கள். துவிஜ ரல்லாதார் பெரும்பாலும் ஆகமத் தையே யனுசரித்து நடப்பவர்கள்; ஸ்மிருதிகளில் விதிக்கப் பட்ட கர்மங்களிற் சிலவற்றையும் இவர்கள் அனுஷ்டிக்கிறார் கள். ஆகம கர்மங்களிற் சில துவிஜர்களுக்கு மாத்திரமே உரி யன; மற்றவை எல்லாச் சாதியாராலும் ஆசரிக்கத்தக்கவை. இந்த ஆகமங்களினாலும் ஆழ்வாராசாரியர்களின் தமிழ்ப் பிர சங்கங்களினாலுமே துவிஜரல்லாதார் ஆத்மஞான சம்பந்த மாக உயர்பதவி யடைந்து அபிவிருத்தியாகி வருகிறார்கள்.

## சிரௌத ஸ்மார்த்த கர்மங்கள்

சுருதிகளிலும் ஸ்மிருதிகளிலும் விதிக்கப்பட்ட கர்மங் கள் துவிஜனுக்கு மிகவும் முக்கியமானவை. அந்தக் கர்மா

சரணை துவிஜத் தன்மைக்கு இன்றியமையாத தாகும். அந்தக் கர்மங்களை யெல்லாம் இரண்டு பெரும் பிரிவாகப் பிரிக்கலாம்: 1. நித்திய நைமித்திக கர்மங்கள், 2. காமிய கர்மங்கள். நித்திய கர்மங்கள் என்பவை தினந்தோறும் தவறாமல் கட்டாயமாகச் செய்யத்தக்கவை. நைமித்திக கர்மங்கள் என்பவை நிமித்தம் அல்லது சந்தர்ப்பம் நேர்ந்தபோது அவசியமாகச் செய்யத்தக்கவை; உதாரணமாக, கிரகண காலம், சூரியன் ஓர் இராசியினின்றும் மற்றோர் இராசியிற் பிரவேசிக்குங் காலம் ஆகிய இவை முதலான காலங்களிற் செய்யவேண்டிய காரியங்கள். இவ்வாறு அவசியமாகச் செய்யத்தக்க கர்மங்கள் பெரும்பாலும் அப்போதைக் கப்போது திரும்பத் திரும்பச் செய்யத் தக்கனவாம். அவை தினந்தோறும், பக்ஷந்தோறும், மாதந்தோறும், அயனந்தோறும், அல்லது ஆண்டுதோறும் துவிஜர்களெல்லாரும் செய்யவேண்டியனவாம்.

## காமிய கர்மங்கள்

காமிய கர்மங்கள் என்பவை அவரவருடைய இஷ்டத்தைப் பொறுத்துச் செய்யத்தக்கவை. இஷ்டமுள்ளவர்கள் அவைகளைச் செய்யலாம், இஷ்டமில்லாதவர்கள் செய்யாதொழியலாம். விசேஷ பிரயோசனத்தை யடையும் பொருட்டும், அதிகமான காரியங்களைச் செய்து ஈசுவரனுக்கு அர்ப்பணஞ் செய்யும் பொருட்டும் காமியகர்மங்களைச் செய்வார்கள்; உதாரணம்—புத்திரகாமேஷ்டி, சதுர்த்தி விரதம், கிருத்திகைவிரதம், வரலக்ஷ்மீவிரதம், அசுவத்தப் பிரதக்ஷிணம் முதலியனவாம்.

## சிரௌத கர்மம்

குறித்தகாலத்தில் திரும்பத் திரும்பச் செய்யவேண்டிய தல்லாத (ஸர்மயிக மல்லாத) கர்மம் மற்றொன்றுளது.

அது துவிஜத்தன்மையை நிலைநிறுத்துவதற்கு மிகவும் முக்கியமானது. அந்தக் கர்மம் ஸோமயாகம் எனப்படும். துவிஜனுக்கு மிகவும் முக்கியமானதென்று சுருதிகளில் விதிக்கப்பட்டிருக்கிற கர்மங்கள் 1. அக்கினி ஆதானம்—வைதிகாக்கினியை மூட்டும் முதற் சடங்கு, 2. அக்கினி ஹோத்திரம்—பருவ காலங்களிற் செய்யும் இஷ்டி, 3. ஸோமயாகம் என்பன. இவைகளைச் செய்யாதவன் துவிஜத் தன்மையினின்றும் இழிந்தவனாவன்—பதிதனாவன். வாஜபேயம், அசுவமேதம், ஸத்திரம் முதலான யாகங்கள் அவரவருடைய இஷ்டத்தைப் பொறுத்தன. அவை அநேக தினங்களும் ஆண்டுகளும் நீடிக்கும். இஷ்டமுள்ளவர்கள் அவைகளைச் செய்யலாம், இஷ்டமில்லாதவர்கள் விடலாம்.

## ஸ்மார்த்த கர்மம்

ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்டுள்ள பலவகைக் கர்மங்களுள் 1. ஸந்தியா வந்தனம்— காலை மாலைகளிற் செய்யும் தேவப்பிரார்த்தனை, 2. ஔபாஸனம்—கிருகஸ்தனுக்குரிய அக்கினியை ஆராதித்தல், 3. வைசுவ தேவம்— ஸமஸ்த தேவதைகளையும் ஆராதித்தல், 4. பிரம்ம யஜ்ஞம்—வேதங்கள், இருடிகள், தேவர்கள், பிதுருக்கள் ஆகிய இவர்களை ஆராதித்தல்—என்னுமிவை துவிஜத்தன்மைக்கு உரியவராகும் பொருட்டுத் தினந்தோறும் அவசியமாகச் செய்யத்தக்க கர்மங்களாகும். இவையல்லாதன வெல்லாம் இஷ்டானுசாரமாகச் செய்யத்தக்க ஸ்மிருதி கர்மங்கள்.

## சிரௌத ஸ்மார்த்த கர்மபேதம்

சுருதி கர்மத்திற்கும் ஸ்மிருதி கர்மத்திற்கும் உள்ள முக்கியமான வித்தியாசம் என்னவெனில், இன்ன கர்மத்தைச் செய்யவேண்டுமென்று நேரே சுருதியில் விதிக்கப்பட்

டிருப்பது சுருதி கர்மம்; ஸ்மிருதிகளில் விதிக்கப்பட்டிருப்பன ஸ்மிருதி கர்மம். இவ் விரண்டு கர்மங்களிலும் வேதமந்திரங்கள் பெரிதும் உபயோகிக்கப்படுகின்றன. ஆகையால், வேத விதியை யனுசரித்து நடக்கிறவன் இவ் விருவகைக் கர்மங்களையும் ஒரேமாதிரியாக மதித்துச் சிரத்தையுடன் செய்யவேண்டும். இவ் விரண்டிற்கு முள்ள வித்தியாசம் பெயர் மாத்திரத்திலே யாகும். சுருதியில் விதிக்கப்பட்டது அல்லது ஸ்மிருதியில் விதிக்கப்பட்டது என்பதில் வேற்றுமையே யொழிய முக்கியத்துவத்தில் வித்தியாசமில்லை. துவிஜன் செய்யும் கர்மம் எதுவாயினும், அதற்கென இருடிகளினால் குறிப்பிடப்பட்டிருக்கிற வேதமந்திரங்களை உச்சரிப்பதனாலேயே அந்தக் கர்மத்திற்குப் பிரயோஜனம் ஏற்படும். அந்தக் கர்மத்தினால் ஆராதிக்கவேண்டிய தேவதைகளைத் திருப்திப்படுத்துவதற்கு இன்ன மந்திரங்களையே சொல்ல வேண்டுமென்று இருடிகள் விதித்திருக்கிறார்கள். இவ்வாறு எல்லாக் கர்மங்களுக்கும் வேதமந்திரோச்சாரணத்தினாலே யே உயிரும், சக்தியும், பிரபாவமும் உண்டாகின்றன. ஆகையால், வேதமந்திரங்களே எல்லாக் கர்மங்களுக்கும் பிராணாதாரம், அல்லது ஜீவாதாரம் எனத்தகும். இந்த மந்திரங்களும், மந்திரங்களை உபயோகிக்க வேண்டிய விதிகளும், விதிகளைத் தழுவிய கர்மங்களின் விவரங்களும் அடங்கிய வேதப்பகுதி "கர்மகாண்டம்" எனப்பட்டது.

## யஜ்ஞ (யாக) கர்மம்

இந்து வாலிபர்கள் தம் இல்லங்களில் தினந்தோறுமாவது சிலநாளைக் கொரு தடவையாவது செய்யப்பெறும் கர்மங்களைப் பார்த்திருக்கக் கூடும். ஆனால், அந்தக் கர்மங்களின் கருத்து என்ன, பிரயோஜனம் என்ன என்று அவர்கள் தெரிந்திருக்கமாட்டார்கள். அந்தக் கர்மங்களை யெல்லாம்

இவ்விடத்தில் எடுத்துரைப்பதற்கு இடங் காணாது. ஆதலால், மாதிரி இன்னதென்று தெரியும் பொருட்டு ஒரு யஜ்ஞத்திற் செய்யுங் காரியங்களைச் சுருக்கமாக எடுத்துரைப்போம். அந்தக் காரியங்களைச் செய்யும் வகை இந்நாட் சிறுவர்கள் பெரும்பாலார்க்குத் தெரியாது; அவைகளின் அர்த்தம் தெரியாதென்று சொல்லவேண்டியதே இல்லை. யஜ்ஞம் அல்லது யாகம் என்பது நன்கு அமைக்கப்பட்டதொரு பெரிய காரியம். அதனில் எல்லாப் பாகங்களும் ஒழுங்காக நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன; ஒவ்வோர் அமிசமும் வெகு ஜாக்கிரதையாகக் கவனிக்கப்படுகின்றது. யாகம் நடப்பதை உற்றுப் பார்த்தால், அதனில் ஒவ்வோர் அங்கமும், ஒவ்வோர் அமிசமும் முறை பிறழாமல் ஒன்றுக்கொன்று அனுகுணமாக ஒழுங்காக நடைபெறுவது புலப்படும். கவனித்துப் பார்க்காவிட்டால் அது பெரிய சிக்குமுக்கான விவகாரமென்று தோன்றும்.

### "யஜ்ஞம்"

'யஜ்ஞம்' (யாகம்) என்னும் சொல்லுக்கு 'ஆராதனை' என்று அர்த்தம். யஜ்ஞம் செய்வதில் பரமேசுவரனைப் பல்வேறு தேவதை வடிவமாக ஆவாகனஞ் செய்து ஆராதிக்கிறார்கள். ஏனெனில், தேவதைகளெனப்படுகிறவர்கள் பரமேசுவரனுடைய வியக்திகளே *யென்று வேதங்கள் கூறுகின்றன. இவ்வாறு ஆராதிக்கப்பெறும் தேவதை ஒவ்வொருவரும் பரமேசுவரனே யானமையினாலும், யஜ்ஞத்தில் முதலிலிருந்து கடைசிவரையில் அதே பரமேசுவரனையே ஆவாகனஞ் செய்து ஆராதிப்பதனாலும் யாகம் அல்லது யஜ்ஞம் என்பது "பரமேசுவரன்" என்பதற்குப் பிரதிபதமாகவே

* வியக்திகள்—ஸ்வரூபங்கள், visible manifestations, specific appearances.

ழங்கப் பெறலாயிற்று. இந்த அர்த்தத்திலேயே, "யஜ்ஞத்தினால் தேவர்கள் யஜ்ஞத்தை ஆராதித்தார்கள்" என்று ருஷ ஸூக்தம் கூறுகின்றது. அதாவது, யஜ்ஞவடிவமான விஷ்ணுபகவானைத் தேவர்கள் யஜ்ஞ கர்மத்தினால் ஆராதித்தார்கள் என்பதாம். வேதத்தின் மற்றோர் பகுதியில் யஜ்ஞமே விஷ்ணு என்று சாற்றப்பட் டிருக்கின்றது. யஜ்ஞம் என்னும் சொல்லுக்குப் பலி, பரித்தியாகம், ஸமர்ப்பணம், விநியோகம் (Sacrifice) என்று அர்த்தஞ் சொல்வது சரி யன்று. அந்த அர்த்தத்திலேயே மேனாட்டுப் புலவர்கள் யஜ்ஞத்தைத் தெரிந்துகொண்டிருக்கிறார்கள். யஜ்ஞத்தின் முக்கியமான அம்சமாகிய ஆராதனையைப் பாராட்டாமல் அவர்கள் புறக்கணித்தார்கள். யக்ஞம் நடைபெறு மளவில் இடப்படுகிற உயிர்ப் பலிகளை மாத்திர மெண்ணி அவர்கள் இவ்வாறு யஜ்ஞமென்பது பலியிடுங் காரியமென்று தவறாகப் பொதுப்பட அர்த்தஞ் செய்துகொள்ள லானார்கள். உயிர்ப் பலிகள் கொடுப்பது உண்மையே; யஜ்ஞஞ் செய்கிற யஜமானனும் அநேக பெரும் பரித்தியாகங்கள் செய்ய வேண்டிய வனா யிருக்கிறான். ஆனால், இவை யெல்லாம் ஆராதனையின் பொருட்டேயாம். ஆகையால், யஜ்ஞத்தில் முக்கியமான அம்சம் ஆராதனையே யல்லாமல் பலியிடுவதன்று. யாகமென்னும் வடமொழிச் சொல்லுக்கு ஆங்கிலத்தில் 'ஸாக்கிரிபைஸ்' (Sacrifice) என்பதைப் பரியாய பதமாக நெடுங் காலமாய் ஆங்கில நூல்களில் வழங்கி வந்திருக்கிறார்க ளாதலால், அது சரியான பதமாகாவிட்டாலும், அதையே நாமும் வழங்கவேண்டியதா யிருக்கின்றது.

### ஸோம யாகம்

பூர்வத்தவர் செய்துவந்த யாகங்கள் மிகுபான்மை சிரம சாத்தியமாயும் அநேக அங்கங்கள் சேர்ந்து சிக்குள்ளனவாயு மிருந்தன. அவைகளில் இப்பொழுது ஸோமயாகம் என்னும் ஒன்றை விவரிப்போம். மற்ற யாகங்கள் பெரும்பாலும் இதைப் போன்றனவே யாகும். இந்த யாகத்தைச் செய்யாவிட்டால் எவர்க்கும் நிஜமான துவிஜத்தன்மை ஏற்படாதென்று வேதங்கள் சொல்லி யிருக்கின்றன. ஆதலால், இந்த யாகத்தையே உதாரணமாகக் கொள்வோம்.

யாகசாலை

ஸோமயாகம் என்பது இமயமலைப் பிரதேசங்களில் கிடைக்கக்கூடிய ஸோமம் என்னுமொரு கொடியின் இரஸத்தைப் பிழிந்து தேவர்களுக்கு அர்ப்பணம் பண்ணிப் பின்னர்க் குடிப்பதே முக்கிய காரியமாகவுள்ள ஆராதனை. அந்தக் கொடி நமது நாட்டிற் பயிராவதில்லை யாதலால் அதற்குப் பிரதியாக நம்மவர்கள் வேறு கொடியை யுபயோகிக்கிறார்கள். இது தோற்றத்திலும் சுவையிலும் பயனிலும் ஸோம லதையைப் போன்றதே யென்று யாகாதிகளிற் பழக்கமுள்ளவர்கள் சொல்லுகின்றார்கள். தாற்காலிகமாக ஒரு பெரிய கொட்டகை போடுவார்கள். அதற்கு 'யாகசாலை' என்று பெயர். யஜ்ஞம் செய்வதற்கு வேண்டிய சாமக்கிரிகளெல்லாம் அதனில் நிரம்பி யிருக்கும். யாகசாலையில் பலிபீடமென்னும் மேடைகள் அமைக்கப்பட்டிருக்கும். அவைகளுக்கு 'வேதிகள்' என்று பெயர். சில யாகங்களில் அவை மிகச் சித்திர விசித்திரமாக அமைக்கப்பட்டிருக்கும்; சிக்கலான க்ஷேத்திரகணித வரிவடிவங்களைப் போன்று இருக்கும். இந்த வேதிகளை யமைக்கும் வித்தை

பினின்றே க்ஷேத்திர கணித சாஸ்திரம் கண்டுபிடிக்கப்பட்டதென்று நினைக்கிறார்கள்.

யஜமானனும் பத்தினியும்

ஸோமயாகம் ஐந்து தினங்கள் நீடிக்கத் தக்கது. எவன் யாகம் செய்ய விரும்பி மேற்கொள்கிறானோ அவன் 'யஜமானன்' எனப்படுவன். ஆராதிக்கிறவன் அவனே. யாகம் செய்வதில் அவனுக்குச் சககாரியாயிருக்கும் மனைவிக்குப் 'பத்தினி' என்று பெயர். யஜமானனும் அவனுடைய பத்தினியும் மேற்சொல்லிய ஐந்து தினங்கள் பரியங்கம் அன்னாஹாரம் முதலிய தேக போஷணைக் குரிய சௌகரியங்களை முற்றுந் துறந்து கடுமையான உபவாஸம் செய்யவேண்டும். அவ்வாறு பட்டினி யிருக்க வேண்டியதை யெண்ணி யஜமானனும் அவனுடைய பத்தினியும் யாகசாலையில் பிரவேசிக்குமுன் ஸம்பிரமமான போசனமளிக்கப்பெறுவார்கள். யாகத்தின் முதல் தினத்தன்று அவர்கள் ஒரு சாமானிய பசுவின் ஒரு முலைக் காம்பினின்று பீர்ச்சக் கூடியவளவு பாலைமாத்திரம் ஆஹாரமாக வுட்கொள்ளக் கடவர். அதன் பின்பு அவர்கள் நாளுக்கு நாள் பசுவின் பால் அதிகமாகக் குடிக்கலாம். இப்படி முதல் மூன்று நாளும் செய்யவேண்டியது. ஐந்தாம் நாள் கடைசியாக ஸ்நானம் செய்தபிறகு அவர்கள் வழக்கமானவளவு உணவு அருந்தலாம். அந்த ஸ்நானத்திற்கு 'அவபிருதம்'* என்று பெயர்.

சாலையிற் பிரவேசிக்கு முன்னர் யஜமானன் க்ஷௌரம் பண்ணிக்கொண்டு ஸ்நானஞ் செய்யவேண்டும்; அதன்பின்பு அவன் புத்தாடை யுடுத்து, மான்றோலை யுங்கவஸ்திரமாகத் தரித்துக்கொள்ளவேண்டும். இரவில் அந்தத் தோலின்மீதே யாகசாலையில் படுத்துறங்கவேண்டும்; மிகவும் அவசியமா

---

* அவபிருதம்—வேள்வி முடிவிற் செய்யும் ஸ்நானம்.

யுள்ள காலத்திற்கு அதிகமாக உறங்கக்கூடாது. அவன் தலைப் பாகை தரித்து, கையில் தண்ட மொன்றை யேந்திக்கொள்ள வேண்டும்; அருவருப்புண்டாக்கத்தக்கவாறு தினவு முதலிய உணர்ச்சி தேகத்தி லெழுந்தால் சொறிந்து அதனைத் தணித்துக்கொள்ளும் பொருட்டு அவன் ஒரு மான் கொம்பை வைத்துக்கொள்ளவேண்டும். அவன் கையினால் உடம்பைச் சொறிந்துகொள்ளக்கூடாது. யாகந் தொடங்குமுன்னர்ப் பத்தினியானவள் தன் கை நகங்களைக் கத்தரித்துக் கொள்ளவேண்டும்; கணவனுடன் 'பிராதமிக ஸ்நானம்'(ஆரம்பஸ்நானம்) செய்து, புத்தாடை யுடுத்துச் சிரஸின் ஒரு புறத்தில் தொங்கி நிற்கத்தக்க பொன்னணி யொன்று தரிக்க வேண்டும். அது பதக்கம்போன் றிருக்கும்.

**புரோகிதர்கள்**

யஜ்ஞம் செய்கிறேனென்று யஜமானன் பண்ணும் சங்கற்பத்திற்கு 'தீக்ஷை' என்று பெயர். அந்தத் தீக்ஷைக்கு முன்னால் யஜமானன் ஒரு மனிதனை யனுப்பி யஜ்ஞஞ் செய்யும் தன் உத்தேசத்தை மற்றவர்களுக்குத் தெரிவித்து, தனக்காக யஜ்ஞ காரியத்தை நிறைவேற்றத் தக்க புரோகிதர்களை யழைப்பிக்கவேண்டும். அப்படிப் போ யழைக்கிறவனுக்கு 'ஸோமப்பிரவாகன்' (ஸோமத்தை வசனிக்கிறவன்) என்று பெயர். யாகஞ் செய்வதற்கான விதிகளடங்கிய நூலுக்குச் 'சிரௌத ஸூத்திரங்கள்' என்று பெயர். மேற்சொல்லியவாறு அனுப்பும் தூதனைப் பார்த்து யஜமானன், "ஸோமப் பிரவாக! புரோகிதர்களுக்கு என் கருத்தை யறிவித்து என்பொருட்டு அவர்களை யழை" என்று கூற வேண்டுமெனச் சிரௌத ஸூத்திரங்கள் விதிக்கின்றன. இந்தக் கட்டளையைப் பெற்று ஸோமப்பிரவாகன் அத்துவரியுவினிடம் போய், "ஆரிய! திருவையாறு அனந்தாசிரியரின் கும

ரர் பஞ்சாபகேசகனபாடி என்பவர் ஸோமயாகம் செய்கிறார். தாங்கள் அவர் பொருட்டு அத்துவரியுவின் ஸ்தானத்தை வகிக்கவேண்டுமென்று பிரார்த்திக்கிறார்" என்று அறிவிப்பான். இவ்வாறு அத்துவரியு ஸ்தானத்திற்கு வரிக்கப்பெற்றவர் தமக்குத் தக்ஷிணை எவ்வளவு கிடைக்கக் கூடுமென்று வினவ, 21 பசுக்கள் அளிக்கப்படு மென்று ஸோமப்பிரவாகன் சொல்லுவான். பின்னர், "முதன் முதலில் அக்கினியாதானம் செய்தபோது எழுந்தருளியிருந்த புரோகிதர்கள் யாவர்? எம்மை இப்போது அழைக்குமுன் வேறு எவரையேனும் இந்த ஸ்தானத்திற்கு வரித்து விலக்கியதுண்டோ?" என அத்துவரியுவாவார் ஸோமப்பிரவாகனை வினவித் தெரிந்து கொள்வார். இவ்வாறு, யஜமானன் நன்னடக்கை யுள்ளவன், யோக்கியர்களுடைய ஸஹவாஸமே செய்பவன், புரோகிதர்களை வரித்துப் பின்னர்த் தன் மனம்போல விலக்குகிறவ னல்லன் என்று விசாரித்துத் தெளிந்தபின்பே அவர் அத்துவரியுவா யிருக்க இசைவர்.

குணசோதனம்

மேற்சொல்லிய விருத்தாந்தத்தால் முன்னாளில் மனிதனுடைய யோக்கியதையை எவ்வளவு முக்கியமாகக் கவனித்தார்கள் என்பதும், விலையுயர்ந்த வெகுமதிகளாயினும் அயோக்கியனால் அளிக்கப்படுமானால் அவைகளை எவரும் இகழ்ந்துவெறுத்து வந்தார்களென்பதும் நமக்குத் தெளிவாகத் தெரிகின்றன. எவன் நிமித்தம் யாகம் செய்யும்படி அழைக்கிறார்களோ அவன் பெருந் தகைமையும் நற்குணமும் இல்லாதவனென்று தெரிந்தால், அப்படிப்பட்டவனுடைய வேண்டுகோளைப் புரோகிதர்கள் கண்டிதமாக மறுத்து வந்தார்கள். வைதிகர்களுக்கு அவ்வளவு நீதி நிர்ணயமும் தைரியமும் இருந்தன. மனோபலம் மாத்திரமே யல்லாமல் அவர்

வருக்கு அபிமானேற்சாகமும் இருந்தது. நல்ல காரியத்தைப் பாலிக்கும் விஷயத்தில் வைதிகர்கள் எல்லாரும் ஒருமித்து உற்சாகங் கொண்டு எழுந் தன்மையுடையவர்களாயிருந்தார்கள். ஆனதனல் தீச்செயல் செய்வதற்கு மற்றவர்கள் அஞ்சிக்கொண்டிருந்தார்கள். அநீதியையும் துராசாரத்தையும் பொருமல் வைதிகர்கள் தைரியமாக வெளிப்படுத்திக் கண்டித்ததனல் அவ்வாறு தவறினவனுக்கு ஜனுபவாதம் ஏற்படுமென்னும் அச்சம் உண்டாகியது. அதுகாரணமாக ஜன சமூகத்தில் எந்த அந்தஸ்தில் உள்ளவர்களும் நீதி நியாயங்களைப் பாராட்டி ஒழுங்காகவே நடந்துவந்தார்கள். இந் நாளிலோ, அந்த வைதிக குலம் சீர்கெட்டு இழிவுற்றுச் சுதந்திர மற்றுப் பரதந்திரத்திற்குள்ளானமையின், ஆசார விவகாரங்களிலும் நீதி நியமங்களிலும் இருந்த கட்டுத் திட்டங்கள் பற்பல வகைகளிலும் தளர்ந்து குலைந்துபோயின; ஜனுபவாதத்தைப் பொருட்படுத்துவாரில்லை. நமது வைதிக நண்பர்கள் பெருமனங் கொண்டவர்களாகிப் பக்ஷபாதமில்லாமல், பிறரைச் சாராமல் சுதந்திரர்களாய், நியாயமாக விவகரிக்கத் தலைப்பட்டு ஜனுபிப்பிராயத்திற்குரிய மரியாதையையும் பெருந்தகைமையையும் நிலைப்பிப்பார்களாக. அப்படிப்பட்ட யோக்கியதை யுடைய வைதிகர்களும் புரோகிதர்களுமே சரியான இந்து தர்ம பரிபாலகர்களாவார்கள். இது நிற்க :

**யாகாரம்பப் பிரவேசமும் நிலையும்**

யஜமானன் தகுந்த யோக்கியனே யென்று திருப்திகரமாகத் தெரிந்தால் அத்துவரியுவானவர் அந்த யாகத்தை நடப்பிப்பதற்கு இசைந்து, மற்றப் புரோகிதர்களைத் தேடும்படி ஸேவகப்பிரவகைனுக்குச் சொல்லுகிருர். இவரை வேண்டிக்கொண்ட வண்ணமே மற்றவர்களை ஸோமப்பிரவாகன் பிரார்த்தித்து

வரிக்கிறன். யாத்திரை நடத்தும் முக்கியமான அதி காரிகள் அத்துவரியு, ஹோதா, உத்காதா, பிரம்மா என்னும் நால்வராவர். இவர்கள் ஒவ்வொருவருக்கும் சகாயிகள் மூவர் உண்டு. இவர்களல்லாமல் 'ஸதஸ்யர்' என்னும் ஓர் அதிகப்படி புரோகிதரையும் நியமிப்பார்கள். யாக காரியங் களை யெல்லாம் மேற்பார்வை பார்ப்பது இவருடைய வேலை யாகும். இவ்வாறு 17 சிரௌதிகள் சேர்ந்து யாகத்தை நடத் துவார்கள். இவர்களெல்லாரும் தத்தம் காரியங்களை மேற் கொள்வதற்குச் சித்தமானவுடனே யஜமானனையும் அவ னுடைய பத்தினியையும் விதியுக்தமாக யாகசாலைக்கு அழை த்து வருவார்கள். அந்தக் காரியத்திற்கு 'சாலாப்பிரவேசம்' என்று பெயர். பின்பு, அந்தத் தம்பதிகளிருவரும் முறைப் படி யஜ்ஞ ஸங்கல்பம் செய்வார்கள். இதற்கு 'தீக்ஷை' என்று பெயர். இந்த தீக்ஷை மேற்கொண்ட தினத்திலிருந்து யாகம் பூர்த்தியாகிறவரையில் யஜமானனும் அவனுடைய பத்தினியும் ஸ்நானஞ் செய்யக்கூடாது, பல்லுந் தேய்க்கக் கூடாது, அற்ப க்ஷீராஹாரத்தினால் ஜீவிக்கவேண்டும், இரவில் மிகவும் அவசியமான காலத்திற் கதிகம் தூங்கக் கூடாது.

யாகத்திற்குப் பூர்வாங்கமாகிய யாக சாலாப் பிரவே சமும் தீக்ஷையும் முதல் தினத்தில் நடக்குங் காரியங்களாம். இரண்டாந் தினத்தில் 'பிரவர்க்கியம்' அசுர கீரோதம் என்னுமொரு சடங்கு செய்வார்கள். இது யாகத்திற்கு உயிர்க்களை யூட்டும் கிரியையாம். இந்தக் கிரியையினால் யாகம் என்பது விஷ்ணு வின் மற்றோர் வடிவமென்று நாம் தெரிந்துகொள்கின்றோம்.

ஏதேனுமொரு நற்காரியஞ் செய்யப் பிரயத்தனப்படு மிடத்து அதற் கெதிரிடையான தீமை யொன்று எவ்வடிவத்

திலேனும் சித்தமாயிருக்கு மென்பது இயற்கைப் பொது விதி. நன்மை யுண்டெனின், தீமை உடனிகழ்ந்தே யிருந்து எவ்விதமாகவேனும் தலைகாட்டும். நன்மை செய்கிறவனைத் தடுத்து மயக்கித்தீயவழியில் செலுத்துவதற்கு அது எப்பொழுதும் காத்துக்கொண்டேயிருக்கும். ஆசைக்கிடங் கொடுத்து அப்படிப்பட்ட அக்கிரமங்களிலும் அநீதிகளிலும் பிரவர்த்திக்காமல் ஒரு நிலையாய், ஒரு மனமாய், விடாப் பிடியாய்ப் போராடி வெல்வதனாலேயே ஒருவனுடைய திறமை வெளிப்படும். அதுவே பெருந் தகைமை. இவ் வுண்மை யஜ்ஞ காரியங்களில் பெரிதும் விளக்கமுறுகின்றது. ஈசுவரனை ஆராதிப்பதற்காகச் சிரத்தையோடு சங்கற்பஞ் செய்து யஜ்ஞ காரியத்தைத் தொடங்கிய வுடனே அசுரர்கள் என்னும் துராத்துமாக்கள் ஒருங்கு சேர்ந்து ஓடி வருகிறார்கள் தேவர்களுக்கெனச் சமர்ப்பிக்கும் ஆகுதிகளைப் பறித்தெடுத்துக் கொண்டுபோக வேண்டுமென்று ஆவல் மிகுந்து ஆதாரத்தோடு அசுரர்கள் வருகிறார்கள். இந்த துராத்துமாக்கள் யாகசாலைக்குள் வாராமல் தடுத்து, இவர்களை யோட்டும் பொருட்டு இரண்டாம் தினத்தன்று 'உபஸத்' என்னும் கிரியையுஞ் செய்யப்படுகின்றது. யஜ்ஞம் நடக்குமளவும் இடைஞ்சல் வராமல் காக்கும்பொருட்டு இந்தக் கிரியையைப் பொதுப்படச் செய்வதல்லாமல், ஒவ்வொரு ஹோமஞ் செய்யும் பொழுதும் அசுரர்கள் அணுகாவண்ணம் ஒரு பீஜாக்ஷரத்தை உச்சரிப்பார்கள்.

ஹோமக்கிரமம் அத்துவரியுவாக இருப்பவர் யஜுர் வேதத்தை நன்றாகப் பயின்றவரா யிருப்பர். யஜ்ஞகாரியத்தின் நுட்பமான அமிசம் ஒவ்வொன்றும் அவருக்குத் தெரிந்திருக்கும். ஒரு ஹோமம் செய்த பிறகு, அதற்கு அடுத்தபடியாக என்ன

ஹோமம் செய்யப்பெறவேண்டு மென்று தெரிந்து அவர் ஹோதாவைப் பார்த்து, "இனி இந்த ஹோமத்திற்குரிய தேவதையை நீர் ஆவாஹனஞ் செய்வீராக" என்றறைவார். இவ் வுத்தரவு பிறந்தவுடனே அவ் வாகுதியைக் கைப் பற்றிக்கொள்ளுங் கருத்துக் கொண்டு துஷ்டர்களாகிய அசுரர்கள் அணுகுவார்கள். அவர்களை வெருட்டி விலக்கும் பொருட்டு 'அக்கினிதான்' என்னும் புரோகிதர் ஒரு பீஜாக்ஷரத்தை யுச்சரிப்பார். இருக்குவேதத்தை நன்றாக அத்தியயனஞ் செய்துள்ள ஹோதாவானவர் ஆவாஹிக்கப் பெறும் தேவதையின் ஸ்தோத்திரமாயுள்ள மந்திரத்தைச் சொல்லி ஹோமஞ் செய்வார். இந்தக் காரியத்தை யடுத்தும் அசுரர்களை யகற்றும் பொருட்டு மற்றொரு பீஜாக்ஷரம் முன்போல ஜபிக்கப்பெறும்.

யாகம் நடக்குங் காலமெல்லாம் ஸாமவேதிகளாகிய உத்காதாவும், அவருக்கு உதவியாயுள்ள மூவர்களும், காலையிலேயே வயிறார உண்டு, தம்முடைய சௌகரியங்களை யெல்லாம் கிரமமாகவும் கவனமாகவும் அமைத்துக்கொண்டு, சுகந்த புஷ்பாதிகளினால் அலங்கரிக்கப்பெற்றவர்களாய் யாக சாலைக்கு அவ்வப்போது வந்து போய்க்கொண் டிருக்கும் தேவதைகளின் ஸ்தோத்திரமாயுள்ள ஸூக்தங்களையும் பிரார்த்தனைகளையும் படனஞ் செய்துகொண் டிருப்பார்கள். மற்றப் புரோகிதர்களெல்லாரும் அந்தத்தினத்து யஜ்ஞ காரியம் பூர்த்தியாகிறவரையில் அன்னம் புசிக்கலாகாது.

மூன்றாந் தினத்தில் 'மத்தியமோபஸத்' என்னும் கிரியையும், பலிபீடங்களென்னும் யஜ்ஞவேதிகளை விதிபூர்வமாகத் திறக்குங் காரியமும் நடைபெறும்.

பசுமேதம்

மத்திய மோபஸத் என்பது அசுரர்களை யகற்றி யோட்டும் பொருட்டு

யாகத்தினிடையிற் செய்யப்பெறும் ஆராதனமாகும். யாகத்தின் நான்காந் தினமும் ஐந்தாந் தினமும் மிக முக்கியமானவைகளாகும். அந்தத் தினங்களில் தேவதைகளுக்கு உயிர்ப் பலிகள் கொடுக்கப்பெறும். நான்காந் தினத்தில் மூன்று பசுக்களை*ப் பலியிடுவார்கள். அவைகளில் ஒன்று அக்கினியின் பொருட்டும் ஸோமனின் பொருட்டுமாகும்; மற்றொன்று துவிஜத்தன்மையிலுள்ள மலினத்தைப் போக்குவதற்காக அசுவினி தேவர்களின் பொருட்டாகும்; மூன்றாவது, யஜமானனுடைய குடும்பத்தில் மூன்று தலை முறையாக ஸோம யாகம் செய்யாதொழிந்திருந்தால் அதற்குப் பிராயச்சித்தார்த்தமாகும். ஏனெனில், மூன்று தலை முறை ஸோம யாகம் செய்யாத குடும்பத்தவர்கள் துவிஜத் தன்மையினின்றும் இழிந்தவர்களாவார்களென்று சாஸ்திரங்களிற் சொல்லப்பட்டிருக்கின்றது. இந்த மூன்றும் பசுவானது யஜ்ஞத்தில் ஆராதிக்கப் பெறும் முக்கிய தேவதைகளாகிய இந்திரனுக்கும் அக்கினிக்கும் அளிக்கப்படும்.

யாகத்தின் கடைசித் தினமாகிய ஐந்தாம் நாள் 'ஸுத்தியாஹஸ்' எனப்படும். அன்றைத்தினம் ஸோமரஸத்தைப் பிழிந்து தேவார்ப்பணஞ் செய்து பானம் பண்ணுவார்கள்.* அன்றைக் காலையிலும் நடுப்பகலிலும் மாலையிலும் ஆக மூன்று காலங்களிலும் கிரியைகள் செய்வார்கள். அந்தக் கிரியைகளுக்கு 'ஸவனங்கள்' என்று பெயர். கடைசித் தினத்துக் கிரியைகளுள் முதன்முதலாக அக்கினி தேவருக்கு ஒரு பசுவைப் பலியிடுவார்கள். அன்றைப் பொழுது முடிவில் யஜமானனும் அவனுடைய பத்தினியும் ஸ்நானஞ் செய்

ஸோமபானம்

* இங்கே பசுக்களென்பன வெள்ளாடுகள்.

வார்கள். அந்த ஸ்நானத்திற்கு 'அவபிருதம்' என்று பெயர். அந்த ஸ்நானத்தினால் அவர்கள் யஜ்ஞாரம்பத்தில் மேற் கொண்டிருந்த விரதத்தினின்றும் விடுவிக்கப்படுகிறார்கள், 'தீக்ஷிதர்' என்னும் பட்டத்திற்கு உரியவர்களாகிறார்கள். 'தீக்ஷிதர்' என்னும் பெயருக்குக் 'கஷ்டமான விரதத்தைமேற் கொண்டு ஸாதித்தவர்' என்று அர்த்தம்.

யஜ்ஞம் நடைபெறும் ஐந்து நாளும் படிப்பிலும் பக்தியிலும் சிறந்த பிராமணர்கள் அநேகருக்கு அன்ன மளிக்கவேண்டும். அவர்களின் ஸங்
தான தருமங்கள் கியை ஓராயிரத்திற்குக் குறையலா
காது. உபகாரத்திற்கு உரியவர்களா
யுள்ள ஏழை ஜனங்களுக்கு ஏராளமாகப் பணமுங் கொடுக்க வேண்டும். எல்லா யாகங்களிலும் ஒவ்வொரு நாளும் மாலைப் பொழுதில் யாகசாலையில் ஒரு ஸதஸு கூடும். அந்தச் சபை யில் சாஸ்திர விஷய வாதங்களும், தர்மவிசார தர்க்கங்களும், பிரசங்கங்களும், படனபாராயணங்களும், கலாவிநோத ஸாஹஸ காரியப் பிரதரிசனங்களும் நிகழும். இவைகளுக் கெல்லாம் தாராளமாகச் சம்மானங்கள் செய்யவேண்டும். யஜ்ஞம் இயற்றுவதற்குச் சங்கற்பஞ் செய்து தீக்ஷை மேற் கொள்ளும்போது யஜமானன் பலமும் புஷ்டியும் வாய்ந்த வனா யிருக்கவேண்டும்; அந்த விரதம் நீங்கி அவன் வெளி யேறும்போது தேக பலங் குன்றிச் சக்தி யொடுங்கி மெலிந் தவ னாகவேண்டும் என்று விதிக்கப்பட் டிருக்கின்றது. இதனால் யஜ்ஞம் செய்ய முற்படுகிறவன் யுக்தமான வயதும், உபவாஸம் முதலான கஷ்டங்களைத் தாங்கத்தக்க பலமும் உள்ளவனா யிருத்தல்வேண்டும் என்று ஏற்படுகின்றது. அவ பிருத ஸ்நானத்திற்குப் பின்பு யஜமானனையும் அவனுடைய

மனைவியையும் யாகசாலையிற் குழுமியுள்ள பிராமணர்கள் ஆசீர்வதித்து, அவர்களுடைய இல்லத்திற்கு மேளவாத்தியங்களோடு விமரிசையாக அழைத்துக்கொண்டு போவார்கள். இல்லஞ்சேர்ந்து, யாகத்திற்கு உதவியாயிருந்து நடத்திய சிரௌதிகளுடன் அவர்கள் நல்ல விருந்து உண்டு களித்திருப்பார்கள்.

கர்மகாண்டத்தில் அநேகவிதமான கர்மங்களின் விவரங்கள் வெகு விரிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன. யாகங்களென்பவை கர்மங்களுள் முக்கியமானவையாதலால் அவைகளை இயற்றும் விதம் இன்னதென்று தெரிவிக்கும்பொருட்டு அவைகளில் ஒன்றை விரித்துரைத்தோம். யாகங்களைப்போல அவ்வளவு முக்கியமல்லாத பலவகைக் கர்மங்களைப்பற்றித் தெரிந்துகொள்ள விரும்புகிறவர்கள் வேதங்களையே படித்துப் பார்த்துத் தெளியவேண்டும்.



# 4. ஞான காண்டம்

ஞானம் என்பது மோக்ஷத்தைத் தரும் புத்தி. மோக்ஷமாவது துன்பங்களின்றும் நிரந்தரமாக விடுபட்டு, அழிவில்லாப் பேரின்பத்தை யடைதல் துன்பங்களுள் முதன்மையானவை பிறப்பிறப்புக்களென்பனவேயாம். பிறப்பிறப்பில்லாத அழியாத் தன்மையும் குன்றாத இன்பமும் வாய்ந்திருக்க வேண்டுமென்றே அறிவுள்ளவனைவனும் ஆசைப்படுவான். அப்படிப்பட்ட நிலையைப் பெறுவதற்கு அவன் எவ்வளவு சிந்தித்துப் பார்த்தும் வழியுந் துறையும் ஏற்படாமல் தியங்குவான். இந்த ஆலோசனையில் அவனால் விடுவிக்க முடியாத அநேக கஷ்டமான விஷயங்கள் அவனுக்குத் தோன்றுகின்றன. ஸ்தூலப் பிரபஞ்ச மென்னும் இந்த அதிசயமான வஸ்து யாது? இது எப்படித் தோன்றியது? இதனை யுண்டாக்கினவரெவரேனும் உளரோ? உண்டாக்கியபின், இதனை யொருவழியில் நடத்தி யடக்கி யாண்டு நிலைநிறுத்துபவரெவரேனு முளரோ? 'நான்' என்பவன் யாவன்? அன்னை வயிற்றிற் பிறக்குமுன் யான் இருந்தேனா, இல்லையா? இறந்தபின், யான் இல்லாமல் அற்றுப்போகத் தக்கவனா, இறந்த பின்னும் ஜீவித்திருக்கத்தக்கவனா? 'நான்' என்பது இந்த ஸ்தூல உடலினின்றும் வேறானதா, இதனோடொன்று பட்டதா? எனக்கு நினைவும் செயலு மிருக்கின்றனவே. இவை கடியாரச் சூத்திரம் போன்று அமைக்கப்பட்டிருக்கிற என் தேகத்தினின்றும் விளைந்தனவா, அல்லது, இந்தத் தேகத்துக்குள் வேறெவரேனும் வியாபித்து இதனை யடக்கியாண்டு விவகரிப்பதன் பயனா?—என்பன வாதிய வினாக்கள் மோக்ஷம் அல்லது முத்தியை விரும்புகிறவனுடைய மனத்தில் எழுகின்றன. இந்த வினாக்களை யெல்லாம் மூன்று பெரிய வினாக்

களாகத் தொகுக்கலாம். அந்தப் பெரிய வினாக்களாவன—பிரகிருதி என்பது யாது?, 'நான்' என்பது யாது?, கடவுள் என்பது யாது? இந்த வினாக்களுக்குத் தக்கவாறு விடையளித்துச் சமாதானப்படுத்திக் கொள்வதே முத்தி நிலையைப் பெறுவதற்குச் சாதனமான புத்தி. இதுவே ஞானம் எனப் படுவது என்று சொன்னோமல்லவா? இந்த ஞானம் ஆராய்ச்சியினால் உண்டாகத் தக்கது. இவ் வாராய்ச்சி நான்கு வேதங்களின் கடைப்பாகத்தில் விஸ்தாரமாகச் செய்யப்பட்டிருக்கின்றது. அந்தப் பாகங்களுக்கு 'உபநிஷத்துக்கள்' என்று பெயர். உபநிஷத்துக்களின் தொகுதியே 'ஞானகாண்டம்' என வழங்கப்படுவது.

## உபநிஷத்துக்கள்

'உபநிஷத்து' என்னும் சொல்லுக்கு 'மோக்ஷத்திற்குச் சமீபமான நிலையில் வைப்பது' என்று அர்த்தம்; 'அஜ்ஞான விநாசினி' என்றும் அது பொருள்படும். ஆனதனாலே, உபநிஷத்துக்கள் மோக்ஷ ஸாதனமான நிலையை யளிப்பனவையாகும். அதாவது, அந்த நிலையை யடைவதற்குத் தக்கவாறு அவை நம் மனத்தைப் பரிபக்குவப் படுத்துகின்றன. சாமானியமாக மனிதனுக்குள்ள மனநிலையை மாற்றித் துக்கத்தை யொழித்துப் பேரின்பம் விளைக்கத்தக்க அமைதியை உபநிஷத்துக்கள் உண்டாக்குகின்றன. ஆதலால், அவைகளை மற்ற நூல்களைப்போலப் 'படிக்கிறது' என்று சொல்லக்கூடாது. மேற்குறித்த மனநிலை படிப்பினால் வரத்தக்கதன்று, விசாரணையினாலும் ஆராய்ச்சியினாலுமே வரத்தக்கது. ஆதலின், 'உபநிஷத் விசாரம் செய்வது', அல்லது 'வேதாந்த விசாரம் செய்வது' என்று சொல்வது வழக்கம். இந்த விசாரத்திற்குச் 'சாந்தி பாடம்' என்று பெயர்.

உபநிஷத்து விசாரமானது சாந்தியை (மனவமைதியை) அளிக்கத்தக்கது. முத்திக்குச் சாதனமான மனநிலையை யளிப்பன வாதலால், உபநிஷத்துக்களை எல்லா மதத்தவர்களும் கொண்டாடுகிறார்கள். இந்து மதம் பல்வேறு கூறுகளாகப் பிரிபட்டிருக்கின்றது. ஒவ்வொரு பிரிவினரும் முத்தியை நாடுகிறவர்களே. அவரவருடைய கொள்கையின்படி முத்தி நிலை வேறுபடுகின்றது. முத்திக் கொள்கைகள் எவ்வளவு வேறுபடினும், முத்தி யடைவதற்கு உற்ற மனநிலை உபநிஷத்து விசாரத்தினாலேயே வாய்க்கத்தக்கதா யிருக்கின்றது. எந்தக் கொள்கையினாரானாலும் இவ் வுபநிஷத்துக்களையே ஆதாரமாகக் கொண்டு தத்துவ விசார வழிவகைகளை அமைத்துக் கொண்டிருக்கிறார்கள். உதாரணமாகச் சைவர்கள் வைணவர்கள் முதலாயினோர் தத்தம் கொள்கையின்படி தத்துவத்தை நிரூபணஞ் செய்து, மோக்ஷ ஸாதனம் இன்னதென்று சித்தாந்தப்படுத்துவதற்கு ஆதாரமா யிருப்பன உபநிஷத்துக்களே. இவைகளைப் பிரமாணமாகக் கொண்டே இந்துமதச் சாகைகளெல்லாம் அமைந்து நெடுநாளாக அபிவிருத்தி யடைந்திருக்கின்றன.

**ஸர்வமத ஆதாரம்**

உபநிஷத்துக்களுக்கு 'வேதசிரம்', 'இரகசியம்', 'வேதாந்தம்' என்னும் பெயர்கள் உண்டு. 'வேதாந்தம்' என்றால் வேதத்தின் முடிவு. வேதத்தின் முடிவுரையாக நான்கு வேதங்களின் ஈற்றிலும் அமைந்திருப்பதனால் இவை 'வேதாந்தம்' எனப் பெற்றன. மற்றும், வேதம் என்பது ஞானம். பிரபஞ்ச சம்பந்தமாயுள்ள பற்பல வகையான ஞானங்களெல்லாம் உபநிஷத்துக்களின் ஒளியில் முற்றுறுகின்றனவாதலால் இவை 'வேதாந்தம்' எனப் பெற்றன.

**வேதாந்தம்**

வேதங்கள் அனந்தம். அவைகளின் கடைப் பாகங்களாகிய உபநிஷத்துக்களும் அனந்தமென்று சொல்லவேண்டியதில்லையே. நான்கு கூறுகளாகத் தொகுக்கப்பட்டிருக்கும் நான்கு வேதங்களின் இறுதியிலும் அடங்கியிருக்கும் உபநிஷத்துக்கள் அநேகம். அவற்றுள் நம்மவர்கள் தேர்ந்தெடுத்திருப்பன 108-உபநிஷத்துக்கள். இவைகளி லுள்ளும் 10-உபநிஷத்துக்களை மிகப் பிரபலமானவை யெனக் கொண்டிருக்கிறோம்.

தசோபநிஷத்துக்கள்

இந்தத் தசோபநிஷத்துக்களாவன,—1. ஈசாவாஸ்யோபநிஷத்து, 2. கேநோபநிஷத்து, 3. கடோபநிஷத்து, 4. பிரச்நோபநிஷத்து, 5. முண்டகோபநிஷத்து, 6. மாண்டூக்கியோபநிஷத்து, 7. தைத்திரீயோபநிஷத்து, 8. ஐதரேயோபநிஷத்து, 9. சாந்தோக்கியோபநிஷத்து, 10. பிருஹதாரணியகோபநிஷத்து என்பனவாம். இந்து மதத்தை யுத்தரிப்பதற்காகத் தோன்றிய பிரபலமான ஆசாரிய புருஷர்களனைவரும் இப் பத்து உபநிஷத்துக்களுக்குப் பாஷியங்கள் எழுதியிருக்கிறார்கள். அந்தந்த மதச் சாகையினர் தத்தம் ஆசாரியருடைய பாஷியத்தின்படி இவ் வுபநிஷத்துக்களுக்குப் பொருள்படுத்திக் கொள்வார்கள்.

## ஸாதன சதுஷ்டயம்

மற்ற நூல்களைப் படிப்பதுபோல இவை படிக்கத் தக்கவை யல்லவென்று சொன்னோமே. இது சாந்தி பாடமென்றுஞ் சொன்னோமே. சாந்தி பெறுவதற்கேற்ற மனப் பாங்கு உள்ளவனே உபநிஷத்து விசாரஞ் செய்வதற்கு உரியவனாவன். அந்த மனப்பாங்கு வாய்ப்பதற்குச் சாதனங்களைத் தேடவேண்டும். சாதனங்களில்லாமல் எதனையும் சாதிக்க முடியாது. சாதனமாவது பழக்கம், பயிற்சி. உபநிஷத்து

கிசாரம் செய்வதற்குச் சாதனங்கள் நான்கு உள. அவை 'ஸாதன சதுஷ்டயம்' எனப்படும். அவையாவன:—

மாருமல் நிலையாயிருப்பது எது, நிலையில்லாமல் மாறுவது எது; அதாவது, என்றைக்கும் நித்தியமாயிருப்பது எது, ஒருபொழுது இருந்து மற்றொருபொழுது இல்லாத் தன்மையதாய் அநித்தியமா யிருப்பது எது என்று பகுத்தறியும் விவேகம். இந்த விவேகம் நிலைத்தாலல்லாமல் பின் வரும் சாதனங்கள் கைகூடா. இது மனத்திற் பதிந்து விவகாரத்திற்கு வருவது சாமானியமாக அமையாது; பெரியோர்களை யடுத்துப் பல கால் சிரவணஞ்செய்து, விஷயாதிகளில் மோகம் நீங்கின பின்பு இது அநுபவத்திற்கு வரத்தக்கது.

**1. நித்தியா நித்திய வஸ்து விவேகம்**

இம்மையிலும் மறுமையிலும் அடையக்கூடிய பயன்களிலும் போகங்களிலும் விரக்தி. அதாவது, கந்த புஷ்ப வநிதாதி இந்திரிய விஷயாநுபவங்களில் விருப்பமில்லா திருப்பதன்றிக் கீர்த்தி காமமும் தவிர்த்து, சொர்க்கம் முதலான மேலுலகங்களின் இன்ப வாழ்விலும் அரம்பையர் சேர்க்கை முதலான போகங்களிலும் இச்சைகொள்ளா திருத்தல். இந்த ஆசைகளுக்கெல்லாம் மூலஸ்தானமா யிருப்பது தேகம். தேகமே தான் என்னும் அபிமானம் நீங்கினாலன்றி இம்மைச் சுகாநுபவத்தில் விருப்பம் ஒழியாது.

**2. இஹாமுத்திரார்த்த பலபோக விராகம்**

மேற்சொல்லிய இருவகைச் சாதனங்களையும் கைக்கொண்டொழுகுகிறவன் உயர்கோக்குறும் பொருட்டு மனம்,

3. சமாதிஷட்க சம்பத்தி — ஞானேந்திரியங்கள், கர்மேந்திரியங்கள் என்னும் இவைகளை ஒரு வழிப்படுத்தி அமைத்துக்கொள்ளவேண்டும். அங்ஙனம் அமைத்துக்கொள்வதே மூன்றாஞ்சாதனம்.

இதனைச் சமம் முதலாயுள்ள ஆறு பேறுகளாகச் சொல்வார்கள். இவ் வாறு பேறுகளாவன,—(1) சமம், (2) தமம், (3) உபரதி, (4) திதிக்ஷை, (5) ஸமாதி, (6) சிரத்தை.

1. சமம்.—மனத்தை வெளியுலகத்து விஷயங்களிற் செல்லவொட்டாமல் தடுத்துத் திருப்பிச் சிரவணத்திற் செலுத்துவது. சிரவண மென்பது தத்துவ விளக்கமாக ஆசிரியர் போதிக்கும் விஷயங்களைக் கேட்டல்.

2. தமம்.—கர்மேந்திரியங்களையும் ஞானேந்திரியங்களையும் விஷயங்களிற் செல்லவொட்டாமல் அடக்கி ஆளுதல்.

3. உபரதி.—பூர்வத்து வாசனையினால் மனமானது மீண்டும் இதர விஷயங்களிற் செல்லாமல் தடுத்து, தனக்குக் கடமையாயுள்ள கர்மங்களை, 'நான் செய்கிறேன்' என்ற அபிமானமும் கர்மப் பயனில் விருப்பமும் இல்லாமற் செய்வதாம்.

4. திதிக்ஷை.—எவ்வளவு துக்கங்கள் வரினும் அவற்றின் பொருட்டு ஏங்கி அழாமல் தைரியமாக அவைகளைப் பொறுத்தல். பிராரப்த வசத்தினால் எந்த வேளையில் எது வருமோ அதை அனுபவித்துத் தீரவேண்டு மென் றுணர்ந்து, விபத்தினால் வாட்டமும் சம்பத்தினால் மகிழ்ச்சியும் எய்தாமல் சமபுத்தியாயிருப்பது.

5. ஸமாதி.—சஞ்சலத் தன்மையுள்ள மனமானது விஷயாதிகளில் பிரவர்த்திக்காமல் மேற்சொல்லிய சிரவணாதிகளிலேயே நிலையாக நிற்கும்படி அதனை வைப்பது. மனம் போனபடி போகவிடுதல் சமாதியன்று.

6. சிரத்தை.—முன்னால் மற்ற விஷயங்களி னிடத்தில் வைத்திருந்த விசுவாஸத்தை யெல்லாம் குருவினிடத்தும் வேதாந்த வாக்கியத்தி னிடத்தும் வைப்பது.

தீப்பற்றி எரிகிற வீட்டுக்குள் அகப்பட்ட புருஷன் வெளியேறுவதற்கு ஆத்திரங்கொள்வது போல, வேறு நினைவின்றி முக்திபெற வேண்டுமென்று தீவிரமாக இச்சித்து, அஜ்ஞானத்தினால் வந்துள்ள தேகாதி பந்தத்தை ஸ்வாத்ம ஞானத்தினால் தொலைப்பது. கடும்பசி கொண்டவன் மற்றெவ் விஷயத்திலும் கவலை கொள்ளாமல், மற்றென்ன பேறு வாய்க்கினும் வெறுத்து, பசிப் பிணியைத் தவிர்ப்பதொன்றே நோக்கமாய் முயற்சி செய்வதுபோல, ஜனன மரண மென்னும் பவப் பிணியைப் போக்குவதொன்றே கருமமென உழைப்பவன் முமுக்ஷுவாவன்.

4. முமுக்ஷுத்துவம்

## அதிகாரிகள்

மேற்சொல்லிய சாதன சதுஷ்டய சம்பத்து உடையவர்களே வேதாந்த சிரவணஞ் செய்வதற்கு உத்தமாதிகாரிகளெனப்படுகிறார்கள். அவர்களுக்கே உபநிஷத்துக்களும் உபநிஷத்துக்களின் விசாரமும் பயன்படும். எந்தக் காரியத்திலும், அதனைச் செய்ய மேற்கொள்ளுகிறவன் அதனைச் சாதிக்க வல்லவனு வென்பதைக் கவனிக்கவேண்டு மல்லவா? சாதிப்பது அவனுடைய திறமையையும் தேகத்தன்மையையும் மனப்பக்குவத்தையும் புத்திக் கூர்மையையும் பொறுத்தது; ஒன்றைச் சாதிக்கக்கூடியவன் மற்றொன்றைச் சாதிக்க முடியாதவனு யிருப்பான். ஒவ்வொருவனுடைய பரிபக்குவம் ஒவ்வொரு மாதிரியா யிருக்கும். பரிபக்குவத்தை யனுசரித்து மனிதர்கள் வேத சம்பந்தமான விஷயங்களில்

1. மந்தாதிகாரிகள், 2. மத்திமாதிகாரிகள், 3. உத்தமாதிகாரிகள் என மூன்று வகையாகப் பிரிக்கப்படுவார்கள். இவர்களின் பொருட்டு வேதமானது முறையே 1. கர்ம காண்டம், 2. உபாஸனா காண்டம், 3. ஞான காண்டம் எனப் பிரிக்கப்படும். இவ்வாறு உத்தமாதிகாரிகளுக்கே ஞான காண்டம் ஏற்பட்டதைக் காண்க.

## பிரஸ்தானத் திரயம்

ஞான காண்டமே வேதங்களின் பரமார்த்தத்தைப் போதிப்பதாகும். இதன் கருத்தையே பிரம்ம சூத்திரங்களும் பகவத்கீதையும் விளக்குகின்றன. இவைகளை நம் போலியருக்குப் புலப்படுத்தும்பொருட்டு ஆசாரியர்கள் பாஷ்யங்கள் எழுதியிருக்கிறார்கள். இம் மூன்று பாஷியங்களும் "பிரஸ்தானத் திரயம்" எனப்படும். "பிரஸ்தானம்" என்பது "நல்ல நிலை" என்று பொருள்படும். மேலே விவரித்துள்ள சாதன சதுஷ்டய சம்பத்து வாய்ந்த உத்தமாதிகாரியானவன் 'பிரஸ்தானத் திரயம்' என்னும் இம் மூன்று பாஷியங்களையும் குருமுகமாகச் சிரவணஞ்செய்து ஞானம் பெற்றுச் சாந்தியை எய்துவன். ஆதலின், இந்தச் சிரவணம் "சாந்திபாடம்" எனப்பெறும்.



## 5. உபவேதங்கள்

இருக்கு, யஜுசு, ஸாமம், அதர்வம் என்னும் நான்கு வேதங்களினின்றும் முறையே 1. ஆயுர்வேதம், 2. தனுர் வேதம், 3. காந்தருவ வேதம், 4. அர்த்த வேதம் என்னும் நான்கு உபவேதங்கள் உண்டாயிருக்கின்றன.

### ஆயுர் வேதம்

இதனை இயற்றியோர் பிரம்மதேவன், அசுவினி தேவதைகள், தன்வந்தரி முதலானவர்கள். இதனுள் உரோக உற்பத்தி, உரோக நிதானம், சிகிச்சை முதலிய கூறப்படும். சரகம், வாக்படம், சுச்ருதம் என்னும் நூல்கள் இதில் அடங்கியனவேயாம். ஆயுர்வேதத்தைப் பிரம்மதேவன் சூரியனுக்கு உபதேசித்தான். சூரியன் மற்றொரு ஸம்ஹிதையைச் செய்தான். தன்வந்தரி, திவோதாசன், காசிராஜன், அசுவினி தேவர், நகுலன், சகதேவன், இயமன், சியவனன், ஜனகன், புதன், ஜாபாலன், ஜாஜலி, பைலன், காதன், அகஸ்தியர் ஆகிய இவர்கள் வைத்திய நூலை முறையாயறிந்து வைத்திய சாஸ்திரம் இயற்றியோராவர்.

ஔஷத தானஞ் செய்வதனால் புண்ணிய முண்டாகும். மருந்துகளினால் நோய்களை யகற்றித் தேகத்தைத் திடப் படுத்தலாம். தேகத்தைத் திடப்படுத்திக் கொண்டாலன்றி நல்வினைகளைச் செய்வதற்கும் நூலாராய்ச்சி முதலிய மார்க்கங்களினால் ஞானம் பெற்று முக்தி யடைவதற்கும் முடியாது. தேகத்தைக் காத்துக்கொள்ளல் எவர்க்கும் முதற் கடமை. இம் முதற் கடமையை நிறைவேற்றச் சாதனமாயிருப்பது ஆயுர்வேதம். மருந்தினால் நோய் தீரவிடின், வைராக்கியம் உண்டாகி, முக்தி மார்க்கத்தை விசாரிக்கச்

செய்யுங் காரணத்தால் இந்நூலும் ஞான மார்க்கப் பார மார்த்திகத்தில் பயன்படத் தக்கதேயாகும்.

## தனுர் வேதம்

இதனை இயற்றியவர் விசுவாமித்திரர். இதனுள் முக்தம், அமுக்தம், முக்தாமுக்தம், இயந்திர முக்தம் என்னும் நால் வகை அஸ்திர சஸ்திர வித்தைகள் உண்டு. எனின், சக்கராதி களை விடுதல் முக்தம், வாள் முதலிய அமுக்தம், நாராசாதி கள் முக்தாமுக்தம், சதக்கினி முதலிய இயந்திரமுக்தமாம். இந்த வேதத்தில் அஸ்திர சஸ்திரப் பிரயோக மந்திரங்க ளும், சத்துரு நாசமும், சிஷ்டஜன ரக்ஷணமும், ஜார சோரா திகளின் கண்டனமும் கூறப்பட்டிருக்கின்றன. இவைகளால் குடிகளுக்கு க்ஷேமம் உண்டாகும். க்ஷேமத்தினால் தர்மங் கள் நடைபெறும். தர்மாசரணையினால் மோக்ஷம் வாய்க் கும். இதைப் பிரம்மதேவரிடத்திருந்து விசுவாமித்திரர் உபதேசம் பெற்றனர்.

தனுசு என்பது வில். வில்லின் இலக்கணம், விற்பிடிக் கும் இலக்கணம், அம்பின் இலக்கணம், அம்பினைத் தொடுக் குமிடம், விற்கொண்டோன் இலக்கணம், விற்கொண்டோன் நிலை முதலியவைகளைப் போதிப்பது வில்வித்தை. இதை யாள் வோர் இப்பொழுது இல்லை, பயிற்சியும் அற்றது. இவ்வாறு வில்வித்தையானது வழக்கமற்று இன்னதென்று தெரிதற்கு அருமையா யிருக்கின்றது.

தனுர் வேதமானது நான்கு பாதங்களும் ஐந்து வகை களும் உடையது. அந்த நான்கு பாதங்கள் 1. இரத, 2. கஜ, 3. துரக, 4. பதாதிகளாம். ஐந்து வகைக ளாவன,—1. இயந்திர முக்தம், 2. பாணி முக்தம், 3. முக்தசந்தாரிதம், 4. அமுக்

ஐவகைப்போர்

தம், 5. பாகுயுத்தம் என்பன. [அஸ்திர யுத்தம் சஸ்திர யுத்தம் என யுத்தம் இருவகைத்து. அஸ்திரம் என்பது கைவிடு படை, சஸ்திரம் என்பது கைவிடாப்படை. மற்றும், ருஜு மாயாபேதத்தால் யுத்தம் இருவிதப்படும். நேர்நின்று போர் புரிதல் ருஜுயுத்தம், மறைந்து போர்புரிதல் மாயா யுத்தம்].

இயந்திர முக்தம் — பீரங்கி துப்பாக்கி முதலிய இயந்திரங்களில் இருப்புக் குண்டு முதலிய பிரயோகித்துப் பகைவரின் அரண்களையும் பகைவரையும் அழிப்பது.

பாணிமுக்தம். — வில், தோமரம் முதலிய ஆயுதங்களைக் கொண்டு போர் புரிவது.

முக்த சந்தாரிதம்—கோட்டை முதலிய பிடித்தல்.

அமுக்தம்—கைவிடாப் படைகளாகிய வாள் முதலியவற்றைக் கொண்டு போர் புரிவது.

பாகுயுத்தம். — ஆயுதமில்லாமற் செய்யும் மற்போர் முதலியவற்றால் பகைவரை அழிப்பது.

**போர் முறை**

போர் புரிய விருப்பமுள்ளவன் யோக்கியனோடு போர் செய்ய வேண்டும். அதாவது, கயவனிடத்தில் யுத்தஞ் செய்யக் கூடாது. யுத்தத்தில் வில்லைக்கொண்டு ஒருவர்க்கொருவர் யுத்தஞ் செய்வது உத்தமப் போர்; வாள் முதலிய கொண்டு யுத்தஞ் செய்வது மத்திமம்; கட்கம் முதலிய கொண்டு போரிடுவது அதமம்; ஆயுத மில்லாமல் மல்லயுத்தம் புரிவது அதமாதமம் எனப்படும்.

**வில்லியன் நிலை முதலியன**

வில் வித்தையை விரும்பினவன் அங்கப்பழுது இல்லாதவனாய்க் கை கால் விரல் புஜங்களில் வன்மை யுடையவனாயிருத்தல் வேண்டும். வில்லைக் கையிற் கொண்டோன் தான் நிற்கும் நிலைகளை யறிதல் வேண்டும். அந்நிலைகள் 1. சம

பதம், 2. வைசாகம், 3. ஆலீடம், 4. பிரத்தியாலீடம், 5. ஜாதம், 6. நிச்சலம், 7. விகடம், 8. சம்புடம், 9. ஸ்வஸ்திகம், 10. மண்டலம், 11. பைசாசம் என்பனவாம். வில்லைக் கைக்கொண்டோன் அதை இடது கையிற் பிடித்து வலது கையில் அம்பைக்கொண்டு, வைசாகம் அல்லது ஜாதம் என்னும் நிலையில் நின்று குருவை வணக்கவேண்டும். உத்தமமான மாத்திற் செய்த வில்லை, கட்டுகள் அமைந்ததாகக் கொண்டு, எடுத்து ஏற்றி, பிடிக்கும் இடமாகிய நடுவிடத்திற் பிடித்துப் பூமியில் நாட்டி, வளைத்து நாணேற்ற வேண்டும். நாணைக் குணத்தோனி செய்து, இறகுகளுடன் கூடிய வெற்றிப் புகழ்வாய்ந்த நஞ்சுண்ட அம்புகளையாவது தொடுத்துக் குறிகளை நோக்கி, நன்றாக வில்லை இழுத்து, அம்பினை எய்தல் வேண்டும். எய்வோன் வலி எவ்வளவினதோ அவ்வளவின் அம்பு வேகமாய்ச் செல்லும். இதன் விரிவுகளை ஆக்கினேய புராணம் கூறும்.

## காந்தருவ வேதம்

இது பாத முனிவரால் கூறப்பட்டது. இதனுள் ஸ்வர தாளமூர்ச்சா நிகளும், நிருத்திய வாத்தியாதிகளின் விஷயங்களும் தெளிவாகக் கூறப்பட்டிருக்கின்றன. ஸங்கீதத்தோடு ஈசுவரனை ஸ்தோத்திரஞ் செய்வது ஆனந்தகரமா யிருக்குமாகையால், இந்த நூலும் பரலோக சாதனமா யுள்ளது. எங்ஙனமெனின், ஏகாக்கிரமனம் பக்தியைப் பெருக்கி மனோலய முண்டாக்கி முத்திக்குச் சாதனமாகும். இதன் விசேஷத்தை,

> ஜபகோடி குணம் தியானம் தியானகோடி குணோ லய :
> லயகோடி குணம் கானம் கானாத்பரதரம் நஹி

என்னும் சுலோகம் நன்றாகத் தெரிவிக்கின்றது. "இஷ்ட தேவதா மந்திரத்தை ஒரு கோடி ஆவர்த்தி ஜபஞ் செய்த

பயன் ஒருமுறை தியானஞ் செய்வனால் எய்தும்; ஒருகோடி முறை தியானஞ் செய்வதனாலாய பயன் ஒருதரம் மனனமாவதனால் பிராப்தியாகும்; ஒருகோடிதரம் மனனஞ் செய்த குணம் கானத்தினால் உண்டாகும்; கானத்தைவிடச் சிறந்தது மற்றொன்று இல்லை" என்பது இந்தச் சுலோகத்தின் கருத்து.

## அர்த்த வேதம்

இது பொருள்நூல். இதற்கு அநேக மகாத்துமாக்கள் கர்த்தர்களாவார்கள். சிற்ப சாஸ்திரம், பாக சாஸ்திரம், நீதி சாஸ்திரம், அசுவ சாஸ்திரம் முதலியன இதில் கூறப்படும். இது அதர்வண வேதத்தினின்றும் உண்டானது. இந்தச் சாஸ்திரங்கள் தனத்தைச் சம்பாதிப்பதற்கு ஏதுக்களாகும். பொருளை ஈட்டி, அந்தப் பொருளை ஸத்கர்மாசரணையில், அதாவது, ஏழைகளுக்கு உதவி, அன்னதானம், வித்தியாதானம், கோவில் குளங்க ளமைத்தல் முதலான வகைகளிற் செலவிட்டு, இம்மையில் தேகத்தைக் காப்பாற்றிக்கொண்டு, ஞான மார்க்கத்தைத் தேடி, மறுமைச் சுகங்களைப் பெறுவதற்குச் சாதனமாக இந்த உபவேதம் ஏற்பட்டிருக்கின்றது. பொருளில்லார் இவ் வுலகத்தில் எதையும் சாதிக்க முடியாதாதலால், பொருண் மூலமாகிய இந்த நூல் முக்கியமானது. இவ் வுப வேதத்திற்கு 'ஸ்தாபத்தியம்' என்றும் பெயர்.



## 6. வேதாங்கங்கள்

வேதவாக்கியங்களிலடங்கிய கருத்துக்களைத் தெளிவாகத் தெரிந்து கொள்வதற்குச் சில சாதனங்கள் இருக்கின்றன. ஒவ்வொரு வேதத்திற்கும் தெளிவான நடையில் பாஷியம் எழுதப்பட்டிருக்கிறதென்பது உண்மையே. அந்தப் பாஷியத்தைத் தெரிந்து கொள்வதற்கும் சில உபசாஸ்திரங்களிற் பயிற்சி இன்றியமையாததா யிருக்கின்றது. அந்த உபசாஸ்திரங்கள் ஆறு ஆகும். அவை வேதத்தின் அங்கங்கள் எனப்படும். அவயவங்க ளில்லாவிடின், உடல் மாத்திரமிருந்து ஒரு காரியத்தையுஞ் செய்யமுடியா தல்லவா? அது போல, இவ்வாறு அங்கங்களும் இல்லாவிட்டால் வேதம் எவருக்கும் பொருள்படாமற் பிரயோசனமற்ற கிரந்தமாய் விடும். ஆறு வேதாங்கங்களாவன :- 1. சிக்ஷை, 2. வியாகரணம், 3. சந்தஸ், 4. நிருக்தம், 5. ஜோதிஷம், 6. கற்பம்.

### சிக்ஷை

இது வேதாத்தியயன முறையை விளக்கும் தொனி சாஸ்திரம். வேத சப்தங்களுக்கு அக்ஷரஸ்தானம், உதாத்த அநுதாத்த ஸ்வரிதம் என்னும் ஸ்வரங்களைப்பற்றிய ஞானம், மாத்திரை, உச்சாரணம் முதலியனவெல்லாம் இந்தச் சாஸ்திரத்தில் விளக்கப்பெறும். இந்தச் சாஸ்திரப் பழக்கமில்லாவிட்டால் வேதஸ்வரங்கள் பிடிபடா. ஸ்வரமில்லாவிட்டால் வேத வாக்கியங்களின் பொருள் உள்ளபடி விளங்காது. ஆகையால், சிக்ஷை என்பது வேதாத்தியயனத்திற்கு இன்றியமையாததோர் அங்கமாகும்.

### வியாகரணம்

இது இலக்கண நூல். இலக்கணம் நன்கு பயிலாவிட்டால் பாஷைப் பயிற்சி ஏற்படாதென்பது எந்தப் பள்ளிப்பிள்ளைக்

குந் தெரியுமே. வேத வாக்கியங்களின் பொருளைச் சரியாகத் தெரிந்துகொள்வதற்கு வியாகரணம் என்னுமிந்த அங்கத்திற் பழக்கம் மிகவும் அவசியமென்று சொல்லவும் வேண்டுமோ? பூர்வகாலத்தில் இலக்கண நூல்கள் அநேகம் இருந்தன. அவையெல்லாம் படிப்படியாகத் தேர்ந்து முதிர்ந்தன. அவ்வாறு முற்றுப்பெற்ற வியாகரண சாஸ்திரம் பாணினியினால் அமைக்கப்பட்டது. இதைவிட அதிகமாக வியாகரணப் பயிற்சியில் மனிதனுடைய புத்தி செல்லமாட்டாது. இதற்குக் காத்தியாயனரும் பதஞ்சலியும் வியாக்கியானம் செய்திருக்கின்றனர். இதில் வேத சப்தங்களைத் தெரிந்துகொள்வதற்கான பிரகிருதி பிரத்தியய விவரங்கள் விசதமாகக் கூறப்பட்டிருக்கின்றன.

## சந்தஸு

இது வேதத்திற்குரிய யாப்பிலக்கண நூல். வைதிகக் கிரியையில் அமர்ந்திருப்பவன் எந்தச் சந்தர்ப்பத்தில் எந்த மந்திரத்தை ஓதவேண்டும், அதனை எந்தச் சந்தத்திற் பாடவேண்டும், அது எந்தத் தேவதைக்கு உரியது என்பன வாதிய விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டியது அவசியமாகும். இவையெல்லாம் இந்த நூலில் போதிக்கப்பட்டிருக்கின்றன. இந்த விஷயங்களைத் தெரிந்துகொள்ளாத தோஷத்தைப் பெரிதாகப் பாராட்டிச் சாஸ்திரங்கள் கடுமையான தண்டனை விதிக்கின்றன. இந்தச் சாஸ்திரத்திற்குக் கர்த்தா பிங்களமுனிவர். இதில் வேதத்திற் கூறப்பட்ட சந்தங்களின் ஞானம் போதிக்கப்படும்.

## நிருக்தம்

இது வேதச்சொல் இலக்கணம். பூர்வத்துப் பெரிய வியாகரண சாஸ்திரியான யாஸ்க மகரிஷி இதற்குக் கர்த்தா

வாவர், வியாகரணத்திற்குப் பாணினி எப்படியோ அப்படி நிருக்தத்திற்கு யாஸ்கர் ஆவர். இதில் வேத மந்திரங்களின் பயனைத் தெளிவாக்கும் வகை, அப்பிரஸித்த பதங்களின் அர்த்தங்கள் முதலியன போதிக்கப்படும். இற்றைநாள் இங்கிலீஷ் பாஷைக்கும் சாஸருடைய (Chaucer) இங்கிலீஷுக்கும் இருக்கிற வித்தியாசத்தைவிட, இற்றை நாள் ஸம்ஸ்கிருதத்திற்கும் வேத ஸம்ஸ்கிருத பாஷைக்கும் வித்தியாசம் அதிகமிருக்கின்றது. இக்காலத்து வடமொழி நூல்களிலகப்படாத அநேக சொற்களும் சொற்றொடர்களும் தேவதைகளின் பெயர்களும் வேதங்களிற் காணப்படுகின்றன. வேத மந்திரங்களின் பொருளுரைக்கும் வழி மாறாது பாதுகாக்கும் நூல் இதுவே. இதற்கு யாஸ்க மகரிஷி விரிவான நிகண்டு ஒன்று எழுதி வைத்திருக்கின்றார். அதில் பண்டைப் பதங்களுக்கு நவீன ஸம்ஸ்கிருத பாஷையில் அர்த்தம், வழக்கத்தில் அடிக்கடி காணப்பெறாத பதங்களின் உற்பத்தி, இலக்கணம் முதலியன, தேவதா பெயர்களின் உற்பத்தி, அவைகளுக்குப் பிரதிபதங்கள் ஆகிய இவையெல்லாம் காணப்பெறும். இவ்வாறு நிருக்தமானது 1. நைகண்டுகம், 2. நைகமம், 3. தெய்வதம் என்னும் மூன்று காண்டங்கள் கொண்டதாயிருக்கின்றது :

1. நைகண்டுகம்.—இது பிற்காலத்து நிகண்டாசிரியர்களாகிய அமரஸிம்மன் ஹலாயுதன் முதலானவர்களியற்றியுள்ள செய்யுள் வடிவான நிகண்டுகளுக்கு ஏறக்குறைய ஒப்பாகச் சொல்லத்தக்கது. இது அமரத்துக் காண்டங்களைப்போல மூன்று அத்தியாயங்கள் கொண்டது.

2. நைகமம்.—இது ஒரே அத்தியாயம் கொண்டது; வேதங்களிற் காணப்பெறும் பழைய சொற்களை விளக்கிக் கூறுவது.

3. தெய்வதம்.—இதுவும் ஒரே அத்தியாயமுள்ளது, வேதங்களிற் குறிக்கப்பட்டிருக்கிற தேவதைகளின் பெயர்களை விவரித்து அவைகளுக்குப் பரியாயமாய் உபயோகிக்கத்தக்க பதங்களையும் வைத்துரைப்பது.

இந்த நூலுக்குப் பன்னிரண்டு அத்தியாயங்கொண்ட வியாக்கியான மொன்றை யாஸ்கர் எழுதினார். அதுவும் நிருக்தமென்னும் பெயராலேயே வழங்குகின்றது.

## ஜோதிஷம்

ஜோதிஷம் என்பது வானசாஸ்திரம். வேதகர்மங்களைச் செய்வதற்கேற்ற காலங்களை நிர்ணயித்துக்கொள்வதற்கு இந்தச் சாஸ்திரப் பயிற்சி இன்றியமையாதது. உலகத்தின் நன்மைகளுக்கும் தீமைகளுக்கும் கிரகயோகங்களும், நக்ஷத்திரப் பொருத்தங்களும் காரணமாகுமென்பது இந்துக்களின் கொள்கை. நன்மை தீமைகளை இயக்குவதில் அவை பெரிதும் பயன்படுகின்றன வென்று நாம் நம்புகிறோம். அதுபோலவே கிரியைகள் நற்பயன் தருவதற்கும் தாமதமற் போவதற்கும் அவையே காரணமென்பது நமது துணிபு, ஆனதனாலே, நாம் செய்யத்தக்க கர்மங்களும் கொண்டாடுகிற பெருநாள்களும் வானத்துக் கிரகங்களின் நிலையை முன்னிட்டு நிர்ணயிக்கப்பட்டிருக்கின்றன. அந்தக் கர்மங்களையும், பண்டிகைகளையும், விரதங்களையும், உற்சவங்களையும் மேனாட்டாரைப்போல நாம் குறிப்பிட்ட மாதங்களில் குறிப்பிட்ட தேதிகளில் ஆசரிப்பதில்லை. அவ் விசேஷ தினங்களை ஆண்டுதோறும் ஒரே தேதியி லல்லாமல், கிரக நிலையை யனுசரித்து ஒவ்வோர் ஆண்டில் ஒவ்வொரு தேதியில் கொண்டாடுகிறோம். கிரகநிலை மாறுவதற்கேற்பப் பண்டிகைத் தினமும் மாறுகின்றது. இவ் விஷயத்தில் மேனாட்டாருடைய முறையைவிட இந்துக்களின் முறையே சிரேஷ்டமானது, சாஸ்திரீயமானது, கணிதப்படி சுத்தமானது என்று எவருமே ஒப்புக்கொள்வர்.

## கற்பம்

இது வைதிகக் கிரியைமுறையைச் சொல்லும் நூல். வைதிகக் கிரியைகளில் எது முன்செய்யத்தக்கது, எது பின் செய்யத்தக்கது என்று காரியங்களை ஒன்றன்பின் ஒன்றாக முறைப்பட அமைத்து இது தொகுத்துக் கூறுகின்றது; எந்த சமயத்தில் எந்த மந்திரத்தை உபயோகிக்க வேண்டுமென்று தரிக்கின்றது; அந்தந்த மந்திரத்தைச் சொல்லும் போது செய்யத் தக்க கைவினைகளையும் செய்பாகங்களையும் விவரித்துரைக்கின்றது. கற்பசூத்திர கர்த்தர்களைப் பிரபலமாக வழங்கப்படுவார் ஆசுவலாயனர், ஸாங்கியாயன போதாயனர், திராஹ்யாயனர், ஆபஸ்தம்பர் முதலானவர்கள். இந்தக் கற்பசூத்திரங்களெல்லாம் சுபாசுப கர்மங்களின் பொருட்டு ஏற்படுத்தப்பட்டிருக்கும் விதிகளடங்கிய நூல்கள் இந் நூல்கள் பதினெண்வகைப்படும். இவையெல்லாம் மேற்சொல்லியவர்களாதியாயுள்ள முனிவர்களாற் செய்யப்பட்டு, அவரவருடைய பெயரினாலேயே வழங்குகின்றன.

மூவகையான * அக்கினிக் கிரியைகளைச் சொல்லுகிற சிரௌத சூத்திரங்கள் கற்பத்தைச் சேர்ந்தவை. கிருஹ கிருத்தியங்களுக்குச் சம்பந்தமான 'கிருஹ்ய' சூத்திரங்களும், வழக்கங்கள் விவகாரங்கள் முதலியவைகளைப் பற்றிய தரும சூத்திரங்களும் கற்பத்திலேயே அடங்கியிருக்கின்றன. இவையல்லாமல், யாகசாலையை அமைப்பதற்கு வேண்டிய க்ஷேத்திர கணித அளவுமுறைகளைப் போதிக்கின்ற 'சுல்வ' சூத்திரங்களும் கற்பத்திற்கு உதவியானவைகளே.

---

*மூன்று அக்கினிகளாவன—1. ஆஹவனீயம், 2. தக்ஷிணாக்கினி, 3. கார்ஹபத்தியம். இவை முறையே வேதியின்(யாக மேடையின்)கிழக்கு தெற்கு மேற்குத் திக்குகளில் இருக்கும்.

இந்தச் சாஸ்திரம் பயில்வதற்கு க்ஷேத்திர கணிதத்தில் நல்ல தேர்ச்சி இருக்கவேண்டும். க்ஷேத்திர கணிதப் பயிற்சிக்கு 'ஜ்யாமிதி' என்றும் பெயர். ஆனதனால், சுல்வசூத்திரங்களில் க்ஷேத்திர கணிதம் போதிக்கப்பட்டிருக்கின்றது. மேனாட்டார் 'ஜ்யாமெட்ரி' (Geometry), 'யூக்லிட்' (Euclid) என வழங்குகிற க்ஷேத்திர கணித நூலின் முதற் காண்டத்து 47-ஆவது சூத்திரவிதியானது சுல்வ சூத்திரங்களின் முதன் முதலிலே விவரிக்கப் பட்டிருக்கின்றது.

கற்ப சூத்திரங்கள் இல்லாவிட்டால் சிரௌதக்கிரியைகளும் ஸ்மார்த்தக் கிரியைகளும் நிலைபெறா. ஆதலின், வேதாங்கங்களிலொன்றாகத் தர்மசாஸ்திரங்களைக் கணிக்காவிடினும் கற்பசூத்திரங்களைக் கணித்திருக்கிறார்கள். இத்தனை வயதில் உபநயனஞ் செய்யவேண்டும் என்பதாதிய வசனங்கள் மாத்திரம் ஸ்மிருதிகளிற் காணப்பெறும். அப்படியே, யாகம் முதலிய வைதிக காரியங்கள் வேதத்தில் விதிக்கப்பெறும். இவைகளைச் செய்யுமுறை ஸ்மிருதிகளிலேனும் வேதங்களிலேனும் அகப்படாது; கற்பசூத்திரங்களிலேயே காணப்பெறும். கற்பசூத்திரங்களிற் கூறிய ஸம்ஸ்காரங்களைச் செய்யா தொழிகிறவன் ஜாதிப்பிரஷ்டனாவன் (இழிவுறுவன்). ஆதலின், தர்மசாஸ்திரங்களினுங் கற்பசூத்திரங்கள் சிறந்தன என்னலாம்.

# 7. ஸ்மிருதிகள்

**வேதத்தின் உபாங்கங்கள்**

வேதங்களின் பொருளைச் சரியாகவும் திட்டமாகவும் தெரிந்து கொள்வதற்கு மேற்சொல்லிய ஆறு அங்கங்களி லல்லாமல் ஸ்மிருதி, புராண இதிஹாஸங்கள், நியாயசாஸ்திரம், மீமாம்ஸா சாஸ்திரம் என்னும் நான்கினிலுங் கூடப் பயிற்சி இருக்கவேண்டும். இந் நான்குவகை நூல்களும் வேதத்தின் "உபாங்கங்கள்" எனப் பெறும்.

**ஸ்மிருதி**

'ஸ்மிருதி' என்னும் சொல்லுக்கு நினைவு, ஞாபகம் என்று அர்த்தம். வேதங்களில் கர்மம், தர்மம், ஸம்ஸ்காரம், ஞானம் முதலிய பற்பல விஷயங்களும், அநேக சாஸ்திரங்களும் கூறப்பட்டிருக்கின்றன. அவற்றுள் தர்மசம்பந்தமான விஷயங்களை யெடுத்து விவரித்து ஒழுங்குபடுத்தி உரைப்பது 'ஸ்மிருதி' எனப்பட்டது. தர்மங்களை விவரிப்பதனால் இதனைத் 'தர்மசாஸ்திரம்' என்பார்கள்.

## தர்மம்

தர்மம் என்பது தாரணம், தரித்தல், தெப்பம், நிலை, உறுதி எனப் பொருள்படத்தக்க வடமொழிப் பகுதியி னின்றும் பிறந்த சொல். இது ஜனசமூகத்தைப் போஷித்து நிலைநிறுத்திக் கடைத்தேற்றுவிக்குந் தன்மையுடையதென்பது சொற்பொருளினாலே விளங்குகின்றது. நீதி என்று சொல்வது இத்தனை நன்மைகளையும் பயக்குமாயினும், நாம் கட்டாயமாகச் செய்தே தீரவேண்டியவைகளைத் 'தர்மம்' என்னுஞ் சொல்லினால் குறிக்கின்றோம். நிலை நிறுத்தும் தன்மையுடையதெதுவோ அதுவே தர்மம். ஜனங்களைக் கட்டிப்பிடித்து ஒருநிலைப் படுத்தி யிருப்பது தர்மமே.

பிராணிகள் பிறந்து வளர்ந்து நிலைகொண்டு சுகமெய்தி நற்கதி யடையும்படி செய்வது தர்மமே. எவருக்கும் எக்காலத்தும் எவ்விதமான தீங்கும் நேரிடாதிருக்கும் பொருட்டே கர்மம் என்பது ஏற்பட்டிருக்கின்றது. இதனை யுள்ளபடி யுணர்ந்து நடப்பவன் எல்லாப் பிராணிகளுக்கும் எப்பொழுதும் நண்பனா யிருப்பன், மனமொழி மெய்களினால் எல்லாருக்கும் இதஞ்செய்து இன்புறுவன். இதுவே சுவர்க்கத்திற்கும் மோக்ஷத்திற்கும் காரணமாயிருப்பது.

அறம் எனப்படுவது இந்தத் தர்மமே. இதைச் செய்வதற்கே எல்லோரும் விரும்ப வேண்டுமென்று முதாட்டி யார் நமக்கு இளமையிலேயே போதித்தனர். தர்மம் அல்லது அறம் என்பது நமது கடமையைத் தெரிவிக்கின்றது. 'தானம்' என்று தர்மத்திற்கு இங்கே பொருள்படுத்தக் கூடாது. தானம் என்பது தர்மத்தில் ஒரு நுண்ணிய பகுதியாகும். தர்மத்தைக் கடலாகவும், தானத்தைக் கிணறாகவும் சொல்லலாமெனின், அவை யிரண்டினுக்குமுள்ள தாரதம்மியம் எளிதிற் புலப்படுமே. அறத்தின் பெருமை தமிழ்நூல்களில் மிக விஸ்தாரமாகக் கூறப்பட்டிருக்கின்றது. சுகதுக்கங்களுக்கெல்லாம் மூலகாரணம் அறமே யென்பது நமது கொள்கை. இப் பிறப்பில் நாம் அனுபவிக்கும் இன்ப துன்பங்களினால் முற்பிறப்பில் நாம் செய்துள்ள அறம் எத்தன்மையதெனத் தெரிகின்றது. இனி மறுபிறப்பில் எய்தத் தக்க பயன் இப்பொழுது நாம் செய்யும் அறவினையால் அறியத் தக்கதாகும். மனிதனை யுய்விக்கத்தக்கது அறமே. அதனைத் தவிர்த்தால் இவ்வுலகத்தில் சுகம் பெறுவதற்கும், மறுமையில் நல்ல கதி யடைவதற்கும் வேறு மார்க்கமில்லை. பாபங்களைப் போக்கி நம்மைப் பரமனுடைய பெருங்கருணைக்குப் பாத்திர மாக்குவது அறமே.

## சாஸ்திரம்

சாஸ்திரம் என்பதற்கு ஆங்கிலத்தில் 'ஸயன்ஸ' (Science) என்று சொல்லுகிற அர்த்தத்தை வழங்கி வருகிறோம். 'ஸயன்ஸ' என்பது மனிதனுடைய அறிவை ஒழுங்கு படுத்தித் தொகுத்துள்ள நூலாகும். அந்த அறிவு புத்திக்கூர்மையுள்ள மனிதர்கள் சிக்க ஆராய்ச்சியினாலும் அனுபவப்பெருக்கத்தினாலும் மனிதருடைய நன்மை தீமைகளுக்குக் காரணமானவை யெனக் கண்டுபிடித்துள்ள இயற்கை விதிகளைப் பற்றிய ஞானமாகும். இன்னது காரியம் செய்தால் நன்மையென்றும், இன்னது செய்தால் தீமையென்றும் மேற்சொல்லிய வகைகளில் அவர்கள் கண்டுபிடித்துள்ள இயற்கை விதிகளின் உண்மையை அவர்களறிந்தவாறு எடுத்துரைப்பன 'ஸயன்ஸ' என்று சொல்லப்பட்ட நூல்கள். அவ்வுண்மைகளைப் போதிப்பதல்லாமல் அந்த நூல்கள் எவ்விதத்திலும் நம்மைக் கட்டுப்படுத்துவதில்லை. அவைகளை யனுசரித்து நடப்பது அவரவரது இஷ்டத்தைப் பொறுத்தது.

சாஸ்திரமென இந்துக்கள் கொண்டாடும் நூல்கள் அப்படிப்பட்டவை யல்ல. மனிதன் இப்படிச் செய்ய வேண்டும், இன்ன சமயத்தில் இன்னமாதிரி நடக்கவேண்டும், எந்தக் காரியத்தைச் செய்யலாம், எந்தக் காரியத்தைச் செய்யக்கூடாது என்று கட்டளையிடுவன இந்து சாஸ்திரங்கள். சாஸனஞ் செய்யுந் தன்மையுடையது என்பதே 'சாஸ்திரம்' என்னும் சொல்லின் பொருள். இந்திய முனிவர்கள் அநாதி காலத்து அனுபவ மிகுதியினாலும் போதத்தினாலும் இயற்கை விதிகளைப் பரிபூரணமாகத் தெரிந்து, அவைகளில் மனிதனுடைய நன்மைக்கு ஏற்றவை இன்னவை என்று எடுத்துக்கூறி, நன்மைக்கு ஏற்காதவைகளை விலக்கித் தள்ளியிருக்கிறார்கள். இவ்வாறு அவர்கள்

விதித்துள்ள காரியங்களைச் செய்யாமலும், விலக்கியுள்ள காரியங்களைச் செய்து கொண்டும் இருப்பவர்களுக்குத் தண்டனைகளும் விதித்திருக்கிறார்கள். செய்வினைகளையும் ஒழுக்க முறைகளையும் நிர்ணயித்து, அவைகளை அநுஷ்டிக்கும்படி இந்துசாஸ்திரங்கள் நம்மைக் கட்டாயப்படுத்துகின்றன.

இதுவே 'ஸயன்ஸ்' என்னும் ஆங்கில சாஸ்திரத்திற்கும் இந்துக்களின் சாஸ்திரத்திற்கும் உள்ள வித்தியாசமாகும். ஸ்மிருதிகள், புராணங்கள், இதிஹாஸங்கள், வேதாங்கங்கள், தத்துவ நூல்கள் ஆகிய இவைகளெல்லாம் இந்துக்களின் கொள்கையின்படி சாஸ்திரங்களேயாகும். இவைகளிற் குறிப்பிட்டுள்ள விதிகளை நாம் அநுசரித்தே தீரவேண்டும், விவரித்துள்ள கர்மங்களைச் செய்தே தீரவேண்டும், எடுத்துக் காட்டியுள்ள முறைகளைக் கைக்கொண்டே தீரவேண்டும்; கையாடியுள்ள ஸங்கேதங்களையும், நியமங்களையும், கணிதங்களையும், இவை முதலான மற்ற அமிசங்களையும் உள்ளவாறே கொள்ளல் வேண்டும். இவைகளைத் தர்க்கிக்கக் கூடாது.

மேற்சொல்லியவையல்லாமல் வேறு பல நூல்களையும் இந்துக்கள் 'சாஸ்திரம்' என்னும் பெயரால் வழங்குகிறார்கள். அவை வித்தியா சம்பந்தமானவை, கல்வித்துறையில் நமக்கு அறிவூட்டத்தக்கவை. அவைகளில் வழங்கியுள்ள பரிபாஷைகளையும், கணக்கு வழக்குக்களையும், வழிவகைகளையும் அவைகளிற் கண்டவாறே நாம் ஏற்றுப் பயிலுவோமானால் அவைகளில் நல்ல தேர்ச்சி பெறுவதற்காகும் என்பதைக் குறிக்கும் பொருட்டு அவைகளும் 'சாஸ்திரங்கள்' என்னும் வகையிற் சேர்க்கப்பட்டன.

## தர்மசாஸ்திரம்

வேதத்திற்கு அடுத்த படியாக இந்துக்களுக்குப் பிரமாணமாக உள்ள நூல் தர்ம சாஸ்திர மாகும். இந்த

நூலின் நோக்கம் மனிதனுக்கு எவ்வகையாலும் இன்பமும் சுகமும் விளைவிப்பதேயாம். இந்த நோக்கங் கொண்டு மனிதனுடைய தன்மையையும், மற்றப் பிராணிகளின் தன்மையையும், உலகத்திலுள்ள வஸ்துக்களின் தன்மையையும், இவ்வுலகுக்கெல்லாம் அதிபதியாயிருக்கிற ஈசுவரனுடைய தன்மையையும் நன்குணர்ந்து, அறிவிலும் அநுபவத்திலும் முதிர்ந்த மகரிஷிகள் மனிதன் நடந்து கொள்ள வேண்டிய விதத்தை வரையறுத்து, தர்மசாஸ்திரமெனச் செய்திருக்கிறார்கள். மனிதன் எந்தக் காலத்தில் எந்த இடத்தில் எந்தச் சந்தர்ப்பத்தில் எந்த நிலைமையில் எவ்விதமாக விவகரித்தால் அவனுக்கு இன்பம் விளையுமென்று ஆராய்ந்தறிந்து விதிகளை ஏற்படுத்தியிருக்கிறார்கள். ஆனதனால், எந்த நிலைமையில் உள்ளவனுக்கும் எந்தச் சந்தர்ப்பத்தில் உள்ளவனுக்கும் ஒழுக்கமுறை இன்னதென்று தர்ம சாஸ்திரம் போதிக்கின்றது. இன்பமும் சுகமும் நிலைத்திருப்பதில்லை யென்பதை நாம் அநுபவத்திற் கண்டிருக்கிறோம். இப்படிப்பட்ட நிலையில்லாத இன்பத்தையும் அற்ப சுகத்தையும் எண்ணி இந்த விதிகள் ஏற்பட்டனவல்ல. எவ்விதமாக நாம் நடந்துகொண்டால் காலக்கிரமத்தில் சாசுவதமான இன்பம் வாய்க்குமோ அந்த வழிகளை தர்ம சாஸ்திரங்களிற் காட்டப்பட்டிருக்கின்றன. ஆகையால், தர்ம சாஸ்திரங்களிற் சொல்லும் விதிகளை அநுசரிப்பது இப்போதைக்குக் கஷ்டமாக நமக்குத் தோன்றியபோதிலும், அவை நாளடைவில் பெருநன்மை பயக்கத்தக்கனவென்பதை யுணர்ந்து நாம் சோராமல் அவ் விதிகளை யநுஷ்டிக்கவேண்டும்.

மாறாமலும் அழியாமலும் இருக்கப்பட்டவன் ஈசுவரன் ஒருவனே யாதலால், குன்றாத பேரின்பத்தை நாடுகிற நாம்

அந்த ஈசுவரனுக்கு உவப்பாக நடந்து, அவனுடைய பதத்தை அடையவேண்டியது அவசியமாகும். ஆதலால், ஈசுவரனுடைய பதத்தை நாம் அடைவதற்குச் தருமனூற் சாரம் சாதனமாகக் கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்னும் நான்கு மார்க்கங்களை வகுத்து, அவை ஒவ்வொன்றையும் நாம அநுஷ்டிக்க வேண்டிய வகைகளைத் தர்ம சாஸ்திரங்கள் நமக்கு விதிவடிவமாக எடுத்துக் கூறியிருக்கின்றன. இவ்விதிகள் அநாதியான வேதத்தைப்போலவும், ஸாதுக்களின் சிஷ்டாசாரத்தைப் போலவும் நமக்கு முக்கியப் பிரமாணங்களாம். இவை தர்மத்திற்கு ஆதாரமானவை.

இந்த விதிகளின் பெருமையைத் தெரிந்துகொள்வதற்கு ஈசுவர தத்துவம் இன்னது, ஜீவ தத்துவம் இன்னது, பிரகிருதி தத்துவம் இன்னது என்று நாம் விசாரித்துத் தெளியவேண்டும் இவைகளைப் பற்றி மற்றோரிடத்திற் சுருக்கமாகச் சொல்லுவோம். அதற்கு முன்னால் இங்கே தெரிந்துகொள்ளவேண்டிய விஷயம் யாதெனில்——ஈசுவரன் எல்லாப் பிராணிகளுக்கும் தந்தை போன்றவன், நாம் எல்லாப் பிராணிகளிடத்தும் சகோதரத்தன்மைகொண்டு ஒழுகவேண்டும், உலகமென்னும் ஓர் உடலில் நாம ஓர் அங்கம் போன்றவர்களாயிருக்கிறோம்; ஆதலின். காலில் தைத்த முள்ளினால் உடம்பெல்லாம் வாதைப் படுவதுபோலவும், கண் குளிர்ச்சி பொருந்தியிருந்தால் தேக முழுதும் குளிர்ச்சி பொருந்துவது போலவும், நம்முடைய இன்ப துன்பங்கள் உலக முழுவதையும் வாதிக்கும்; ஒரு குளத்தில் எறிந்த சிறு கல்லினால் ஏற்பட்ட சிறிய அலையானது விரிந்து விரிந்து குளத்திலுள்ள நீர் முழுதும் பரவிக் கரையைச் சார்வதுபோல, உலகத்தில் ஒவ்வொரு பிராணியினுடைய இன்ப துன்பங்கள்

மற்றெல்லாப் பிராணிகளையும் தப்பாமற் சாரும்—என்பதாம். இவ் வுண்மையை நாம் மறவாமல் எப்பொழுதும் ஞாபகத்தில் வைத்துக்கொள்ளவேண்டும்.

ஒரு பெரிய திரளில் நாம் ஒரு சிறு துளியாகச் சேர்ந்திருக்கிறோம். நம்முடைய நடவடிக்கையினால் அந்தத் திரளிற் சேர்ந்த மற்றத் துளிகளுக்கும், பொதுவாகத் திரள் முழுமைக்கும் நன்மை யுண்டாகத் தக்கவாறு நாம் நடந்துகொள்ளவேண்டும். ஆனால், இவ்வளவு பெரிய ஆலோசனை செய்து, மேற் சொல்லியவாறு அனைவருக்கும் நன்மையானது எதுவென்று தெரிந்து நடக்குந் திறமை நமக்கு இல்லை. தாற்காலிகமாக நமக்கு நன்மையாகத் தோன்றுகிற காரியமொன்று நாளடைவில் நமக்கே தீமையாகவும், அதனால் உலக முழுமைக்குந் தீமையாகவும் பயன்படுதல் கூடும். அறிவுக் குறைவினாலும் தீர்க்க திருஷ்டியில்லாமையினாலும், நாம் நன்மையென எண்ணிச் செய்யுங் காரியம் நமக்கும் பிறருக்கும் தீமையாகத் திரிதல் கூடும். இப்படிப்பட்ட மோசங்கள் நேராவண்ணம் உலகத்தைப் பாதுகாக்கும் பொருட்டு அவரவர் செய்ய வேண்டிய காரியங்களைத் தர்ம சாஸ்திரங்கள் நிர்ணயித்திருக்கின்றன. ஆகலின், அந்த விதிகளைத் தர்க்கிக்காமல் நாம் கைக்கொண்டு நடக்கக்கடவோம். தனித்தனியே ஒவ்வொரு மனிதனுடைய க்ஷேமத்தையும் உலகம் முழுமையினுடைய க்ஷேமத்தையுங் கருதித் தர்மசாஸ்திரங்களில் ஸம்ஸ்காரங்கள், ஒழுக்கமுறை, விவகாரம், வர்ணாசிரம தர்மம் முதலான அநேக விஷயங்கள் கூறப்பட்டிருக்கின்றன. சுருக்கிச் சொல்லின், இலௌகிக விவகார முறைகளையும் பாரமார்த்திக சாதனங்களையுங் கூறுவன ஸ்மிருதிகள்.

## பிரபல ஸ்மிருதிகள்

ஸ்மிருதிகள் பல உள. அவற்றுள் முக்கிய மானவை நான்கு: 1. மனு ஸ்மிருதி, 2. யாஜ்ஞவல்க்கிய ஸ்மிருதி, 3. சங்க லிகிதர்களின் ஸ்மிருதி, 4. பராசர ஸ்மிருதி. இவை முறையே கிருதயுகம், திரேதாயுகம், துவாபரயுகம், கலியுகம் என்னும் நான்கு யுகங்களுக்குப் பிரமாணங்களாகும். அந்தந்தக் காலத்திற்கு அவசியமாயுள்ள மாறுபாடுகளை மாமுனிவர்கள் அவ்வப்போது செய்வார்கள். ஒரு யுகத்திற்கு ஒரு ஸ்மிருதி பிரமாண மெனினும், அதனில் விவரிக்காத விஷயங்களை வேறு ஸ்மிருதிகளினால் தெரிந்து கொள்ள வேண்டும். இவ்வாறு, மனுஸ்மிருதி எல்லாக் காலங்களிலும் பிரபல பிரமாணமே யாகும். விவகார விஷயங்களெல்லாம் யாஜ்ஞவல்க்கிய ஸ்மிருதியில் நன்கு விவரிக்கப் பட்டிருக்கின்றன. இந்துக்களின் 'ஸிவில்' விவகாரச் சட்டமாக ஆங்கில அரசாங்கத்தில் வழங்கும் 'இந்து லா' வுக்கு இந்த யாஜ்ஞவல்க்கிய ஸ்மிருதியே முக்கியமான ஆதாரமாகக் கொள்ளப்பட்டிருக்கிறது.

ஆதி தர்மசாஸ்திர கர்த்தராகிய மனுவின் ஸ்மிருதி முதன் முதலில் வெகு விரிவாக இருந்தது. அதைக் காலாறு

**மனு ஸ்மிருதி**

குணமாக அப்போதைக் கப்போது முனிவர்கள் சுருக்கி யெழுதி வழங்கி யிருக்கிறார்கள். இப்பொழுதுள்ள மனுஸ்மிருதி 12 அத்தியாயங்களாகப் பிரிக்கப்பட்ட 2685 சுலோகங்களுள்ளது. அத்தியாயக் கிரமமாக அதனில் அடங்கிய விஷயங்கள் வருமாறு:—

1. பிரபஞ்சோற்பத்தி முதலியன; 2. பிரம்மசரிய தர்மம்; 3 கிருகஸ்த தருமம்; 4. ஸ்நாதக தருமம் (கல்வி பயின்ற பின்னர் கோடி ஆசானிடத்து விடை பெற்றுத் திரும்பத் தன் இல்லமடை

வோன் ஸ்நாதகன்); 5. உணவு, உணவின் தூய்மை, ஸ்திரீகளின் தருமம்; 6. வானப் பிரஸ்தாச்சிரமம், சந்நியாசாச்சிரமம்; 7. இராஜ நீதி; 8. நியாய விவகாரங்கள்; 9. ஸ்திரீ புருஷர்களுக்கான சாசுவத விதிகள், ஸொத்துரிமைமுறை, குற்றங்கள், தண்டனைகள், அரசியல்; 10. ஆபத் தருமங்கள்; 11. பிராயச்சித்த விதிகள்; 12. பாரமார்த்திக விஷயங்கள் (ஜன்மாந்தரம், ஆத்தும ஸாம்ராஜ்யம் முதலியன).

இந்த நாளில் இந்துக்களின் விவகாரத்தை நிர்ணயிப்பதற்கு முக்கியமான ஆதாரமாக நமது ஆங்கில அரசாங்கத்தார் கொண்டிருக்கும் யாஜ்ஞவல்க்கிய ஸ்மிருதி மூன்று அத்தியாயங்கள் கொண்டது. அவைகளில் விவரிக்கப் பெற்றிருக்கும் விஷயங்களாவன:—

யாஜ்ஞவல்க்கிய ஸ்மிருதி

1. வர்ணாச்சிரம தர்மங்கள், புஜிக்கத்தக்க வஸ்துக்கள், தானம், பலிகள், கிரியைகள், இராஜதர்மங்கள்; 2. விவகாரம், நீதிபரிபாலன முறை, குற்றங்கள், தண்டனைகள்; 3. பிராயச்சித்தங்கள், ஆபத் தருமங்கள், வானப் பிரஸ்தாச்சிரமம், சந்நியாசாச்சிரமம், ஜீவாத்துமா, பரமாத்துமா, முக்திமார்க்கம், யோக சித்திகள் முதலியன.

யாஜ்ஞவல்க்கியரின் கொள்கைப்படி க்ஷேத்திரங்கள், கிரகணம் முதலிய காலங்கள், சாஸ்திரத்தில் விதித்த செய்வினைகள், ஆஸ்திக புத்தி, யாகத் திரவியங்கள், ஸத்பாத்திர தானம் முதலியவும் பிறவும் தர்மத்திற்கு அங்கங்களாம்.

தர்மத்தை வெளியிடும் நூல் தர்ம சாஸ்திர மாகும். வேதம், ஸ்மிருதி, ஸூத்திரம், புராணம், ஆகமம் முதலியனவெல்லாம் தர்மத்தை வெளியிடுகின்றன வாயினும், 'தர்ம சாஸ்திரம்' என்னும் பெயர் மனுஸ்மிருதி முதலியவைகளுக்கே சிறப்புப் பெயராக வழங்கப்பெறும். வேதார்த்தங்களை எல்லாரும் எளிதில் அறியும்பொருட்டு மனுமுதலியோர் கற்பந்தோறும் ஸ்மரித்து வெளியிட்ட வழிநூல்களானமையின் இவை 'ஸ்மிருதிகள்' எனப் பட்டன.

# 8. ஸம்ஸ்காரங்கள்

'ஸம்ஸ்காரம்' என்பது திருத்தம், அழுக்ககற்றல், தேற்றல், விளக்கல், பவித்திர மாக்கல் எனப் பொருள்படும். மனிதனுடைய தேகத்தையும் மனத்தையும் சுத்தப்படுத்துவதற்கும், ஞானுபிவிருத்தி யடைந்து முக்தி பெறுவதற்கு ஏற்றவாறு அவைகளைத் திருத்தி யமைப்பதற்கும் ஏற்பட்ட காரியங்கள் ஸம்ஸ்காரங்கள் எனப்படுகின்றன. இந்தத் திருத்தங்கள் சிற்சில கிரியைகளினுலும், மந்திரோச்சாரணங்களினுலும், தந்திரங்களினுலும் (கைகிரியைகளினுலும்), அபிநயங்களினுலும், திரவியங்களினுலும் நிறைவேற்றப்படுகின்றன. ஸம்ஸ்காரங்களில் உபயோகிக்கும் மந்திர தந்திரங்களும் திரவியங்களும் பயனற்றனவெனத் தோன்றக்கூடும். அவை அவசிய மில்லையெனச் சிலர் அவைகளைத் தவிர்க்கக்கூடும். ஆயினும், அவைகளினுல் விசேஷமான பிரயோஜனங்கள் உண்டு; அவைகளினின்றும் சில சக்திகள் உற்பத்தியாகின்றன; அந்தச் சக்திகளினுல் நாம் கோரிய பயன் விளைகின்றது என்பதை அதற்குரிய இடத்தில் விவரித்துச்சொல்வோம். அவைகளுக்கு அப்படிப்பட்ட சக்தி இருப்பதனுல் அவைகளைக்கொண்டு நம்மவர்கள் மனிதனைச் சீர்திருத்துவதற்கு 'ஸம்ஸ்காரங்களை' ஏற்படுத்தி யிருக்கிறார்கள். ஸம்ஸ்காரங்கள் அநேகம் இருக்கின்றன. அவற்றுள் முக்கியமானவைகளை இங்கு எடுத்துச் சொல்வோம்.

## சர்ப்பாதானம்

இது மனிதன் தன்னைப்போன்றதோர் வடிவத்தைச் சிருஷ்டிசெய்யுங் காரியம். சிருஷ்டிகாரியமானது பெருந்தகைமை யுடைய தேவகாரிய மாகும். அதனைப் புனிதமாக்கும் பொருட்டு இந்தக் கிரியை செய்யப்படுகின்றது.

ஸிருஷ்டி காரியம் அற்பமானதென்று நினைக்கலாகாது. ஸ்திரீ புமான்கள் பரிசுத்தமான எண்ணத்தோடே இந்தக் காரியஞ் செய்யத் தலைப்படவேண்டும். கேவல விஷயானுபவத்தின் பொருட்டு அவர்கள் இதற்கு ஏற்படக்கூடாது. சிசுவொன்று உற்பவிக்க வேண்டுமென்னும் பிரார்த்தனையோடு இது செய்யத்தக்கது.

## பும்ஸவனம்

சிசுவின் தேகமும் பிராணனும் தாயாரின் கர்ப்பத்தில் உண்டாகின்றன. அது புருஷப் பிரஜையாகப் பிறக்கவேண்டுமென்று கர்ப்பத்தின் மூன்றாம் மாதத்தில் இந்தக் கிரியை செய்வார்கள். கர்ப்பம் தெளிவாகத் தெரியுமுன் பூசநக்ஷத்திரத்தில் பொன் வெள்ளி இரும்பு முதலியவற்றால் சிறிய புருஷவுருச் செய்து, அக்கினியிற் சிவக்கக் காய்ச்சி, நான்கு பலம் பாலில் தோய்த்து, அந்தப் பாலைக் கர்ப்பிணிக்கு அருந்துவார்கள். வெண்ணாயுருவிவேர், ஜீவகம், இரிஷபகம், முள்ஜவனம் ஆகிய இவைகளை யரைத்துத் தண்ணீரிற் கலக்கி யருந்தச் செய்வார்கள். ஹஸ்தம், மூலம், சிரவணம், புனர்ப்பூசம், பூசம், மிருகசீர்ஷம் ஆகிய இவை புருஷ நக்ஷத்திரங்களாகையால் இவைகளில் பும்ஸவனம் செய்யத் தக்கது. இப்படிக் கர்ப்பந்தோறுஞ் செய்வார் சிலர்.

## ஸீமந்தோன்னயனம்

ஸீமந்தம் = உச்சந் தலைமயிரை வகிர்தல்; உன்னயனம் = ஒழுங்குபடுத்தல் ; மந்திரபூர்வகமாகக் கர்ப்பிணியின் தலைமயிரை வகிர்ந்து ஒழுங்குபடுத்துவது. கர்ப்பத்திற்குத் தீமை நேரிடாமலிருக்கும் பொருட்டும், சிசுவானது சௌகரியமாகவும் க்ஷேமமாகவும் கர்ப்பத்தில் விவகரிக்கத்தக்கவாறு கர்ப்பிணி அமைதியாக மூச்சுவிடுவதற்கு அனுகூலஞ் செய்யும் பொருட்டும் மந்திரோச்சாரணத்துடன் இந்தக் கிரியை

செய்வார்கள். இதனால் கர்ப்பத்திலுள்ள சிசுவின் அவயவங்கள் நன்றாக அமையப் பெறும். இது கர்ப்பத்தின் நான்காவது, அல்லது ஆறாவது, அல்லது எட்டாவது மாதத்திற் கணவனாற் செய்யப்படும். இது அவசியமான ஸம்ஸ்காரம். புருஷன் தேசாந்தரம் போயிருந்தாலும், மரித்தாலும், கிட்டின தாயாதிகளைக் கொண்டு செய்விக்க வேண்டியது.

இது வரையிற் சொல்லிவந்த மூன்று ஸம்ஸ்காரங்களும் தாயாருக்கும் சிசுவுக்கும் க்ஷேம முண்டாகும் பொருட்டுச் செய்யப்படுவன. சிசுவின் சரீரம் நன்றாக வளர்வதற்கு அநுகூலமாக மேற்கண்ட ஸம்ஸ்காரங்கள் தாயாருக்கு ஸ்வாசலனங்களை (மூச்சின் இயக்கத்தை) உண்டுபண்ணுகின்றன.

## ஜாதகர்மம்

இது குழந்தை பிறந்தவுடனே தந்தையினால் செய்யப்படுவது. புத்ரோற்பத்தியினால் தந்தை சந்தோஷித்து நீராடிக் குழந்தையின் தீர்க்காயுளையும் ஞானத்தையும் புத்தியையும் க்ஷேமத்தையும் கோரினவனாய்த் தானங்கள் செய்ய வேண்டும். பின்பு, தேனையும் நெய்யையுங் கலந்து சிறிய தங்கக் கரண்டியி லெடுத்துக் குழந்தையின் நாக்கில் தடவச் செய்ய வேண்டும். அந்தத் தருணத்தில் உச்சரிக்க வேண்டிய மந்திரங்கள் சிலவுள.

## நாமகரணம்

குழந்தை பிறந்த 10, 11, 12, 16, அல்லது 101- ஆம் நாளில் அதற்குப் பெயரிடுவது. இதுவும் மந்திரத்தோடு கூடிய ஸம்ஸ்காரமே. இவ்வாறு இடும் பெயர் அந்தந்த ஜாதிக்கு உரியதாகவும், மங்கள வாசகமாகவும், பலத்தைக் குறிப்பதாகவும், புஷ்டியைத் தெரிவிப்பதாகவும் இருக்க வேண்டும். ஸ்திரீப் பிரஜையானால் அதன் பெயர் எளிதில்

உச்சரிக்கக் கூடியதாகவும், கடுமையற்றதாகவும், தெள்ளிய பொருள் அமைந்ததாகவும், இரம்மியமாகவும், மங்களகரமாகவும், ஆசீர்வாத வாசகத்தைப்போலக் கடையெழுத்து நெடிலாகவும் இருத்தல் வேண்டும். குலதெய்வத்தின் பெயரையும் முன்னோர்களின் பெயரையும் வைப்பது நன்று.

## நிஷ்கிரமணம்

குழந்தை பிறந்தபின் மூன்றாவது சுக்கிலபக்ஷ திரிதியை தினத்தில் குழந்தையை வெளியே எடுத்துக்கொண்டு போய்ச் சந்திர தரிசனஞ் செய்வித்தல்; அல்லது, மூன்றாம் மாதத்திலாவது நான்காம் மாதத்திலாவது சூரிய தரிசனஞ் செய்வித்தல். இரண்டுஞ் செய்விக்கலாம்.

## அன்னப் பிராசனம்

ஆறாம் மாதத்திலாவது, எட்டாம் மாதத்திலாவது, அல்லது பல் முளைத்த உடனேயாவது திரவ ரூபமான உணவைத் தவிர்த்து அன்ன ரூபமான உணவைக் குழந்தைக்கு மந்திர பூர்வகமாக உண்பித்தல்.

## சூடாகரணம்

இரண்டாம் ஆண்டிலாவது மூன்றாம் ஆண்டிலாவது குடுமி வைத்தல். கர்ணவேதனம் என்பது காது குத்தும் ஸம்ஸ்காரம். இது முதல் ஆண்டு நிறைவுக் கொண்டாட்டக் காலத்தில் தென்னிந்தியாவில் செய்யப்படுகிறது. சாஸ்திரீயமான ஸம்ஸ்காரங்களில் இது சொல்லப்படவில்லை. ஆயினும், இது வழக்கத்திலிருக்கிறது.

இது வரையிற் சொல்லி வந்த ஸம்ஸ்காரங்களெல்லாம் குழந்தையின் சரீரம் நேர்மையாக அமையும் பொருட்டாகும். பீஜத்திலும் கர்ப்பத்திலும் உண்டான பாபம் இந்த ஸம்ஸ்காரங்களினல் சமன மடைகின்றது. இவையெல்லாம் இளமைப் பருவத்திற்கு

(பாலியாவஸ்தைக்கு) உரியன. உபநயனம் முதற்கொண்டு குமரப் பருவம் ஆரம்பமாகின்றது. குழந்தைப் பிராயத்திற்குரிய விளையாட்டுக்களை விட்டுக் கல்வியில் மனத்தைச் செலுத்துங் காலம் (அத்தியயன காலம்) இதுவாகும். குழந்தை பெரியவனாகி உலகத்தில் விவகரிப்பதற்கு ஏற்ற யோக்கியதையைச் சம்பாதித்துக் கொள்ளுங் காலம் இந்தக் குமரப் பருவமே.

## உபநயனம்

'உபநயனம்' என்ற சொல்லுக்கு ஆசிரியருடைய அண்மையிற் சிறுவனைச் சேர்த்தல் என்று அர்த்தம். ஆசிரியர் அவனுக்குக் காயத்திரி மந்திரத்தை உபதேசித்து, மாணவனென்று அவனைப் பருத்தறிவதற்கேற்ற ஆடைகளையும் அடையாளங்களையும் அளித்து, பூணூலும் போடுவிக்கிறார். மந்திரோபதேசம் செய்யுமுன் ஆசிரியர் மாணவனை நோக்கிச் சில வினாக்கள் கேட்டு, அவைகளுக்கு அவனுடைய விடைகளை யேற்றுப் பின்பு அவன்மீது ஜலத்தைத்தெளித்து, சில விதி வசனங்களையும் மந்திரங்களையும் உச்சரிக்கிறார். மாணவனுடைய மார்பில் அவர் தம் கையை வைத்து,

> என்னுடைய ஆஜ்ஞைக்குள் உன் இதயத்தை வகிக்கின்றேன். உன்னுடைய மனம் எனது மனத்தைத் தொடரட்டும். எனது வார்த்தையிற் பூரண விசுவாஸம் வைத்து நீ சந்தோஷிப்பாயாக. பிருஹஸ்பதிபகவான் உன்னை என்னுடன் சேர்ப்பிப்பாராக

என்று பொருள்படுமாறு சொல்லுகிறார். பின்னர்க் காயத்திரி மந்திரத்தை யுபதேசிக்கிறார். இதுமுதல் அவன் இரண்டாம் முறை பிறந்தவனென மதிக்கப்படுகிறான்.

உபநயன ஸம்ஸ்காரம் 7-ஆம் வயதிலிருந்து 16-ஆம் வயது வரையில் செய்யத்தகும். பூணூலானது மூன்று முடிச்சுப் போட்ட மூன்று இழைகளுள்ளது. பிரம்மசாரியானவன்

ஸாத்துவிகம்.—வெளுப்பு, ஞானம், அருள், தவம், பொறை, வாய்மை, மேன்மை, மோனம், ஐம்பொறியடக்கல் முதலியவாம்.

இராஜஸம்.—சிவப்பு, மனவூக்கம், ஞானம், வீரம், தவம் தருமம், தானம், கல்வி, கேள்வி முதலியவாம்.

தாமஸம்.—கருமை, பேருண்டி, நெடுந்துயில், சோம்பு, நீதிவழு, ஒழுக்கவழு, வஞ்சம், மறதி, பொய், கோபம், காமம், கொலை முதலிய அசுரத்தன்மைகளாம்.

இவையே முக்குணங்கள் என வழங்கப்படுவன. இவை யொவ்வொன்றிலும் ஸத்துவ ரஜஸ் தமோ குணங்களுண்டு. எப்படியெனில், ஸத்துவத்தில் ஸத்துவம், ஸத்துவத்தில் இராஜஸம், ஸத்துவத்தில் தாமஸம் என்பது போலவாம். இந்தக் குணங்கள் ஒருவனிடத்தில் தனித்தும் கலந்தும் ஒன்றோடொன்று பின்னப்பெற்றும் நிகழும். இவைகளுள் எந்தக் குணங்களை எவ்வளவில் அடக்கி, எந்தக் குணங்களை வளர்த்தால் உயர் பதவி யடைவிப்பதற்காகு மென்பதை யெண்ணிக் குடும்பபதியானவன் குழந்தைப் பருவத் துள்ளவனைப் படிப்படியாகப் பழக்கவேண்டியவ னாகிறான்.

பழக்கமாவது ஒரு குணத்தைக் கைக்கொண்டு நடத்தல். அதுவே அந்தக் குணத்தின் வியாபாரம் அல்லது தொழில் எனப்படுவது. குணத்திற்குத் தக்கபடி தொழில் அமைகின்றது. தொழிலினால் குணம் பலப்படுகின்றது. இவ்வாறு குணமும் தொழிலும் ஒன்றுக்கொன்று ஸாதகமா யிருக்கின்றன. ஆதலால், குழந்தைகளின் இயற்கைக்குத் தக்கபடி குடும்பபதியானவன் தொழில்களை யமைத்து அவர்களை வளர்க்கிறான். இயற்கையில் அமைந்துள்ள குணம் ஒரு நாட் பழக்கத்தினால் மாறாது; ஓர் ஆண்டிலும் மாறாது; ஒரு ஜன்மத்திலும் மாறாது. அது அநேக பிறப்புக்களில் கொஞ்சங் கொஞ்சமாக மாறித் தேறி

உத்தம குணத்தில் நிலை கொள்ளவேண்டும். இஃது எளிதில் ஸாதிக்கத் தக்க காரியமன்று.

## நான்கு வர்ணங்கள்

ஒருவனுக்கு உற்றதே மற்றவர்க்கும் ஆகும். மானிடர்களெல்லாரும் மேற் சொல்லிய முக் குணங்களாற் கட்டுண்டவர்களே. குடும்ப பதியைப் போலவே மானிட குலபதியும் விவகரிக்க வேண்டியவராவர். மானிட வர்க்க மென்பது மிகப் பெருங் குடும்பம் அதனிலடங்கிய மனிதர்களை மெல்ல மெல்லப் பழக்கி மேன்மை படைவிப்பதற்கான பிரயாசை மானிட குலபதிக்கு அதிகமாகும். அவர் முக் குணங்களின் தன்மை, பக்குவம், பரிணாமம், அவைகளுக்குரிய தொழில் முதலான நுண்ணிய அம்சங்களை யெல்லாம் நன்குணர்ந்தவராகவேண்டும். இவ்வாறு உணர்ந்த குலபதி மானிடராசியை 1. பிராம்மணர், 2. க்ஷத்திரியர், 3. வைசியர், 4. சூத்திரர் என்னும் நான்கு வர்ணங்களாகப் பிரித்து, அவர்களுக்கேற்ற தொழில்களையுங் கற்பித்தார். மானிடர் மாத்திரமேயல்லாமல் மற்றெல்லாப் பிராணிகளுமே முக் குணமயமாகவே இருக்கின்றமையின், மேற் சொல்லிய பாகுபாடு எல்லாப் பிராணிவர்க்கங்களுக்கும் பொருந்தும்.

இவ் வர்ணங்க ளமைந்த தொரு ஜன சமூகத்தை ஒரு புருஷனாக உருவகப்படுத்தினால், நான்கு வர்ணங்களும் முறையே வாக்கு, புஜம், ஊரு, பாதம் என்பனவாம். இவ் வங்கங்களில் ஒன்று உயர்ந்தது, மற்றொன்று தாழ்ந்தது எனவாது புரிதல் தகுதியாகுமோ? ஓர் அங்கம் மற்றோர் அங்கத்தை வெறுத்துப் பகைத்தல் முறையோ? இவை இவ்வொன்றும் தேகத்திற்கு அவசியமானவைகளே யன்றோ ஓர் அங்கத்தின் காரியத்தை மற்றோர் அங்கம் செய்ய மேற்

கொள்வது ஏற்குமோ? இவைகளுக்குள் கலக மேற்படு வது தேகத்திற்குத் தீமையின் பொருட்டாகு மென்பது திண்ணம். உவமானமாகக் கூறிய தக வுறுப்புக்களிற் காண்பது போலப் பிராம்மணாதி நான்கு வர்ணங்களிலும் வேற்றுமை காணப்பெறும். அந்த வேற்றுமை அவரவர் நிர்வகிக்கத்தக்க பொறுப்பிலுள்ள வேற்றுமையேயாம். உலக விவகாரத்தில் பிராம்மண வர்ணத்தாருக்கே பொறுப்பு அதிகம், நிர்ப்பந்தம் அதிகம், சிரமம் அதிகம். அந்தப் பொறுப்பு மற்றவர்ணத்தவர்களுக்குப் படிப்படியாகக் குறையும்.

## தொழில்கள்

எல்லாவற்றையும் இயக்கும் இயற்கைக் குணங்களென மேலே கூறிய ஸத்துவம் இராஜஸம் தாமஸம் என்னும் மூன்றையும் முறையே நன்மை, சுறுசுறுப்பு, இருள் எனப் பொதுப்படக் குறிக்கலாம். பிராம்மணனிடத்தில் மற்றக்குணங்களைவிட ஸத்துவம் மேம்பட்டு விளங்கும். இதன் பயனாகச் சமம், தமம, தவம், சௌசம், பொறுமை, நேர்மை, ஞானம், விஞ்ஞானம், ஆஸ்திக்கியம் என்னும் இவை பிராம்மணனுக்கு இயற்கையில் அமையுங் கர்மங்களாம். க்ஷத்திரியனிடத்தில் ஸத்துவத்தை அடக்கிக்கொண்டு இராஜஸம் மேம்பட்டிருக்கும். இதன்பயனாகச் சௌரியம், பராக்கிரமம், தைரியம், சாமர்த்தியம், போரிற் புறங்காட்டாமை, ஈகை, அதிகாரம் என்னுமிவை க்ஷத்திரியனுக்கு இயற்கையிலமையுங் கர்மங்களாம். வைசியனிடத்தில் தாமஸத்தை யடக்கிக் கொண்டு இராஜஸம் மேம்பட்டிருக்கும். இதன்பயனாகக் கிருஷி, கோரக்ஷணம், வாணிஜ்யம் என்னுமிவை வைசியனுக்கு இயற்கை யிலமையுங் கர்மங்களாம். சூத்திரனிடத்து இராஜஸத்தை யடக்கிக் கொண்டு தாமஸம் மேம்பட்டிருக்

கும். இதன் பயனாக மற்ற வர்ணத்தார்க்குப் பரிசரிவை சூத்திரனுக்கு இயற்கையி லமையுங் கர்மமாம். இவ்வாறு குணத்தையுங் கர்மத்தையும் ஆதாரமாகக் கொண்டு நான்கு வர்ணங்கள் வகுக்கப்பட்டன.

## நான்கு ஆச்சிரமங்கள்

ஜனசமூகத்தைக் காத்து வளர்த்துக் கடைத்தேற்றுவதற்கென நான்கு வர்ணங்களை அமைத்திருப்பதுபோல மனிதனுடைய சக்தியையும் திறமையையும் யோக்கியதை யையும் வளர்க்கும்பொருட்டுச் செய்துள்ள ஏற்பாடு ஆச்சிரம தர்மம். இம் முறையின்படி ஒவ்வொருவனும் உலக விவகாரத்திற் கீர்த்தி பெறலும், பாரமார்த்திக சுகமெய் தலும் சாத்தியமாகும். இதில் அவன் படிப்படியாக அதிக யோக்கியதையும் திறமையும் பெறுகிறான். இந்தக் கிரம சிகைடியில் நன்றாகப் பழகித் தேறுகிறவன் இம்மையிலும் மறுமையிலும் இன்புற்றிருப்பான். இவ்வளவு பெரும்பயன் அடைவிக்கும்பொருட்டு மனிதனுடைய வாழ்நாளை நான்கு ஆச்சிரமங்களாகப் பிரித்திருக்கிறார்கள். 'ஆச்சிரமம்' என்பது நிலை. அந் நிலைகளாவன: 1. பிரம்மசரியநிலை, 2. கிருகஸ்த நிலை, 3. வானப்பிரஸ்தநிலை, 4. ஸந்நியாஸநிலை. இவை முறையே ஒன்றைவிட வொன்று வயதிலும் அநுபவத்திலும் நோக்கத்திலும் பொறுப்பிலும் உயர்ந்தது. முதலாம் நிலையிலுள்ள பிரம்மசாரி என்பவன் ஆசானையடுத்து, விரதம் மேற்கொண்டு, கல்வியயிலும் மாணவன். இரண்டாம் நிலையிலுள்ள கிருகஸ்தன் விவாகஞ் செய்துகொண்டு மனைவியோடிருந்து இல்லறம் நடத்தும் இல்வாழ்வான். மூன்றாம் நிலையிலுள்ள வானப் பிரஸ்தன் வீட்டைவிட்டு மனைவியுடன் கானகமடைந்து தவம்புரிவோன். நான்காம் நிலையிலுள்ள சந்நியாசி

உலக விவகாரங்களைத் துறந்து நிவிருத்திமார்க்கத்தில் முயற்சிப்பவன். இவ் வாச்சிரமங்களை ஒன்றின்பின் ஒன்றாக ஒழுங்காக மேற்கொள்ளல் வேண்டும். ஓர் ஆச்சிரமத்துத் தர்மங்களை யநுஷ்டித்துத் தேர்ந்து, அடுத்த ஆச்சிரமத்தைக் கைக்கொள்ளலே முறையாம். பிரம்மசாரியா யிருந்து சந்நியாச ஆச்சிரமத்தை மேற்கொள்வது அருமையான சம்பவம். அப்படித் துறவறம் பூணுகிறவர் சந்நியாசிக்குரிய உபதேசங்களைப் பெறுவதில்லை. அவர், சுகரையும் குமார ரிஷிகளையும்போல, பாலப் பிரம்மசாரி அல்லது 'நைஷ்டிக பிரம்மசாரி' எனப்படுவர். முறைதுறை யில்லாமல் துறவறம் மேற்கொள்வது தவறு. இனி அந்தந்த ஆச்சிரமத்துக்குரிய நியமங்களைச் சிறிது விவரிப்போம்.

## பிரம்மசாரி

ஆசானிடத்துச் சிறுவனை ஒப்புவிக்கும் உபநயன ஸம்ஸ்காரத்தி லிருந்து பிரம்மசரியாச்சிரமம் தொடங்கி, அவன் கல்விபயின்று தேர்ந்து ஆசானிடத்து விடைபெறு கிறவரையில் நீடிக்கின்றது. இந்தப் பருவத்தில் மாணவன் ஆசானுடனே வசிக்கக் கடவன். அவன் அருணோதயத்திற்கு முன் படுக்கையைவிட் டெழுந்து, ஸ்நானஞ் செய்து, சூரியோதயமாகும் வரையில் கால யநுஷ்டானங்களைச் செய்து கொண்டிருக்கவேண்டும். இல்லறத்தாரிடம் தோன்றி இரந் துண்ணல் வேண்டும். பிக்ஷை யெடுத்துச் சேகரிக்கும் அன்னத்தை ஆசானிடம் ஒப்புவித்து, அதிலிருந்து அவர் எடுத்துத் தனக்கு அளிக்கும் பகுதியைத் திருப்தியுடன் புசிக்க வேண்டும். அன்னத்தை மரியாதையாகவும் பூஜிதையாகவும் ஏற்க வேண்டும். அதனை ஒருநாளும் நிந்திக்கலாகாது. மரியாதையுடன் ஏற்கும் அன்னம் தேகத்திற்கும் பலத்தையும் வீரியத்தையும் கொடுக்கும்.

பகற் காலத்தை மாணவன் படிப்பிலும் ஆசானுக்குப் பணிவிடை செய்வதிலுங் கழிக்க வேண்டும். மாலையில் நக்ஷத்திரங்கள் தோன்றும் வரையில் அநுஷ்டானத்தில் அமர்ந்திருந்து, பின்பு இரண்டாம் முறை அன்னம் புசிக்க வேண்டும். இதற்கிடையில் சாப்பிடக் கூடாது. உணவில் மிதமாக இருக்க வேண்டும். மட்டுக்கு மிஞ்சிப் புசிப்பவனுக்குத் தேக சௌக்கியமும் ஆயுளுங் குன்றும், சொர்க்கமும் யோக்கியதையும் இல்லாமற் போம். அவன் நேர்மையாக நடக்க வேண்டும், சுத்தமாக இருக்க வேண்டும், செட்டாகக் கால க்ஷேபஞ் செய்யவேண்டும்; வீரியம் தைரியம் முதலிய மேன்மையான குணங்களை வளர்க்க வேண்டும்; மது, மாமிசம், வாசனைகள், புஷ்பங்கள், தாம்பூலம், இரஸ வஸ்துக்கள், புளிப்புள்ள திரவியங்கள் முதலியவைகளையும், ஸ்திரீகளையும் நீக்கவேண்டும்; ஜீவராசிகளை வருத்தக் கூடாது; காமம், குரோதம், உலோபம், நர்த்தனம், கானம் (ஸங்கீதம்), வாத்தியம் ஆகிய இவைகளைத் தவிர்க்க வேண்டும். வேதாத்தியயனஞ்செய்வோர் பிரம்மாஞ்சலி செய்தவராய்ப் பரிசுத்த வஸ்திரதாரியாய் ஜிதேந்திரியராய் இருந்து ஆசாரியனை வணங்கி அத்தியயனம் செய்தல் வேண்டும்.

பிரம்மசாரியானவன் சூதாட்டம், பயனற்றவார்த்தை, நிந்தை, பொய் ஆகிய இவை முதலியவைகளை ஒழிக்கவேண்டும்; ஸ்திரீகளை உற்று நோக்கலாகாது, அவர்களைத் தொடக் கூடாது; பிறரை அடிக்கவொண்ணாது; தனிமையாகப்படுக்க வேண்டும்; விரதத்திற்குப் பங்கம் நேராதவாறு காத்துக் கொள்ளவேண்டும். சாரதியானவன் குதிரைகளை இழுத்துப் பிடித்து அடக்குவது போலப் பிரம்மசாரியானவன் அலைகின்ற இந்திரியங்களை அடக்கக்கடவன். இந்திரியங்களை நிக்கிரகித்து மனத்தை அடக்கினால் எல்லாக் காரியங்களும்

லித்திக்கும்; சரீரத்தைச் சிறிதும் கிலேசப்படுத்த வேண்டாம். இந்திரியங்களைத் தன் வசப்படுத்திக் கொள்ளும் பொருட்டுப் பிரம்மசாரி தேகப்பயிற்சிக்கான ஆட்டங்களிலும் அலுவல்களிலும் அமரவேண்டும் தேகத்தையும் ஆடைகளையும் பரிசுத்தமாய் வைத்துக்கொள்ளவேண்டும்.

கிருகஸ்தன்

அத்தியயனத்திலும் விரதாநுஷ்டானத்திலும் ஈடுபட்டுத் தேர்ந்த மாணவன் தன்னாலியன்ற குருதக்ஷிணையைச் சமர்ப்பித்துக் குருவின் அனுமதி பெற்றுத் தன் வீட்டுக்குத் திரும்பிவந்து பிரம்மசரியம் நீங்கிச் சந்ததியின் பொருட்டு விவாகஞ் செய்துகொண்டு கிருகஸ்தனாகிறான். இவ்வாறு இல்லறம் மேற்கொண்டவன் தாய்தந்தையரைப் பூஜித்து, விருத்தர் பாலர் பெண்கள் நோயினர் முதலியோர்க்கு உணவளித்து, அதிதிகள் தென்புலத்தவர் தெய்வம் சுற்றத்தவர் முதலியவர்களைப் பூஜித்து, கொலை களவு பொய்கள் காமம் என்னும் பெரும் பாதகங்களை நீக்கி, பக்ஷபாதம் வழக்கழிவு பரநிந்தை கடுங்கோபம் முதலிய போக்கி, தன்னுயிர் போல் மற்றவர்களிடத்து அன்புள்ளானாய்த் தெய்வத்தையும் ஆசாரியரையும் வழிபட்டு, தர்ப்பணாதி விரதாநுஷ்டான முற்றவனாய் நல்வழியில் பொருள் பெற்றுத் தானதருமங்கள் செய்யவேண்டும். இங்ஙனம் புரிந்து இல்வாழ்வான் மனைவி மக்கள் விருந்தினர் ஒக்கல் உடன் உண்டு களித்துப் பகலில் சாஸ்திர ஆராய்ச்சிசெய்து, இம்மையிற் செல்வ நிலையாமையையும் இளமை நிலையாமையையும் யாக்கை நிலையாமையையும் உணர்ந்து, வீட்டுநூல் ஓதி உண்மையுணர்ந்து நன்னெறி நின்று வீடடைய முயலவேண்டும்.

இல்வாழ்வான் ஸ்திரீகளை யுபசரித்து, அவர்களிடத்து அன்புபாராட்டவேண்டும்; இப்படிச் செய்யாவிட்டால் இல

னுடைய வீடு க்ஷேமப்படாது. பிரம்மசாரி, வானப்பிரஸ்தன், துறவி யென்னும் மற்ற மூன்று வர்ணத்தவர்களுக்கும் இல்வாழ்வானே துணை. அவர்களெல்லாருக்கும் இவன் இருதயம் போன்றவன். இவனுடைய உதவியினாலே உலகத்தில் மற்றவர்கள் ஜீவிக்கிறார்கள்.

## வானப்பிரஸ்தன்

இல்வாழ்வான் வயது முதிர்ந்து, போன்வரையில் சந்ததிகள்படைத்துக் கிருகஸ்தாச்சிரமத்தை விட்டு வானப் பிரஸ்தனாகிறான். இவன் தனம் முதலியவற்றைத் துறந்து, மனைவியுடனேனும் தனியாகவேனும் காட்டிற் சஞ்சரித்துச் சாகாதிகளை உண்டு, ஜபத்தையும் தியானத்தையும் உலகத்திற்கு க்ஷேமந் தரத்தக்க பிரார்த்தனைகளையும் யஜ்ஞங்களையும் பொருளாகக் கொண்டு, புலன்களை வென்று பனிவெயில்களைப் பாராட்டாமல் நீரிலும் நெருப்பிடையிலும் தவஞ்செய்து நன்னெறியடைவோனும். அத்தியயனம், சமம், தமம், சமாதானம், உபரதி, ஏற்காமை (பிரதிக்கிரகம் அல்லது தானம் வாங்காமை), தவம், காருணியம் ஆகிய இவையே இவனுக்கு இன்றியமையாத ஒழுக்கமுறையாம்.

## ஸந்நியாஸி

இவன், உடல் பொருள் ஆவி ஆகிய இவற்றில் அணுவளவும் அவாவின்றி முற்றுந்துறந்து, ஞானமே பொருளாய், ஆசாரியன் சொல்வழி நிஷ்டை கூடி இறைவன் திருவடி அடைபவன். இவன் அக்கினி ஹோத்திரம் முதலிய கர்மங்கள் இல்லாதவன், நிலையான இருப்பிடமில்லாதவன், பற்றற்றவன், இல்லந்தோறும் இரந்துண்பவன், திடமான சன்னியம் முன்னவன், சமாதான, மெய்திய மனமுடையவன் இவனே முனிவன். ஆயுள் நீடிக்க வேண்டுமென்றேனும் மர

னம் நேரிட வேண்டுமென்றேனும் இவன் விரும்பக்கூடாது. தனக்குரிய கூலிக்குக் காத்திருக்கும் வேலைக்காரனைப் போல இவன் தன்னுடைய நிரியாணத்தை எதிர்பார்க்கவேண்டும்.

துறவியின் ஒழுக்க முறை கடுமையானது. இவன் வழி நடக்கையில் ஒவ்வோர் அடியையும் கண்ணுற்றுப் பார்த்துவைக்க வேண்டும், வஸ்திரத்தினால் வடிகட்டிய நீரையே பருக வேண்டும், சத்தியத்தினாற் புனிதமாக்கப்பட்ட வார்த்தைகளையே சொல்லவேண்டும், அறிவினால் தெளிந்த மனச்சாக்ஷியின்படியே நடக்கவேண்டும்; கடுஞ் சொற்களைப் பொறுக்க வேண்டும், பிறரை நிந்திக்கலாகாது, தன் தேகத்தைச் சம்ரக்ஷித்துக் கொள்ளும்பொருட்டு எவரையும் பகைக்கக் கூடாது; தன்மீது கோபப்பட்டவனைக் குறித்துப் பதிலுக்குப் பதிலாகக் கோபங்கொள்ளப் படாது; தன்னை ஒருவன் சபித்தால் அவனை ஆசீர்வதிக்கக் கடவன்; பொய்யான வார்த்தையை உச்சரிக்கவே கூடாது; பரமாத்மாவினிடத்தில் சந்துஷ்டி யுடையவனாய், ஒன்றையும் அபேக்ஷிக்காமல், ஒன்றும் இல்லாதவனாய், விஷயபோகங்களை விலக்கி, தன்னையே தனக்கு மித்திரனாகக் கொண்டு, சந்தோஷம்வாய்ந்து மோக்ஷத்தையே நாடித் திரியக் கடவன்:

அற்றது பற்றெனின் உற்றது வீடு.

குறிப்பு:—ஸ்மிருதிகளிற் கூறிய விஷயங்களை யெல்லாம் இங்கு எடுத்துரைப்பது இயலாதாதலால், அவைகளுள் இளைஞர் தெரிந்து கொள்ளவேண்டிய ஸம்ஸ்கார விவரங்களையும் வர்ணாச்சிரம தர்மங்களையும் மாத்திரம் சிறிது சொன்னோம். இனிப் புராணங்களை விசாரிப்போம்.

## 10. புராணங்களும் இதிகாசங்களும்

ஸ்மிருதிகளுக்கு அடுத்தபடியாக இந்துக்கள் தமக்குத் தர்மப் பிரமாணமெனக் கொண்டாடும் நூல்கள் புராணங்களும் இதிகாசங்களுமாம். இவ் விருவகை நூல்களையுஞ் சேர்த்து ஐந்தாம் வேதமெனச் சொல்வார்கள். இதிகாசங்களுள் ஒன்ருகிய மகாபாரதத்தை மாத்திரமே ஐந்தாம் வேதமென நம்மவர்கள் கூறுவதைச் சாமானியமாகக் கேட்டிருக்கிறேம். ஆனுல், சாந்தோக்கியோப நிஷத்தில் * ஸநத் குமாரரிடம் தாம் கற்ற விஷயங்களை நாரதர் எடுத்துரைக்கு மளவில் புராண இதிகாசங்களை ஐந்தாவதாகப் பிரஸ்தாபித்திருக்கிருர். இங்கு 'ஐந்து' என்பது 'ஐந்தாம் வேதம்' என வியாக்கியானஞ் செய்திருக்கிருர்கள். வியாசர் நான்கு வேதங்களையும் திரும்ப அடைந்து, அவைகளுக்கு இருக்கு, யஜுஸ், சாமம், அதர்வம் எனத் தனித்தனியே பெயரிட்டு, இதிகாச புராணங்களை ஐந்தாவது வேதமாக அமைத்தார் என்று பாகவதம் கூறுகிறது.† ஒவ்வொரு துவாபர யுகத்திலும் விஷ்ணுவானவர் வியாச ரூபியாகத் தர்ம பரிபாலனத்தின் பொருட்டு அதற்கேற்ற புராணங்களைச் செய்கிருர். புராணம் முதலியன வேதார்த்தத்தை விளக்குஞ் சாதனங்களா யிருக்கின்றமையின் அவைகளை நாம் சிரத்தையாகப் படித்துத் தெரிந்துகொள்ளவேண்டும் "வேதங்கள், புராணங்கள், நியாயம், மீமாம்ஸை, தர்ம சாஸ்திரம், வேதாங்கங்கள் என்னும் இப் பதினுன்கும் ஞானத்திற்கும் தர்மத்திற்கும் ஆதாரமா யிருக்கின்றன. புராண இதிகாசங்களின் உதவியைக் கொண்டு வேதார்த்தங்களை விவரிக்கவேண்டும் என்று யாஜ்ஞவல்கியர் சொல்லியிருக்கின்ருர்.

---

* VII, i, 2. † I, iv, 20.

## புராணம்.

புராணம் என்னுஞ் சொல்லுக்குப் பழைமை என்று அர்த்தம். பண்டைக் காலத்து விஷயங்களை விவரித்துக் கூறுகின்றமையின் இவை புராணங்கள் எனப்பட்டன. 'புராணம்,' என்னுஞ் சொல்லுக்கு 'புரா + அபி + நவ:' = பழையதேயாயினும் புதியது என்றும் பொருள் கூறலாம். அஃதாவது, புராணங்களிற் கூறப்படும் விஷயங்கள் பழையனவாயினும், படிக்குந்தோறும் இவை புதியன போன்று இனிமை பயக்கும்; ஒவ்வொரு தடவையும் புதிய அர்த்தங்களும் தொனிக்கும். புராணம என்னும் நூலில் சிருஷ்டி, உபசிருஷ்டி, வமிசாவளி, மன்வந்தரம், வமிச சரித்திரம் ஆகிய இவ் வைந்து விவரங்களும் இருக்கவேண்டும். இது துவாபரயுகத்தில் வியாசரால் பதினெட்டாக வகுக்கப்பட்டது. அப் பதினெண் புராணங்களாவன :—

1. பிரம்மம், 2. பதுமம், 3. விஷ்ணு, 4. சைவம், 5. பாகவதம், 6. நாரதீயம், 7. மார்க்கண்டம், 8. ஆக்கினேயம், 9. பவிஷ்யம், 10. பிரம்மகைவர்த்தம், 11. இலிங்கம், 12. வராகம், 13. காந்தம், 14. வாமனம், 15. கூர்மம், 16. மச்சம், 17. காருடம், 18. பிரம்மாண்டம்

இவை நான்குலக்ஷத்து எண்ணாயிரங் கிரந்தங்க ளடங்கியவை. அநுஷ்டுப்பு விருத்தத்தில் 32 எழுத்துக்கள் கொண்டது ஒரு 'கிரந்தம்' எனக் கணக்கிடப்படும். இந்தப் பதினெண் புராணங்களுள் 1. சைவம், 2. பவிஷ்யம், 3. மார்க்கண்டம், 4. இலிங்கம், 5. காந்தம், 6. வராகம், 7. வாமனம், 8. மச்சம், 9. கூர்மம், 10. பிரம்மாண்டம் என்னுமிவை சிவ புராணங்கள்;

1. விஷ்ணு, 2. பாகவதம், 3. காருடம், 4. நாரதீயம் என்னு மிவை விஷ்ணு புராணங்கள்;

1. பிரம்மம், 2. பத்மம்—என்று இவை யிரண்டும் பிரம்ம புராணங்கள் ;

ஆக்கினேயம் என்பது அக்கினி புராணம் ; பிரம்ம கைவர்த்தம் என்பது சூரிய புராணம்.

இவையன்றி உப புராணங்கள் பதினெட்டு உள. இவைகளை இயற்றிய முனிவர்களின் பெயரினாலேயே இவை வழங்குகின்றன:

1. சநற்குமாரம், 2. நாரசிங்கம், 3. பிருகந்நாரதீயம், 4. சிவரகசியம், 5. தூர்வாஸம், 6. கபிலம், 7. வாமனம், 8. பார்க்கவம், 9. வாருணம், 10. கல்கி, 11. சாம்பவம், 12. நந்தி, 13. ஸௌரம், 14. பாராசரியம், 15. வாசிஷ்டம், 16. பாகவதம், 17. கணேசம், 18. ஹம்ஸம்.

இவையல்லாமல் உசநம், காளி, ஆங்கிரம், மாரீசம், மானவம் முதலிய உப புராணங்கள் வேறு அநேகம் உள. பாகவதம் என்பது ஸ்ரீமத்பாகவதம் என்றும் தேவீபாகவதம் என்றும் இரண்டு விதமாக வழங்குகின்றது. இவ் விரண்டினுள் எது புராணம், எது உபபுராணம் என்பது பண்டிதர்களுக்குள் விவாதமாயுள்ள விஷயம்.

புராணங்கள் பண்டைக்காலத்துச் சமாசாரங்களை விவரிப்பனவென்று சொன்னோமே. பண்டைக்கால மென்பது உலக சிருஷ்டியின் ஆதியையாவது, ஒரு சிருஷ்டி காலத்தையாவது குறித்ததன்று. எத்தனையோ சிருஷ்டிகளும் எத்தனையோ பிரளயங்களும் நடந்திருக்கின்றன. ஒவ்வொன்றின் விஷயத்தை ஒவ்வொரு சமயத்தில் எடுத்துரைக்குமளவில் அதுவே ஒவ்வோரிடத்தில் விரிவாகவும், மற்றோரிடத்தில் சுருக்கமாகவும், பின்னோரிடத்தில் சற்று வித்தியாசமாகவுங் கூட ஒவ்வொரு புராணத்திற் கூறப்பட்டிருக்கும்.

இந்தக் காரணத்தினால் ஒரு புராணத்திற் காணும் விவரங்களுக்கும் மற்றொரு புராணத்திற் காணும் விவரங்களுக்கும் உள்ள வித்தியாசங்களைப் பாராட்டலாகாது.

மேற்சொல்லிய புராணங்களும் உபபுராணங்களு மல்லாமல் இவைகளைப் போலவே பக்தி, ஆசாரம், வைராக்கியம், ஞானம் ஆகிய இவைகளைப் போதிக்கத்தக்க வேறு சில நூல்களையும் புராணம் என்னும் பெயரால் வழங்குகின்றோம். உதாரணமாக, வடமொழியில் சங்கராநந்த ஸ்வாமி என்னும் யதீந்திரர் இயற்றிய ஆத்மபுராணம், தென்மொழியில் திருவிளையாடற் புராணம், பெரியபுராணம் முதலியவைகளைக் காண்க.

## இதிகாசம்

'இதிகாசம்' என்னுஞ் சொல்லுக்கு "இப்படி இருந்தது" என்று அர்த்தம். அஃதாவது, நடந்த விஷயங்களை அவை இன்னவாறு இருந்தனவென்று சொல்லும் சரித்திரம், பூர்வத்து விருத்தாந்தம் என்பதாகும். இதிகாசமென நாம் வழங்குவன இராமாயணம், மகாபாரதம் என்னும் இரண்டு பெரிய நூல்களே.

இராமாயணம்

இராமாயணம் வால்மீகி என்னும் மாமுனிவரால் இயற்றப் பட்டது. இது இக்ஷ்வாகுவினிடமிருந்து உண்டான சூரியவம்சத்துச் சரிதம். இதில் விஷ்ணுவின் அவதாரமாகிய ஸ்ரீராமருடைய சரித்திரம் விஸ்தாரமாகக் காணப்படும்; திரேதா யுகத்தின் முடிவில் இந்து தேசத்தின் நிலைமையும், இந்துக்களின் நடவடிக்கைகளும் இந்த நூலில் தெளிவாகக் காணும். மற்றும், புத்திரனுடைய தர்மம், சகோதரர்களின் தர்மம், க்ஷத்திரிய தர்மம், பத்தினியின் தர்மம், சேவகனுடைய தர்மம் முதலானவைகள் விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன.

**மகாபாரதம்**

மகாபாரதம் என்பது கலியுகத்தின் ஆரம்பத்தில் வியாசமாமுனிவரால் தொகுத்து வெளியிடப்பட்டது. இது சந்திரவமிசத்தைச் சேர்ந்ததொரு குடும்பத்தில் உதித்தவர்கள் வன் பகையினாலும் பொறாமையினாலும் தங்களுக்குள் சண்டையிட்டுக்கொண்டு அழிந்த விருத்தாந்தத்தைக் கூறுவது. இவ்வாறு சண்டையிட்டுக்கொண்டவர்களில் ஒருதிறத்தார் பாண்டவர்கள் எனப்படுவர், மற்றொரு திறத்தார் கௌரவர்கள் எனப்படுவர். பாண்டவர்கள் நீதியாகவும் நியாயமாகவும் நடந்து, அநீதமாகப் பிரவர்த்தித்த கௌரவர்களை ஸ்ரீகிருஷ்ணபகவானுடைய பேருதவியினால் வென்றார்கள். ஸ்ரீகிருஷ்ணன், பீஷ்மர், துரோணர், கர்ணன் முதலான மகான்களின் சரிதைகளும் அவர்கள் செய்த நல்லுபதேசங்களும் விரிவாகச் சொல்லப் பட்டிருப்பது இந்நூலின் பெருமைக்கு முக்கியமான காரணமாகும். இதில் அநேக கிளைக்கதைகளும் உபந்நியாஸங்களும் இருக்கின்றன. இவை இந்துக்களின் தர்மத்தை எல்லாரும் எளிதில் அறியத்தக்கவாறு தெளிவாக விளக்கிக் கூறுவன. இவற்றுள் 'பகவத்கீதை' என்பது பிரசித்தமானது. இந்த நூல் முழுதும் சரித்திரம் தர்மம் மதம் ஆகிய இவைகளைப் பற்றிய வசனங்கள் நிறைந்த கல்விக் களஞ்சியமாகும். இதற்கு ஈடான நூலும் மேலான நூலும் உலகத்தில் எவ்விடத்தும் இல்லை என்று திடமாகச் சொல்லலாம்.

இராமாயணக்கதையும் மகாபாரதக்கதையும் எல்லாருக்குந் தெரிந்திருக்கின்றமையின் அவைகளை இங்கு விரித்துரையாமல் விட்டோம். ஆயினும், இப் புத்தகத்தின் இரண்டாம் பாகத்தில் புராண இதிகாசங்களின் சம்பந்தமாக இளைஞர்கள் தெரிந்து கொள்ளத்தக்க அநேக விஷயங்கள் விவரிக்கப்படும்.

# 11. ஷட் தரிசனங்கள்

**உபநிஷத்துக்களின் நோக்கம்**

உபநிஷத்துக்கள் அநேகம் இருக்கின்றனவெனக் கண்டோம். அவை ஒவ்வொன்றும் பாரமார்த்திகத்தில் நன்னிலையை நாடுகிற புருஷனுக்குத் தடையாயிருக்கிற அஞ்ஞானத்தை யகற்றி அவனைப் பரமாத்மாவினண்டை சேர்ப்பதே நோக்கமாகக் கொண்டவை. அந்தப் பரம பதத்தை யடைவதற்கான மார்க்கங்கள் பற்பல அவ்வுபநிஷத்துக்களில் கூறப்பட்டிருக்கின்றன. உபநிஷத்து விசாரஞ் செய்கிறவர்க ளெவரவரும் தத்தமக்கு ஏற்ற மார்க்கத்தைக் கைப்பற்றிக் கடைத்தேறட்டு மென்னும் எண்ணங் கொண்டே மேற் சொல்லியவாறு பற்பல மார்க்கங்கள் அமைக்கப்பட்டிருக்கின்றன. உதாரணமாக, ஓர் உபநிஷத்து பக்தியையும், மற்றோர் உபநிஷத்து ஞானத்தையும், இன்னுமோர் உபநிஷத்து யோகத்தையும் விரித்துரைக்கும். கர்மகாண்டத்தினின்று ஞானகாண்டத்திற்கு ஏறுவதற்கான படிகள் கிரமக் கிரமமாகவும், ஒன்றைவிட ஒன்று கஷ்டதரமாகவும் அமைந்திருக்கின்றன. இந்தக் காரணத்தினாலே உபநிஷத்துக்களில் சிவோபாஸனை, விஷ்ணு உபாஸனை, ஆத்மோபாஸனை, பிரணவோபாஸனை, சூரியோபாஸனை முதலிய பற்பல வழி வகைகளும் விவரிக்கப்பட்டிருக்கின்றன.

**தத்துவ ஆராய்ச்சி**

இதுவன்றி, பரம் பொருளைப் பற்றிச் சொல்வதிலும் ஒவ்வோர் உபநிஷத்து ஒவ்வொருவிதமாகச் சாற்றுகின்றது. உதாரணமாக, “ஆதியில் ஒன்றே ஒன்று, இரண்டற்றதாய் இருந்தது” என ஓர் உபநிஷத்து கூறும்; “இரண்டு உள—ஒன்று ஆசிரிதன் (பிரபு), மற்றொன்று

ஆசிரயன் (சார்ந்தவன்); ஒன்று இனிய பிப்பல (அரசமரத்தப்) பழத்தை உண்கின்றது, மற்றது சாக்ஷியாகப் பிரகாசித்துக் கொண்டிருக்கின்றது" என வேறு உபநிஷத்து கூறும். இதனால் தத்துவ விசாரணை செய்கிறவனுக்குப் பெருங் குழப்ப முண்டாகக் கூடும். தத்துவம் என்பது உண்மைப் பொருள். தத்துவ விசாரணை என்பது உண்மைப் பொருளாராய்ச்சி. மேற்சொல்லிய குழப்பம் நேராதபடி நமக்கு முன்னவர்களாகிய மாமுனிவர்கள் தாம் ஆராய்ச்சி செய்து தேர்ந்த விஷயங்களை நம்பொருட்டு எழுதிவைத்திருக்கிறார்கள். அங்ஙனம் எழுதிவைத்திருப்பன ஆறு நூல்கள். அவை ஆறும் ஆறுவிதமான தத்துவ ஆராய்ச்சி முறைகளாம். அவையே "ஷட் தரிசனங்கள்" எனப்படுவன. அவையாவன,—1. நியாயம், 2. வைசேஷிகம், 3. சாங்கியம், 4. யோகம், 5. பூர்வ மீமாம்ஸை, 6. உத்தர மீமாம்ஸை என்பனவாம். மீமாம்ஸை என்பது வேதங்களின் அர்த்த விசாரணை (வேதப் பொருளாராய்ச்சி).

ஆறு வேதாங்கங்களும் ஆறு தரிசனங்களும் ஸூத்திர ரூபமாக அமைந்திருக்கின்றன. 'ஸூத்திரம்' என்பது 'நூல்.' சுருங்கச் சொல்லி விளங்க வைத்தல் என்னும் உத்தியை யநுசரித்து ஸூத்திரங்கள் நுட்பமான வார்த்தைகளைக் கொண்டு குறள்வாசகமாக அமைக்கப்பட்டிருக்கும் செய்யுளை நாம் 'ஸூத்திரம்' என வழங்குகின்றோம். இவைகளில் ஆழ்ந்த கருத்துள்ள சூக்ஷ்ம உபதேசங்களின் சாரம் அடங்கியிருக்கும். ஸூத்திரக் கிரந்தங்களின் இலக்ஷணங்களைக் கூறுமளவில்,—சொற்ப எழுத்துக்களா லமைந்து, சந்தேகம் விளைக்காததாய், ஸாரம் நிறைந்ததாய், பற்பல துறைகளுக்கும் பொருந்தும் தன்மைவாய்ந்து, மற்றொன்றினுற் கலங்கச்

செய்ய முடியாததாய், குற்றமற்றதாய் இருப்பது எதுவோ அது ஸூத்திரம் எனப்படும் என்று வரையறுத்து ஆன்றோர் நிரூபணஞ் செய்திருக்கிறார்கள்.

அச்சுப் பதிப்பிக்கும் சாதனமில்லாமல் வாய் மொழியாகக் கேட்டுக் கல்வி பயின்று வந்தனராதலின் நம் முன்னவர்கள் கிரந்தங்களை விரிவாக்காமல் சுருக்கிச் சூத்திரங்களாக அமைத்து வைத்தார்கள். அவர்கள் அப்படி அவைகளை அவ் வடிவத்தில் காப்பாற்றி வைத்ததனால் நமக்கு அவை அழியாமற் கிட்டின ; அந்தச் சூத்திரங்களுக்கு ஆதாரமயிருந்த விரிவான கிரந்தங்கள் நமக்குக் கிட்டாமற் சிதைந்து போயின. ஆனதனால், பெரிய ஆசாரிய புருஷர்கள் அந்தச் சூத்திரங்களுக்கு விரிவான வியாக்கியானங்கள் செய்து அவற்றின் கருத்துக்களை நமக்கு விளக்கவேண்டியதாயிற்று.

## நியாயம்

நியாயம் என்பது தர்க்க சாஸ்திரம் ; அஃதாவது 'பதார்த்தங்களை' யளந்தறியும் நூல். 'பதார்த்தங்கள்' என்பன இனி விவரிக்கப்படும். இதை நியாய சித்தாந்தம் என்றும், நையாயிக மதம் என்றும் சொல்வார்கள். இது வேதத்தையும் ஸ்மிருதி முதலானவைகளையும் பிரமாணமாகக் கொண்டது. இதை ஆக்கியவர் கௌதமர். இவர் பாதத்திற் கண்ணுடையவராதலின், 'அக்ஷபாதர்' எனப்படுவர். இந்த மதமும் 'அக்ஷபாத மதம்' எனப்படும். பாஷண்டர்களுடைய துர்வாதங்களினால் ஒளிமங்கியிருந்த வேதத்தின் பெருமையானது இவர் எடுத்துக்காட்டிய நியாயங்களின் வன்மையினால் திரும்பப் பிரகாசம் பெற்றது. இந்த நூல் ஐந்து அத்தியாயங்கள் கொண்டது. இதற்கு பாஷியம் செய்தவர் வாத்ஸியாயன முனிவர்.

பிரமாணம் முதலான பதினாறு பதார்த்தங்களை (விஷ ங்களை, topics or categories) ஆராய்ந்து பெறும் அறி றால் ஜீவாத்மா முத்தி பெறலாமென்பது கௌதமரின் காள்கை. அந்தப் பதினாறு பதார்த்தங்க ளாவன:—

1. பிரத்தியக்ஷம் (காட்சி, புலனறிவு, perception), 2. அனு னம் (ஏதுக்களைக் கொண்டு காணாத பொருள்களை ஊகித்தல், ference), 3. உபமானம் (உவமை, comparison), 4. சப்தம் ற்ற நண்பர்களின் வாக்கியம், scripture) எனப் பிரமாணங்கள் ளவைகள்) * நான்கு;

5. ஆத்மா, 6. சரீரம், 7 இந்திரியங்கள், 8. அர்த்தம் புத்தி, 10. மனம், 11. பிரவிருத்தி (செய்கை), 12. தோஷம் ற்றம்), 13. பிரேத்தியம், 14. பாவம் (கருத்து), 15. பலதுக்கம் பனைப் பற்றிய துக்கம்), 16. அபவர்க்கம் (முகதி) எனப் பிரமே ங்கள் (அளவிடப் படுவன) பன்னிரண்டு.

இந்தப் பிரமேயங்களும் பிரமாணங்களுஞ் சேர்ந்து பினாறு பதார்த்தங்களாகும். நியாய சாஸ்திரமானது எல் க் கலைகளுக்கும் விளக்குப் போன்றது, எல்லாக் கர்மங்க க்கும் ஆசிரயமானது, எல்லாத் தர்மங்களுக்கும் சாதன னது. இந்த மதத்தின்படி ஆத்மாவானது சரீரத்தை வேறானது, இந்திரியங்களைவிட வேறானது. நானா ரங்களிலுள்ள ஆத்மாக்கள் வேறு வேறாகும். பரமாத்மா ன்றே உளது. இஃது எல்லா வஸ்துக்களையும் சிருஷ்டிக்கும் துவே எல்லா ஞானத்திற்கும் மூலம். ஆத்மா ஒரு சரீரத்தி ருந்து மற்றொரு சரீரத்திற்குப் போய்க்கொண்டிருக்கும்; ன் செய்த நல்வினைக்கும் தீவினைக்கும் தக்க பயனை அஃது னுபவித்துக் கொண்டிருக்கும். வாதனையை ஒழித்தலே விதனுடைய முக்கியமான நோக்கம். அதுவே இவன்

* பிரமாணங்கள்—criteria of truth, means of proof.

அடையத்தக்க கடைசியான நிலை. ஞானத்தோடு தன்னைத் தானே தியானிப்பதனாலும், அஃதாவது, தன்னைத் தெரிந்து கொள்வதனாலும், புண்ணிய காரியங்களினாலும் ஆத்மாவானது சுகமடையும். பாதகம் முதலான காரியங்களினால் பெரும் பதவியை அடைய முடியாது. பொய்யறிவாவது (மித்தியா ஞானமென்பது) அனாத்மாவாகிய தேகாதிகளில் ஆத்மபுத்தி கொள்ளல்; அஃதாவது, அவை ஆத்மாவென்று நினைத்தல். இராகம் என்பது அனுகூலமானவைகளினிடத்து ஆசை; துவேஷம் என்பது பிரதிகூலமானவைகளினிடத்து வெறுப்பு. இந்த இராகத் துவேஷங்களிரண்டும் மோக்ஷ மார்க்கத்திற்குத் தடைகளாதலால் இவைகளை ஒழிக்க வேண்டுமென்பது முக்கியமான கருத்து. பிரவிருத்தி (நடவடிக்கை) இரண்டு வகைப்படும். பிறருக்குப் பீடை (ஹிம்ஸை), களவு, பொய் (அசத்தியம்) என்னும் இவ் வடிவங்களாயுள்ள செய்கைகள் பாபப் பிரவிருத்தி (கெட்ட நடவடிக்கை); எவருக்கும் பீடையில்லாமலும் சத்தியமாகவும் இருக்கிற காரியங்கள் புண்ணியப் பிரவிருத்தி (நல்ல நடவடிக்கை). இவ் விரண்டு பிரவிருத்திகளே உயர் பிறப்பிற்கும் இழி பிறப்பிற்கும் காரணங்களாகும். ஆகையால், பதார்த்த தத்துவ ஞானமானது மோக்ஷத்திற்கு முக்கிய சாதனம் என்பது இம் மதச் சித்தாந்தம்.

## வைசேஷிகம்

வைசேஷிக மதமானது நையாயிக மதத்தைத் தழுவினதாகும். இஃது அந்தாஞ்சிக மென்னும் நகரத்தை ஆண்ட பலஸ்ரீ என்னும் அரசனுடைய போஷணையிலிருந்த கணபுக் என்றும் கணாதர் என்றும் பெயர் வாய்ந்த முனிவரால் ஸ்தாபிக்கப் பட்டது. இவர் வேதங்களைப் பிரமாணமாகக் கொண்டவர். அவை ஸர்வேச்வரனால் வெளியிடப்

பட்டவை. அவர் ஜீவன்களுக்குப் பரமா யிருக்கப்பட்டவர்; ஜீவன்களுக்குக் கர்மப் பயனை யளிப்பவர். சிக்ஷை முதலிய ஆறு அங்கங்களினால் காக்கப்பட்டிருக் கின்றமையின் வேதங்கள், நாஸ்திகாகமங்களை விட, பிரபலப் பிரமாணங்க ளாகும் என்பது இவருடைய வாதம். இதைக் கணாத மதமெனவுங் கூறுவர். இந் நூலுக்குப் பாஷிய மியற்றியவர் பிரசஸ்தபாதர். இந்தச் சித்தாந்தத்தின்படி ஆறு பதார்த்தங்களை (categories)த் தெரிந்து கொள்வதனால் முக்தி வாய்க்கும். அந்தப் பதார்த்தங்கள் 1. திரவியம், 2. குணம், 3. கர்மம், 4. சாமானியம், 5. விசேஷம், 6. ஸமவாயம் என்பனவாம்.* கணாதருக்குப் பின் வந்தவர்கள் 'அபாவம்' என்பதை ஏழாம் பதார்த்தமாகச் சேர்த் திருக்கிறார்கள். இவ் வேழு பதார்த்தங்களுள் 'திரவியம்' என்பது ஒன்பது வகைப்படும். அவையாவன:—1. பிருதிவி, 2. ஜலம், 3. தேஜசு, 4. வாயு, 5. ஆகாசம், 6. திக்கு, 7. காலம், 8. ஆத்மஞானதிகாணம், 9. மனம் என்பனவாம்.

மேற் சொல்லிய ஒன்பது திரவியங்களுள் பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் என்னும் பஞ்சபூதங்களும் கணிக்கப்பட்டிருக்கின்றன. இவற்றுள் ஆகாசம் என்பது காலதேச வரம்பற்றது. மற்ற நான்கு பூதங்களும் பரமாணுமயமானவை. அந்தப் பரமாணுக்கள் (atoms) சாசுவதமானவை. அந்தப் பரமாணுக்களின் பிரிவினாலும் சேர்க்கையினாலும் பூமி, ஜலம், அக்கினி, வாயு என்னுந் தூல வடிவங்கள் ஏற்பட்டன. இந்தத் தூலவடிவங்கள் அநித்தியமானவை. இவ்வாறு பரமாணுக்களின் பரிணாம யோகமே (சேர்க்கையே) சிருஷ்டி;

* Substance, quality, action, generality which is higher as well a ower, and intimate relation.

அந்தப் பரமாணுக்களின் வியோகமே (பிரிதலே) பிரளயம். உலகமனைத்தும் சாசுவதமான பரமாணுக்களினால் செய்யப் பட்டது. வேதங்கள் ஈசுவரனால் உண்டாக்கப்பட்டன. சிருஷ்டி, பிரளயம், முக்தி முதிலானவைகளின் கிரமங்களைப் போதிப்பன வேதங்களேயாம் என்பது கணாதர் மதம்.

திரவியங்களில் அந்தர்க்கதனா யிருக்கிற ஆத்மா, ஜீவாத் மாவென்றும் பரமாத்மா வென்றும் இருவகைப் படும். தேவர்கள், மனிதர்கள், மிருகாதிகள் ஜீவாத்மாக்கள். இவைக ளுக்கு அன்னியமா யிருப்பவன் பரமாத்மா (மகேசுவரன்). ஆத்மா தேகேந்திரி யாதிகளுக்கு அன்னியன். ஈசுவரன் சுகஸ்வரூபனாகவும் நித்தியனாகவும் இருக்கிறான். இவ்வுலகத் தில் துக்கமென்பது எல்லாருக்கும் அநுபவ சித்தமாயிருக் கின்றது. அது எல்லாரையும் பீடிக்கின்றது, அனர்த்தத் திற்குக் காரணமாகவும் இருக்கின்றது. அப்படிப்பட்ட துக்கத்தை நிர்மூலஞ் செய்வதே முக்தி. முக்திபெறுவதற் குப் பரமேசுவர சாக்ஷாத்காரத்தைத் தவிர வேறு உபாயம் இல்லை. ஈசுவர சாக்ஷாத்காரம் சிரவண மனனநிதி தியாஸப் பியாஸங்களால் உண்டாகும். சிரவண மென்பது ஆகம விஷயங்களை ஆசான் முகமாகக் கேட்டறிதல். மனனமென் பது அவ்வாறு கேட்டறிந்த விஷயங்களை யுக்தியுக்தமாகச் சிந்தித்தல். இங்ஙனம் சிந்திக்குமளவில் உண்மைப் பொருள் இன்னதென்று பிரத்தியக்ஷப் பிரமாணத்தினாலேயே நிச்சயிக்கமுடியாது. ஆதலால், அநுமானப் பிரமாணம் அவசியமாகும். இந்த அநுமானப் பிரமாணத்தினால் ஆத்மாவானது தேகேந்திரியாதிகளைவிட வேறானதென்னும் நிச்சயம் ஏற்படும். அநுமானப் பிரமாணமோ வெனின், அது வியாப்தி ஞானத்தைப் பொறுத்தது. வியாப்தி ஞான மென்பது பதார்த்த விவேகத்தைப் பொறுத்தது. பதார்த்த

விசேஷம் என்பது முதன் முதலிற் சொல்லிய ஆறு பதார்த்தங்களையும் பரிசீலனை செய்து தெளிதல்.

துக்க நிவர்த்தியே முக்தி யென்று சொன்னோமே. துக்கம் தேகப் பிராப்திரூபமான ஜன்மத்தினால் உண்டாகின்றது. தேகப் பிராப்தி பிரவிருத்தியினால் (நடவடிக்கையினால் ஏற்படும் இருவினைகளினால்) உண்டாகின்றது. பிரவிருத்தியானது (இருவினைகள்) இராகம் துவேஷம் என்னும் தோஷங்களினால் ஏற்படுகின்றது. இராகத் துவேஷங்கள் மித்தியா ஞானத்தினால் உண்டாகின்றன. மித்தியாஞானமென்பது 'நான் செவிடன், குருடன், முடவன், அரசன், சேவகன்' என்பனவாதிய எண்ணங்களே. இந்த மித்தியா ஞானத்தை அடிப்படையாகக் கொண்டே துக்கம் என்பது ஏற்பட்டிருப்பதனால், துக்கத்தை நிவர்த்திப் பதற்கு மித்தியா ஞானத்தைப் போக்கவேண்டும். மித்தியா ஞானம் பரமேசுவர சாக்ஷாதகாரத்தினால் நீங்கும். பரமேசுவர சாக்ஷாத்காரத்திற்கு மனனம் அவசியம். மனனத்திற்கு அனுமானப் பிரமாணம் அவசியம். இவ்வாறு அனுமானம் என்பது இன்றியமையாததெனை விசேஷமாக இம் மதம் வற்புறுத்தியதனால் இது 'வைசேஷிகம்' எனப்பட்டது.

இந்த மதமானது பிரத்தியக்ஷம் அனுமானம் ஆகமம்* என்னும் மூன்று பிரமாணங்களினால் ஜகத்கர்த்தாவாகிய ஈசுவரன் ஒருவன் உளனென்று நிரூபிக்கின்றது. பிரத்தியக்ஷத்தை மாத்திரமே பிரமாணமாகக் கொண்டுள்ள நாஸ்திகம் முதலான மதங்களை இந்த வைசேஷிக சித்தாந்தமானது கண்டித்து அனுமானத்தையும் பிரமாணமாகக் கொள்ளவேண்டுமென்று ஸ்தாபிக்கின்றது. இந்தச் சாஸ்திரம் மனனத்தையே பிரதானமாகக் கொண்டது.

* பிரத்தியக்ஷம்—perception; அனுமானம்—Inference. ஆகமம்—scripture.

## ஸாங்கியம்

இம் மதாசாரியர் வாஸுதேவாமிசமாக (விஷ்ணுவின் யமிசமாகப் பிறந்தவர்.) இவர் கபில நிறத்துடன் பிறந்தது ற்றிக் 'கபிலர்' எனப் பெற்றனர். இவருடைய ஸாங்கிய த்திரங்களுக்கு உரை யியற்றியவர் சபரஸ்வாமி. வேதாந்தி காதேவர் என்பவரும் இந்நூலுக்குப் பாஷியம் செய்திருக் ிறார். ஸாங்கிய சூத்திரங்கள் செய்தவர் கபிலர் மாத்திரமே ல்லர். அநிருத்தர் என்பவரும் விஞ்ஞான பிக்ஷு என் வரும் ஸாங்கிய சூத்திரங்கள் எழுதியிருக்கிறார்கள். ஈசுவர ிருஷ்ணர் என்பவர் 'ஸாங்கிய காரிகை' என்னுமொரு நூல் யற்றியுள்ளார். இதற்குக் கௌடபாதாசாரியர் பாஷியம் செய்திருக்கிறார். 'தத்துவ சமாச சூத்திரம்' என்னு மொரு ாங்கிய சாஸ்திர முதனூல் இருக்கின்றது. இதற்கு அநேக யாக்கியானங்கள் உளவாம். இது மிகப் புராதனமான தன்றுஞ் சொல்லுகிறார்கள்.

ஸாங்கிய மதம் ஸேசுவரஸாங்கியம என்றும், நிரீசுவர ாங்கியம் என்றும் இருவகைப்படும். ஈசுவரன் ஒருவன் ளனெனக் கூறுவது ஸேசுவரஸாங்கியம். ஈசுவரனை ஒப் க்கொள்ளாதது நிரீசுவர ஸாங்கியம். நிரீசுவர ஸாங்கியத் ிற்குக் கபிலரும், ஸேசுவர ஸாங்கியத்திற்குப் பதஞ்சலியும் ர்த்தர்களாவார்கள்.

ஞானத்தினால் முக்திபெறலாமென்பது கபிலருடைய காள்கை. யோகத்தினாலேயே (practical application) முக்தி பெறுவதற்காகுமென்பது பதஞ்சலியின் கொள்கை. ஸாங்கியம்' என்பது தத்துவங்களை எண்ணிச் சொல் து. இந்தத் தத்துவ ஆராய்ச்சியினால் விளையும் ஞானமே முக்திக்குச் சாதனமென்பது கபிலருடைய கொள்கை.

வேதங்கள், ஸ்மிருதிகள், இதிகாசங்கள், புராணங்கள், சைவாகமங்கள் முதலான நூல்களில் ஸாங்கிய மதக்கொள்கைகள் விஸ்தாரமாகக் காணப்படுகின்றன. இந்த ஸித்தாந்தத்தில் ஜீவனுக்குப் 'புருஷன்' என்று பெயர். தத்துவங்கள் வியக்த மென்றும் அவ்வியக்த மென்றும் இருவகைப்படும். வியக்தாவ்வியக்த விவேகத்தினால் புருஷனுக்கு ஆத்மஞானம் உண்டாகிறது. ஆத்மஞானத்தினால் மூவகைத் துக்கங்களும் நிவர்த்தியாகின்றன. மூவகைத் துக்கங்களாவன :—ஆத்தியாத்மிகம், ஆதிபௌதிகம், ஆதிதெய்விகம். ஆத்தியாத்மிகம் என்பது மனோதுக்கம், நோய் முதலியன. ஆதி பௌதிகம் என்பது புழு, பூச்சி, புலி, கரடி முதலிய பிராணிகளால் நேருந் துன்பம். ஆதிதெய்விகம் என்பது மழை வெயில் முதலியவைகளால் நேருந் துன்பம். தத்துவ ஞானத்தினாலல்லாமல் முக்தி வாய்க்காது. மருந்துகளினாலும் மூலிகைகளினாலும் யாகாதிகளினாலும் விளையும் பயன் ஸ்வர்க்காதி போகங்களேயாகும். அவையெல்லாம் ஸத்துவ ரஜஸ் தமம் என்னும் முக் குணங்களின் விஷயங்களேயாம்.

இந்தச் சித்தாந்தத்தில் கைக்கொண்டிருப்பன 25 தத்துவங்கள். அவை :—1. புருஷன் (ஜீவாத்மா), 2. பிரகிருதி, 3. மகத்து, 4. அகங்காரம், 5-9. சப்த ஸ்பரிச ரூப ரஸ கந்தங்கள் என்னும் தன்மாத்திரைகள், 10-14. மெய் வாய் கண் மூக்குச் செவி என்னும் ஞானேந்திரியங்கள், 15-19. ஐந்து கர்மேந்திரியங்கள், 20. மனம், 21-25. பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாயம் என்னும் மகா பூதங்கள். இந்தத் தத்துவங்களால் உலகம் அமைந்துள்ளது. எதுவும் உண்மையில் பிரகிருதியின் பரிணாமமே. பிரகிருதியானது நித்தியமாகவும் ஏகமாகவும் ஜடமாகவும் இருக்கின்றது. ஆத்மாவானவன் உண்மையில் சேஷ்டையற்று உதாஸீனனாய் இருப்பினும்

கிருதியின் முக் குணாவேசத்தினால் சிருஷ்டி கர்த்தாவைப் லத் தோன்றுகிறான். சேதனத்தோடு கூடிய இந்த த்மாவுடன் பிரகிருதி சேர்வதனால் சிருஷ்டி உண்டாகின் து. இது முடவனும் குருடனும் பரஸ்பர சகாயத்தின் ாருட்டு ஒன்றுசேர்ந்தது போலாம். பிரகிருதியானது த்துவ ரஜஸ் தமோ குணங்களின் ஸாமியாவஸ்தையாகும்.

ஸத்துவ குணம் எழும்பொழுது சுகம், பிரீதி, சாந்தி, ஜ்ஜை, தேக லாகவம், பொறுமை, தைரியம், பெருந் ரமை, இந்திரிய நிக்கிரகம், ஞானப் பிரகாசனம் என்னு வை தோன்றும். இரஜோகுணம் எழும்பொழுது உலோ ், ஸந்தாபம, கோபம், கலகம், அபிமானம், பொய், பிர ந்த்தி, இடம்பம் என்னு மிவை தோன்றும். தமோகுணம் ம்பொழுது மந்தம், உறக்கம், மோகம், தேககனம், ாம்பு, மடமை, அஜாக்கிரதை முதலியன தோன்றும்.

வெள்ளை நூலினால் நெய்யப்பெற்ற வஸ்திரம் வெண்மை யிருப்பது போல முக்குணம் வாய்ந்த பிரகிருதியினால் ண்டான பிரபஞ்சமும முக் குணம் வாய்ந்ததா யிருக் ிறது. பிரளய காலத்தில் ஜீவாத்மாக்க ளெல்லாம் பிர ருதியில் இலயமாகின்றன. அப்போது அவை சூக்ஷ்ம ரங்களோடு கூடியிருக்கும. பிரகிருதியின் குண விசே ங்களினாலும் கர்மானுசாரமாகவும் அந்த ஜீவாத்மாக்கள் ன்முகப் பிரமன் முதலான சராசரப் பிராணி வடிவங்க ாகச் சிருஷ்டி காலத்தில் வெளிப் படுகின்றன. உலக ாத்தும் உண்மையில் சூக்ஷ்ம வடிவமாகப் பிரகிருதியில் டங்கி யிருக்கின்றது. அது வெளிப் பட்டு ஸ்தூல வடிவ டைவதே சிருஷ்டி. இன்மையினின்று (சூன்யத்திலிருந்து) ன்றும் தோன்றிய தெனக் கூறுவது விரும்பத்தக்க ாதமன்று. எள்ளிலிருந்து வெளிப்படும் எண்ணெய் எத்

கெனவே அதில் இல்லை யெனின், மணல் முதலிய மற்
வஸ்துக்களி லிருந்தும் எண்ணெய் தோன்றக்கூடுமே. ஒ
வொரு தேகத்திலும் ஒவ்வோர் ஆத்மாவாக ஆத்மாக்க
அநேகம் உண்டு.

## யோகம்

இந்த ஈசுவரனை ஒப்புக் கொள்வதனால் 'ஸேசுவ
ஸாங்கியம்' எனப்படும்; பாதஞ்சல மதமெனவும் கூற
படும். இதற்குக் கர்த்தா வாகிய பதஞ்சலி மாமுனிவ
சேஷாவதாரம் என்பர். வடமொழி வியாகரண கர்த்
வாகிய பாணினிமுனிவர் கங்காநதியில் சூரியனுக்கு அர்
கியம் ஈகையில் அவருடைய அஞ்சலியில் விழுந்த காரண
தினால் 'பதஞ்சலி' என்று இவருக்குப் பெயர் வந்த
இவர் சிதம்பர க்ஷேத்திரத்தில் பெருந் தவம் புரிந்து ஈசு
கடாக்ஷம் பெற்றவர். இவர் சரீரத்தின் நோய்களை (தே
தின் மலங்களை) நீக்கும் பொருட்டு வைத்திய நூலையு
அசுத்தமான பத உச்சாரணத்தை (வாக்கின் மலத்தை
நிவர்த்திக்கும் பொருட்டு வியாகரண பாஷ்யத்தையு
விக்ஷேப ரூபமான அந்தக்கரணத்தின் மலத்தை யொ
கும் பொருட்டு யோக சூத்திரங்களையும் செய்தருளின
இதற்கு வியாச முனிவர் பாஷ்யம் எழுதி யிருக்கிற
போஜ விருத்தி முதலான வேறுபல வியாக்கியானங்க
வடமொழியில் இருக்கின்றன.

இந்தப் பாதஞ்சல யோக சாஸ்திரமானது நான்
பாதங்கள் கொண்டது. முதற் பாதத்தில் வைராக்கிய
இரண்டாம் பாதத்தில் இயமம் நியமம் முதலான அ
டாங்கயோக சாதனங்கள், மூன்றாம் பாதத்தில் யோகி
சித்திகளும் மகிமைகளும், நான்காம் பாதத்தில் மோக
என்னும் விஷயங்கள் கூறப் படுகின்றன.

கபிலருடைய நிரீசுவர ஸாங்கியத்திற் சொல்லிய தத்துவங்கள் 25. அவற்றுள் மகத்து முதலான 23-ம் பிரகிருதியின் பரிணமங்கள். அவை போக மிருந்து நின்று பதார்த்தங்கள் எனத்தக்கவை ஆத்மா பிரகிருதி என்னும் இரண்டே; அவை யிரண்டினுலேயே உலகம் உண்டாகிற தென்று அந் நூல் கூறியது. அந்தக் கொள்கையைக் கண்டித்துப் பதார்த்தங்கள் 1. ஈசுவரன், 2. ஆத்மா, 3. பிரகிருதி என்னும் மூன்று என்று யோகசாஸ்திரம் ஸ்தாபிக்கின்றது.

**ஸேசுவர ஸாங்கியம்**

ஆத்மாவினுலும் பிரகிருதியினுலும் மாத்திரமே உலகம் உண்டாகாது, ஈசுவரனுடைய உதவியும் வேண்டுமென்று சொல்வதனுலே இது 'ஸேசுவர ஸாங்கியம்' எனப் பட்டது. ஈசுவரன் பிரகிருதிக்கு உட்பட்டவ னல்லன்; பிரகிருதியினுல் ஈசுவரன் சலனமடைய மாட்டான். ஆத்மா வானவன் பிரகிருதியின் சேர்க்கையினுல் சலன மடைகிறுன். அந்தச் சலனத்தினுல் துக்கம் ஏற்படுகின்றது. அந்தத் துக்கத்தைப் போக்குவதற்கு ஈசுவரனே சக்திவாய்ந்தவனு யிருக்கிறுன் என்பது யோகமதக் கொள்கை.

இருபத்தைந்து தத்துவங்களையும், பிரகிருதிக்குப் பரமாகப் புருஷனையும் தெரிகிறவன் யோக சித்தியை யடைகிறுன். யோகத்தினுல் தோஷங்க ளெல்லாம் நாசமாய்ப் போகும். 25 தத்துவங்களாகிய புருஷன் (ஜீவாத்துமா) பிரகிருதி, மகத்து, அஹங்காரம், தன்மாத்திரைகள் ஐந்து, அவற்றின் திரிபுகள் (மனமும் இந்திரியங்களும்), பஞ்சமகா பூதங்கள் என்னும் இவைகளெல்லாம் கபிலமாமுனிவராலே நன்முக விவரிக்கப் பட்டிருக்கின்றன. இந்தத் தத்துவ ஞானத்தினுல் முக்திவாய்க்குமென்று அவர் சொல்லுகிறுர்.

**தத்துவ விவரம்**

ஞான மாத்திரத்திஞலே முக்தியடையலா மென்று சொல்வது சோம்பேறித் தனத்துக் குரிய இலக்ஷணமாகும் ஞானவாஞ யிருப்பவனுக்கும் தோஷங் களிஞல் ஒவ்வொரு சமயத்தில் புத்திப் அபரோக்ஷஞானம் பிரமை ஏற்படும. குருவின் உபதேசத்தி ஞல் ஒருவன் அவித்தையைப் போக்கிக் கொண்டாலும், அவன் தேகமென்னும் கண்ணுடியில் படிந் திருக்கிற தோஷங்களை யோகத்திஞலேயே போக்கிக் கொள்ளவேண்டியவ ஞவன். உதாரணமாக, பிரசித்தமாய் எல்லாருக்குந் தெரியக்கூடிய வெல்லத்தின் இன்சுவையைப் பித்தசுரங் கொண்டவன் தெரிந்துகொள்ளமாட்டான். ஆத லால், தேகத்திற் குரிய தோஷங்களையெல்லாம் நசிக்கச் செய்ய வேண்டியது அவசியம். குருவின் உபதேசத்திஞல் ஞானத்தை யடைந்து விரக்தஞ யிருக்கப்பட்ட மனிதனும் மேற் சொல்லிய தோஷஙகளைப் போக்கிக் கொள்வதற்கு ஏற்ற மார்க்கம் யோகத்தைத் தவிர வேறு ஒன்றுமில்லை.

ஜனங்கள் காமத்திஞல் வினைகளைச் செய்கிருர்கள்; அவைகளுக்குத் தாங்களே கர்த்தா வென்று அஞ்ஞானத்தி ஞல் எண்ணிக் கொள்கிருர்கள். அந்த அஞ்ஞானம் யாது? வினைகளின் பரிபக்குவத்திஞல் அவர்க ளுக்குப் பிறப்பும், வாழ்வும், போகமும் உண்டாகின்றன. அவர்களுக்கு ஐந்து விதமான துக்கங் கள் (கிலேசங்கள்) உண்டு. அவை அவித்தை, அதஞல் உண்டான இராகத் துவேஷங்கள் (விருப்பு வெறுப்புக்கள்), அகங்காரம், பற்று (அபிநிவேசம்) என்பனவாம். இந்தக் கிலேசங்களுக் கெல்லாம் காரணம் அவித்தையே (அஞ் ஞானமே). அநாத்துமா வாகிய பாஞ்ச பௌதிக தேகத்தை ஆத்துமா வென்று நினைப்பதே அஞ்ஞானம்.

தேகமானது பஞ்சமகா பூதங்களினால் ஆக்கப்பட்டிருக்கின்றது. தேகத்திற்கு உடையவனாகிய தேகி அதற்கு வேறாக (பரமாக) இருக்கிறான். பிள்ளைகள் பௌத்திரர்கள் மற்றுமுள்ள சந்ததிகள் ஆகிய இவைகளெல்லாம் அந்தத் தேகத்தினின்றும் உற்பத்தியானவை. இவைகளும் தேகத்தின் போக்கிய வஸ்துக்களாகிய வீடு, வாசல், நிலம், நட்டு முதலியனவும் தன்னுடையன வென்று நினைப்பதும் அஞ்ஞானமே (அவித்தையே) யாம்.

முக்திநிலை

ஆகையால், மனிதன் அஞ்ஞானத்தைப் போக்கிக் கொண்டு, அதனால் விளைந்த இராகத் துவேஷங்களினின்றும் (விருப்பு வெறுப்புக்களி னின்றும்) விடுபட்டு இம்மை மறுமைப் பயன்களை விரும்பாமல் முக்தியை யடையும் பொருட்டு யோகப் பயிற்சி செய்யவேண்டும். யோகம் என்பது சித்த விருத்திகளை (மனத்தின் வியாபாரங்களை) நிரோதித்து (தடுத்து) ஆத்துமாவைத் தன்னிலையில் நிறுத்தல். சித்த விருத்திகளுள் துக்கத்தோடு கூடியவைகளும், துக்க சம்பந்தமில்லாதவைகளும் உள. சித்த விருத்திகளை நிரோதிக்கும் பொருட்டு மனிதன் இயமம், நியமம், ஆஸனம், பிராணாயாமம், பிரத்தியாஹாரம், தாரணை, தியானம், சமாதி என்னும் இவைகளைப் பயிலவேண்டும். இம்மையில் இலாபத்தை விரும்பி யோகம் பயிலுவோருக்குப் பெரிய லாபம் கிட்டும்; இலாபத்தை விரும்பாமல் யோகம் பயிலுவோருக்குச் சாசுவதமான மோக்ஷம்கிட்டும். யோகத்திற்கு நேரே சாதனமாயுள்ள கிரியாயோகத்தை*க் கைக்கொள்ளல் வேண்டும்.

---

* கிரியாயோகம்—practical application to work in life.

## பூர்வ மீமாம்ஸை

இந்த மதம் ஜைமினி மாமுனிவரால் ஸ்தாபிக்கப்பட்டது. இது மிகவும் பழைமையானது. இந்தச் சூத்திரங்களுக்குப் பாஷ்யகாரர் சபரர். இது யஜ்ஞங்கள், அவ்விய தவ்வியங்கள் முதலான கிருத்தியங்களடங்கிய கர்மகாண்டத்தின் பெருமையை விளக்குகின்றது. இது பன்னிரண்டு அத்தியாயங்கள் கொண்டது. பிரத்தியக்ஷம், அனுமானம், உபமானம், அர்த்தாபத்தி (உள்ளுறைப் பொருட்குறிப்பு), சப்தம் என்னும் ஐந்தையும் பிரமாணமாகக் கொண்டு இந் நூல் தர்மவிசாரஞ் செய்கின்றது. மனிதர்கள் தர்மத்தின் ஸ்வரூபத்தையும் அதர்மத்தின் ஸ்வரூபத்தையும் தெரியாமல் தர்மத்தை யநுஷ்டிக்க முடியாதவர்களாவார்கள்; நிஷித்த தர்மங்களை விட்டொழிக்கவும் முடியாதவர்களாவார்கள். ஆதலால், தர்மாதர்மங்களிரண்டையும் விசாரித் தறிவதே இந் நூலின் நோக்கம். இந்த விசாரத்தினால் பாபத்தில் பயமும், தர்ம கர்மாநுஷ்டானத்தினால் தேக சுத்தியும் சித்த சுத்தியும் உண்டாகும். இதனால் வைராக்கியம் விளையும். ஜைமினி மதத்தின்படி 1. பிரபஞ்சம் சத்தியம், பொய்யன்று; 2. அதற்கு ஆதியும் அந்தமும் இல்லை; 3. வேதங்கள் ஆதியந்த மற்றவை; அவை நீதிகளைப் போதிக்கத்தக்கவை; 4. சொர்க்கம் என்றும் நரகம் என்றும் இரண்டு ஸ்தலங்கள் உண்டு; 5. ஆத்மா ஆதியந்த மில்லாதது; 6. தத்தம் வினைக்குத் தக்கவாறு ஆத்மாக்களுக்கு மறு பிறவி உண்டு; 7. யஜ்ஞங்கள் முதலான வைதிக கர்மங்களைச் செய்வதனால் ஆத்மாக்களுக்குச் சொர்க்கப் பிராப்தியுண்டு; 8. யஜ்ஞங்கள் சொர்க்கத்தை மாத்திரமே யல்லாமல் இம்மைச் சுகங்களையும் அளிக்கத்தக்கன; 9. வேதார்த்த விசார ஞானம் சிறந்தது.

## உத்தர மீமாம்ஸை

இது "வேதாந்த தரிசனம்" என எங்கும் பிரசித்தமாக வழங்கப் பெறுவது. வேதத்தின் கர்மகாண்டத்தைக் கொண்டு செய்யும் விசாரணை 'பூர்வ மீமாம்ஸை' எனப் பட்டதால், ஞானகாண்டத்தைப் பற்றிய விசாரமாகிய இந் நூல் 'உத்தர மீமாம்ஸை' எனப் பட்டது. இந்தச் சூத்திரங்களை இயற்றியவர் பாதராயணரென்னும் வியாசமா முனிவர். தேகங்களை ஏற்கும் தேகியைப்பற்றிச் சொல்வதனுல் இவை "சாரீரக சூத்திரங்கள்" எனப் பெயர் வாய்ந்தன; உபநிஷத்துக்களினுல் விளக்கப்பட்ட பரம் பொருளாகிய பிரம்மத்தை யடைவதற்கான வழி வகைகளைத் தொகுக்க மேற்கொண்டதனுல் இந்தச் சூத்திரங்களைப் "பிரம்ம சூத்திரங்கள்" எனவும் வழங்குவார்கள்; வியாசரால் இயற்றப் பெற்ற காரணத்தால் "வியாச சூத்திரங்கள்" எனவும் இவைகளுக்குப் பெயர் வந்தது.

ஏற்கெனவே சொல்லிய 1. நியாயம், 2. வைசேஷிகம், 3. ஸாங்கியம், 4. யோகம், 5. பூர்வ மீமாம்ஸை என்னும் ஐந்து தரிசனங்களும் ஒவ்வொரு நிலையை முடிவாகக் கொண்டு, அந்த நிலைகளை முக்திசாதன மெனக் கூறின. இவை ஐந்தும் உபநிஷத்து வித்தையாகிய வேதாந்தத்தைக் காப்பதற்காக ஏற்பட்ட வேலிகள் போன்றவை என்னலாம். இவைகளினின்றும் தத்துவங்கள், பிரகிருதி பதார்த்தங்கள், ஸ்தூல தேகபேதம், சிருஷ்டிக்கிரமம், துக்கங்கள், [illegible] களைப்போக்குஞ் சாதனங்கள், கர்மம், புருஷப்பிரயத்[illegible], [illegible]மனத்தின் தத்துவம், இயான்க்கிரமம் [illegible] பற்பல[illegible] [illegible]களைத் தெரிந்து கொண்ட [illegible] பரம்[illegible] [illegible]வதற்கான வழிவகைகளைத் தொகுப்ப[illegible]

ன்கு அத்தியாயங்கள், 156 அதிகரணங்கள், 545 சூத்திரங்கள் கொண்டது. ஒவ்வொரு சூத்திரத்தின் கருத்தையும் உபநிஷத்து வாக்கிய மேற்கோள்களினால் விளக்கிக் கூறுபவனவாக ஏறக்குறைய 15 பாஷியங்கள் இந் நூலுக்கு ஏற்பட்டிருக்கின்றன. அவற்றுள் முக்கியமானவை நான்கு என்னலாம். இந் நான்கு பாஷியங்களும் வேதத்தையே பிரமாணமாகக் கொண்டு நான்கு வேறு வேறு வகைகளாகப் பொருள் கூறுகின்றன. இவைகளை யனுசரித்து நான்கு வேதாந்த மதசாகைகள் ஏற்பட்டிருக்கின்றன. இந்துக்களிற் பெரும்பாலார் இந் நான்கு வகுப்புக்களிற் சேர்ந்தவர்களாகவே இருக்கிறார்கள். மேற் சொல்லிய நான்கு பாஷியங்களுக்கும் கர்த்தாவார் நீலகண்ட சிவாசாரியர், சங்கராசாரியர், இராமானுஜாசாரியர், மத்துவாசாரியர் என்னும் பூர்ணப்பிரஜ்ஞர். இவர்களுடைய கொள்கைகள முறையே சிவாத்துவைதம், அத்துவைதம், விசிஷ்டாத்துவைதம், துவைதம் என்பனவாம்.

**அத்துவைதம்**

அத்துவைதம் என்பது சங்கராசாரியருடைய கொள்கை. கடவுளைத் தவிர வேறொன்றும் இல்லை. அந்தக் கடவுளை ஞான (சித்) ஸ்வரூபமாகவும் ஆநந்த ஸ்வரூபமாகவும் உள்ளதொரு வஸ்தென்று தெரிந்து கொள்ளத் தக்கது. உலக மென்றும் ஜீவாத்துமா வென்றும் நாம் காண்கிற தோற்ற மெல்லாம் இன்னதென்று விவரித்துக் கூற முடியாத தொன்றன் பயன். அதற்கு அவித்தை அல்லது மாயை என்று பெயர். அதற்கு மயக்கும் சக்தி யொன்று இருக்கின்றது. அதனால் கடவுளுக்குப் பல வடிவங்கள் வேறு வேறாகத் தோன்றுகின்றன. பிரகிருதி யென்பதும் ஜீவாத்துமா வென்பதும் உண்மையானவைக ளல்ல. நாம்

மாயையின் மயக்கத்திற் கட்டுப்பட்டு, இவ் வுலகத்தில் விவகரிக்கும் ஆன்மா வென்று நினைத்துக் கொண்டிருக்கும் வரையில் மாத்திரமே அவை உண்மைகள்.

விசிஷ்டாத்துவைதம் என்பது இராமானுஜாசாரியருடைய கொள்கை. இதன்படி பிரம்மம், பிரகிருதி, ஜீவாத்மாக்கள் என்னும் இவை மூன்றும் நித்தியமானவை. இவை தனித்தனியே என்றைக்கும் இருக்கத்தக்கவை. ஆனால், ஜீவாத்மாக்களும் பிரகிருதியும் பரமாத்மாவின் சரீரமே யாம் என்னும் அர்த்தத்தில் இவை மூன்றும் ஒன்றேயெனத் தகும். உலகம் முழுமையும் ஒரே தேகம். அதற்கு ஆதாரமாயிருந்து விவகரிப்பது பரப்பிரம்மமே. அவித்தை யென்பது வர்ணாசிரம தர்மானுஷ்டானங்கள். வித்தை யென்பது பிரம்ம ஞானம். மாயை யென்பது பிரகிருதியும் அதன் குணங்களும் சேர்ந்த தொகுதி. பிரம்மம் ஏகமாகவும் சத்தியமாகவும் உள்ளது. ஜீவாத்துமாவும் பிரகிருதியும் பரப்பிரம்மத்தின் அபின்னமான குணங்கள் என்னும் சக்திகள். இந்தச் சக்திகள் வெளிப்படுவது சிருஷ்டி, இலயப்படுவது பிரளயம். பரமாத்மா பூஜார்கன்; ஜீவன் ஆசிரிதன். ஜீவன் பிரம்ம மல்லன்; ஆனால், பிரம்மத்தின் அம்சம் இவ் விரண்டிற்கும் வேற்றுமை யுண்டு.

விசிஷ்டாத்துவைதம்

துவைதம் என்பது மத்துவாசாரியர் என்னும் பூர்ணப்பிரஜ்ஞருடைய கொள்கை. இந்த மதம் அநேக அம்சங்களில் இராமானுஜ மதத்தை யொத்துச் சிற்சில அம்சங்களில் மாத்திரம் வித்தியாசப்படுகின்றது. 'துவைதம்' என்னும் பெயரிலேயே இஃது ஒற்றுமையைக் குறிப்பதன்று என்பது தெளிவு. பற்பலவென்று தோன்றுகிறவை யெல்லாம்

துவைதம்

ஒன்றிக்கத் தக்கனவல்ல; பிரம்மம், ஜீவன், பிரகிருதி என்னுமிவையெல்லாம் தனித் தனியே யிருப்பன. ஆனால், பிரகிருதியும் ஜீவனும் பிரம்மம் என்னும் விஷ்ணுவுக்குக் கீழ்ப் பட்டவைகளாய் அவரையே ஆதாரமாக வுடையன. அந்த விஷ்ணுவானவர் உலகத்திற்கு நிமித்த காரணம், பிரகிருதி என்பது உபாதான காரணம்.

சிவாத்துவைதம் என்பது நீலகண்ட சிவாசாரியருடைய கொள்கை. இந்த மதம் பெரும்பாலும் இராமானுஜ மதத்தைப் போன்றிருக்கிறது. ஆனால், சிவாத்துவைதம் முக்தி நிலையில் ஜீவாத்துமாவானது வைகுந்தத்தில் பரமாத்துமாவுக்குரிய கலியாண குணங்களிற் சிலவற்றைத் தவிர மற்றவைகளெல்லாம் பொருந்தித் களித்திருக்கிறதென்று விசிஷ்டாத்துவைதிகள் சொல்லுகின்றார்கள். ஜீவாத்துமா வானது பரமாத்துமாவோடு ஐக்கியமாகித் தனிப் பிரஜ்ஞையோடு கூடியிருக்குமென்று சிவாத்துவைதிகள் சொல்லுகின்றார்கள். விசிஷ்டாத்துவைதிகளும் துவைதிகளும் விஷ்ணுவே பரமாத்துமா வென்றும், சூத்திரங்களில் பிரம்மமென்று குறிக்கப் பட்டிருப்பது அவரையே என்றும்சொல்ல, அதற்குமாறாகச் சிவனே பரமாத்துமா, சிவனே பிரம்ம மென்று சிவாத்துவைதிகள் சொல்லுகின்றார்கள்.

---

## 12. ஆகமம்

'ஆகமம்' என்னும் சொல்லுக்கு 'வந்தது' என்பது பொருள். வேதங்களுக்கும் ஆகமம் என்றொரு பெயர் உண்டு. ஆகம வகையிற் சேர்ந்த நூல்கள் சிவ விஷ்ணு வாதிகளால் இருடிகளின் பொருட்டு அருளிச் செய்யப் பட்டவை. சைவம் வைஷ்ணவம் சாக்தேயம் முதலாக இந்து மதத்திலுள்ள பற்பல சாகையினருடைய ஆசாரங் களுக்கும் அநுஷ்டானங்களுக்கும் ஆதாரமாயிருப்பன இவ் வாகமங்களே. தேவாலய நிர்மாணம், மூர்த்திகளை அமைக் கும் முறை, ஆராதனைக் கிரமம், உற்சவாதி விவரங்கள் முதலியன வெல்லாம் ஆகமங்களால் ஏற்பட்டனவாம். மேற் சொல்லிய ஆசாராநுஷ்டான ஆராதனங்களை வற்புறுத்துவ தல்லாமல், யோகம் ஞானம் முதலிய மார்க்கங்களையும் ஆகமங்கள் போதிக்கின்றன. யாமளங்கள், தந்திரங்கள் என்னும் நூல்களும் ஆகம வகையிற் சேர்ந்தனவே. டாமரம் என்னுமொரு கிரந்தமும் இவ்வகையிற் சேர்ந்ததென்பார்கள். கலியுகத்தில் வேத புராணங்களின் சக்தி குறைவு பட்டுப் போகுமாகையால் அக் குறையை நிவர்த்திப்பதற்காக ஆகம தாந்திரிக கிரந்தங்கள் உண்டாக்கப் பெற்றன வென்பார்கள். தாந்திரிகங்களுக்குக் குப்தவித்தை (இரகசிய வித்தை) யென் றும் பெயர். இந்த நூல்களை ஆசாரியர்கள் இரகசியமாகத் தம் சீடர்களுக்கு மாத்திரம் போதிப்பார்கள். தாந்திரிக நூல்கள் வங்காள நாட்டில் பிரபலமா யிருக்கின்றன.

### வைஷ்ணவாகமங்கள்

வைஷ்ணவாகமங்கள் பாஞ்சராத்திரம், வைகாநஸம் என்னும் இரண்டு. பாஞ்சராத்திரமென்பது சோமகாசுரன் வேதங்களைச் சமுத்திரமத்தியிற் கொண்டு போய் மறைத்த

போதனை விஷ்ணுவானவர் தம்முடைய பூஜார்த்தமாகச் சாண்டில்ய முனிவருக்குப் பூஜாவிதியை ஐந்து ராத்திரியில் உபதேசித்தமையின் இப்பெயர் வாய்ந்தது. வைகானஸம் என்பது அறவறம் முதலிய ஒழுக்கங்களையும் யோகஞான இலக்கணங்களையும் பற்றிக் கூறுவது.

### சைவாகமங்கள்

சைவாகமங்கள் காமிகம் முதல் வாதுளம் ஈறாக உள்ள இருபத்தெட்டாகும். இவை சதாசிவ மூர்த்தியின் ஐந்து திருமுகங்களிலிருந்தும் தோன்றின. இவை சிவபேதம், உருத்திர பேதம் என இருவகைப்படும். தத்துவ சொரூபமாகிய விக்கிரகங்கள், ஆலயங்கள், பூஜைகள் என்னும் இவற்றின் உண்மைப் பொருள்கள் இவைகளால் உணர்த்தப்படும். இவைகளை மந்திர மெனவும் தந்திர மெனவும் சித்தாந்த மெனவும் சொல்லுவார்கள். ஒவ்வோர் ஆகமமும் ஒருகோடி கிரந்தங்கள்* உடையது. இவை ஞானபாதம், யோகபாதம், கிரியாபாதம், சரியாபாதம் என்னும் நான்கு பாதங்களுடையன. அவற்றுள்,

ஞானபாதம்.— பதி, பசு, பாசம் என்னும் திரிபதார்த்தங்களின் சொரூபத்தை விளக்குவது;

யோகபாதம்.—பிராணாயாமம் முதலிய எட்டு அங்கங்களோடு கூடிய சிவயோகத்தை உபதேசிப்பது;

கிரியாபாதம்.— மந்திரங்களின் உத்தாரணம், சந்தியா வந்தனம், பூஜை, ஜபம், ஓமம் என்பன வற்றையும், சமயவிசேஷ நிருவாண ஆசாரியாபிஷேக முறைகளையும் உரைப்பது;

சரியாபாதம்.— பிராயச்சித்தம், சிராத்தம், சிவலிங்க விலக்கணம் முதலிய விஷயங்களைக் கூறுவது.

---

* கிரந்தம் என்பது 32 எழுத்துக்கள் கொண்ட அனுஷ்டுப்பு விருத்தம்.

நமது நாட்டு ஸம்ஸ்கிருத கிரந்தங்களைப்பற்றி விசாரிக்கையில், புராணங்களுக்குப் பிறகு பிரசித்தியானவை ஆகம தந்திரங்களாம். இவை இந்து தாந்திரம், புத்த தாந்திரம் என இருவகைப்படும். இந்துதாந்திர கிரந்தங்கள் சிவபெருமான் ஸ்ரீ பார்வதி தேவியை நோக்கி, சிருஷ்டியாதி விஷயங்களைச் சல்லாபனையாய்க் கூறியனவெனச் சொல்லப்பட்டிருக்கின்றது. புத்ததாந்திரங்கள் புத்தர் தமது சீடர்களை நோக்கிப் போதித்தனவாம். சதாசிவப் பெருமானு லருளப் பெற்ற ஆகமம், யாமளம, தாந்திரிகம் என்பனவற்றுள் ஆகமங்களில் சிருஷ்டி ஸ்திதிலயாதி விஷயங்களும், தேவபூஜை செய்யும் விவரங்களும, சடங்குகளைச் செய்யும் விவரங்களும், ஆறுவித தாந்திரிக சாதன விவரங்களும், நான்குவிதத் தியானங்களும் பிரபலமாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

## உபாகமங்கள்

மேற்சொல்லிய ஆகமங்களல்லாமல் 'நாசிங்கம்' முதல் 'விசுவகன்மம்' ஈறுக இருநூற்றேழு 'உபாகமங்கள்' இருக்கின்றன. இவ் விருவகை நூல்களும் சைவர்க்கு முதனூல்களாம். ஜைமினி வசிஷ்டர் கபிலர் நாரதர் காரகர் முதலானவர்கள் இயற்றிய உபதாந்திரிக கிரந்தங்கள் அநேகம் உண்டு. ஆகம வகையிற் கூறிய நூல்களெல்லாம் தர்மார்த்த காம மோக்ஷங்களைப் போதிக்கப்போந்தனவே யாம்.

## 13. பக்தி

### பக்திவகை

பாரமார்த்திக விசாரஞ் செய்கிறவனுக்கு பல வகையான சாதனங்களை யமைப்பது தர்ம சாஸ்திரங்களின் நோக்கமென்று சொல்லி யிருக்கிறோம். மனிதர்கள் ஒருவருக்கொருவர் விரோத மில்லாமல் இசைந்து தமக்கும் பிறருக்கும் அனுகூலமாயிருக்கும் காரியங்களையே செய்து கொண்டு நேர்மையாய் நடந்து பரமாத்மாவை அடைவதே நிரந்தரமான சந்தோஷமாகுமென்று இது வரையிற் குறிப்பித்திருக்கிறோம். மற்றெவ்வகை ஆனந்தமும், சாசுவதமாக இராது. பரஸ்பரானுகூலம், நேர்மை, தேக பரிசுத்தம், மனத்தூய்மை என்னும் இவைகளே பரமானந்தத்திற்கு முக்கியமான சாதனங்களாம். இந்தச் சாதனங்களைக் கைக் கொள்ளுமாறு ஸ்மிருதிகள் நம்மைக் கட்டாயப்படுத்துகின்றன. பரமாத்மாவை யடைந்து பேரானந்தம் எய்துவதற்கான மார்க்கங்களை வேதங்களும் ஸ்மிருதிகளும் நமக்குப் போதிக்கின்றன. அந்த மார்க்கங்கள் கர்மம், பக்தி, யோகம், ஞானம் என்று ஏற்கெனவே குறிப்பிட்டிருக்கிறோம். மனத்தின் மலினங்களைப் போக்குவதற்காக ஏற்பட்டிருக்கும் கர்மங்களைப் பற்றிக் கர்மகாண்டம் என்னுந் தலைப்பின் கீழ் விவரித்திருக்கிறோம். இனி, பக்தி மார்க்கம் எத்தன்மையதென விசாரிப்போம்.

'பக்தி' என்பது எவர் மீதேனும் மிக்க பிரேமை கொண்டிருத்தலாம். பகவானிடத்து அளவற்ற அநுராகம் (ஆசை) கொண்டிருத்தலே சிரேஷ்டமான பக்தி யெனப்படும். அது 1. இராகாத்மிகா பக்தி, 2. அஹேதுகீ பக்தி, 3. முக்கிய பக்தி என மூன்றுவகைப்படும்.

## இராகாத்மிகா பக்தி

தனக்கு இஷ்டமான வஸ்துவின்மீது இருதயமானது, இனிமையோடு மிக்க ஆதுரமான வேகங் கொண்டிருத்தலே 'இராகம்' எனப்படும். இராகம் என்பது அத்தியந்த ஆசை என்பதாயிற்று. ஆசைமயமான இந்தப் பக்தியையே இராகாத்மிகா பக்தி என்பார்கள். நதிகள் சமுத்திரத்தை நோக்கிப் பாய்வதுபோலவும், மலர்கள் நறுமணத்தை வீசுவது போலவும் ஈசுவரனிடத்து அநுராக முள்ளவனுடைய மனம் எப்பொழுதும் ஈசுவரனையே கோரிக்கொண்டிருக்கும். பகவானை அடையவேண்டுமென்று எவ்விதப் பிரயத்தனமு மில்லாமல் தனக்குத்தானே வியாகுலப்படுகிற பிராணியின் பக்தி 'இராகாத்மிகா பக்தி' எனப்படும்.

## அஹேதுகீ பக்தி

வேறு கோரிக்கை களில்லாத பக்தி 'அஹேதுகீ பக்தி' எனப்படும். அஃதாவது, புத்திரர் வேண்டும், பெயர் வேண்டும், பொருள் வேண்டும் என்பன வாதிய கோரிக்கைக ளில்லாது பகவானிடத்துப் பக்தி செலுத்தலாம். இந்தக் கோரிக்கைகளில்லாதிருத்த லன்றி, முக்தியையும் கோராமல் பகவானுடைய திருவடித் தாமரைகளை யடைய வேண்டுமென்று மாத்திரம் இச்சிப்பது 'அஹேதுகீ பக்தி' யாம். பகவானிடத்துத் தன் ஆத்மாவைச் சமர்ப்பித்தவன் பிரம்ம பதவி, இந்திர பதவி, ஸார்வபௌம பதவி, பாதாளலோகாதிபத்தியம், யோகஸித்திகள் முதலானவைகளையும் மோக்ஷத்தையுங்கூட விரும்ப மாட்டான். அப்படிப்பட்டவனுக்கும் பகவானிடத்திலல்லாமல் வேறெந்த வஸ்துவினிடத்தும் ஆசை இராது. எல்லா வற்றிற்கும் மூலம் பக்தியே. முக்தி யென்பது பக்திக்குத் தாஸி எனத் தகும். பகவானிடத்து அனந்த மாய்

னுடன் கூடிய பக்தியானது உதிக்கிற பக்தனுடைய பாதபதுமங்களின்மீது மோக்ஷஸாம்ராஜ்ய லக்ஷ்மியானவள் விழுந்து, 'என்னைக் கைக்கொள்வாய்' என வேண்டுவள். முக்தியின் பொருட்டுப் பக்தன் கவலைப்படமாட்டான். முக்தியானது பக்தனுடைய பாதத்தை யடைய வேண்டுமென்று அவாவிக் கொண்டிருக்கும். மோக்ஷபதவியைக் கூடப் பொருட்படுத்தாமல் அதனை அற்பமென்றெண்ணுகிறவனுடைய பக்தி 'அஹேதுகீ பக்தி' எனப்படும். பகவானுடைய கடாக்ஷத்தால் ஏதோ லாபமடைந்தோமென்னும் நன்றியின் பொருட்டுப் பக்தி செய்வதும், இனியொரு லாபத்தை யடைவோம் என்னும் எண்ணங்கொண்டு பக்தி செய்வதும் அஹேதுகீ பக்தி யாகா. இந்த அஹேதுகீ பக்தியையே முக்கியபக்தி என்றுஞ் சொல்வார்கள். இதைவிடச் சிரேஷ்டமான பக்தி இல்லை. தேவரிஷியாகிய நாரதரும் மஹரிஷியாகிய சாண்டிலியரும் இந்தப் பக்திக்கு நிதரிசனமாவர்.

## இரண்டாந்தர பக்தி

இதுவரையிற் சொல்லி வந்தது முதல் தரமான பக்தியாகும். எல்லாருமே இப்படிப்பட்ட பக்தி செய்வதற்குச் சமர்த்தர்களாயிருக்கமாட்டார்கள். அதிகாரி பேதத்தையனுசரித்து இரண்டாந் தரமான பக்தியும் உண்டு. இது 1. வைதீ பக்தி, 2. ஸஹேதுகீ பக்தி, 3 கௌணீ பக்தி என மூன்று வகைப்படும். இவைகளைப் பக்தியென்று சொல்லாதொழியினும் ஒழியலாம். ஆனால், இவைகளின் மூலமாகச் சிரேஷ்ட பக்தி பிராப்தியாகக் கூடுமாதலால் இவைகளையும் பக்தியென வழங்குகின்றோம். முதன் முதலிற் சொல்லிய சிரேஷ்டமான பக்தி [illegible] தட்டமால் அடைய முடியவில்லையென்று நினைத்து அப்படிப் பக்தி செய்யும் ஆசையை [illegible] ஒழித்தலும் கூடும். அப்படிச் செய்யலாகாது

இரண்டாந் தரமாகச் சொல்லும் இம் மூவகைப் பக்திகளி னும் பழகிவந்தால் முதல் தரமான சிரேஷ்ட பக்தி தப்பா மல் காலக்கிரமத்தில் வாய்க்கும்.

## வைதீ பக்தி

முறைப்படி சாஸ்திரங்களைப் படிப்பதனாலும் பிறர் படித்து விளக்கிச் சொல்லும் விவரங்களைக் கேட்பதனாலும், பகவத் ஸ்வரூபம் இத் தன்மையதென்று அப்போதைக் கப்போது தர்க்கிப்பதனாலும் பகவானிடத்துப் பக்தி நிலை பெறும். எப்படி யென்னில், மேற்சொல்லிய பழக்கங்களினால் பகவானுடைய ஸ்வரூபம் எப்படிப் பட்டதென்று ஒருவித மான அபிப்பிராயம் உண்டாகும். அந்த அபிப்பிராயத்தி னால் பகவத்விஷயங்களில் ஓர் இனிமை தோன்றும். அவ்வினி மையினால் ஆசையெழும். ஆசைமிகுதியினால் பகவானிடத்து மனம் நாட்டமுறும். இவ்வாறு இழுக்கப் பெறுவதனால் 'இராகாத்மிகா பக்தி' உதயமாகும். அடிக்கடி பகவந் நா மோச்சாரணத்தைக் கேட்டு அநேகர் மேற்சொல்லிய வாறு விசாரணை செய்யத் தொடங்கி, பகவத்பக்தர்களா யிருக்கி றார்கள். நாஸ்திகர்களும் பகவந் நாமங்களைக் கேட்டுக் கேட் டுப்பக்தர்களாயிருக்கிறார்கள்.

## ஸஹேதுகீ பக்தி

ஈசுவரன் சுகத்தையும் சம்பத்தையும் அளித்துள்ளா னென்றேனும், இனி யளிப்பா னென்றேனும், விபத்துக்க ளினின்று காத்தா னென்றேனும், இனிக் காப்பா னென் றேனும் நினைத்து, அப்படிப் பட்ட உபகாரஞ் செய்யத்தக் கவர் வேறெவரும் இல்லை யென வோர்ந்து ஈசுவரனையே நினைப்பதனால் உண்டாகும் பக்தி 'ஸஹேதுகீ பக்தி' யெனப் படும். 'எனக்குப் பொருள் கொடு, கீர்த்தி யளி, புத்திர

ஸந்தானம் அருள்' என்பது போன்ற பிரார்த்தனைகளைச் செய்வது ஸஹேதுகீ பக்தியாகும். ஆதலின், இது நிக்ருஷ்டமானது (இழிவானது). ஆயினும், இவ்விதமாகப் பக்தி செய்வதனால் நாளடைவில் அஹேதுகீ பக்தி வாய்க்கும். பிரஹ்லாதனுடைய சரித்திரத்தில் ஆதியிலிருந்தே அவனிடத்து அஹேதுகீ பக்தி விளங்கியது. அவன் அல்லும் பகலும் பகவந் நாமத்தையே ஸ்மரித்துக் கொண்டிருந்தான். அதனை ஏன் ஸ்மரிக்கிறாயென்று வினவப் பதிலுரைக்க மாட்டாமல் தியங்கினான். துருவனுடைய ஜீவிதத்தில் ஸஹேதுகீ பக்தியே அவனிடத்து முதன் முதலில் உதித்தது. பின்பு, அதன் மூலமாக அவனுடைய மனத்தில் அஹேதுகீ பக்தி தலைகாட்டியது. தன் தந்தையின் இராச்சியத்தை விடப் பெரிதான இராச்சியத்திற்கு ஆதிபத்தியம் தனக்குக் கிடைக்க வேண்டுமென்று எண்ணங் கொண்டு துருவன் தவஞ் செய்து பகவானைப் பிரார்த்திக்கலானான். பிரார்த்தனையின் உருக்கம் அதிகரித்ததற்குத் தக்கவாறு அவனுக்குப் பக்தியும் அதிகரித்தது. முடிவில் பகவான் பிரத்தியக்ஷமாகி, "குழந்தாய்! இதோ நீ விரும்பிய வரம்; கைக்கொள்வாய்" எனத் துருவன் ஆச்சரியமெய்தினவனாய், "என்ன வரம்?" எனக் கேட்டான். "நீ எதன் பொருட்டு என்னை அழைக்கத் தலைப்பட்டாய்?" என்று பகவான் அவனை வினவ, அவன் எதன் பொருட்டுத் தவஞ் செய்யத் தொடங்கினானோ அந்த விஷயத்தை முற்றும் மறந்தவனாயிருந்தான். அப்போது பகவான், "நீ இராஜ பதவியின் பொருட்டுத் தவமாசரித்தனை" என்று சொல்லியதன் மீது அவனுக்கு ஞாபகம் வந்தது. உடனே துருவன் பகவானைப் பணிந்து, "ஓ, தேவ! நான் இராஜ பதவியை விரும்பித் தவம் புரியத் தொடங்கியது உண்மையே. ஆனால்,

அநேக முனீந்திரர்களும் யோகீந்திரர்களும் பெருந்தவம் புரிந்தும் பெறமாட்டாத உன்னை நான் இப்போது பெற்றேன். பளிங்கின் நிமித்தம் மண்ணைத் தோண்ட எனக்குத் தூ செயலாய் மாணிக்கம் கிடைத்திருக்கின்றது. ஓ, ஸ்வாமி! கிருதார்த்தனாயினேன். இனி வரம் வேண்டேன்" என மொழிந்தான். இவ்வாறு துருவனுக்கு உண்டாகிய அபூர்வ பரிணாமத்தைப் பாருங்கள். அவனுக்கிருந்த ஸஹேதுகீ பக்தி எங்குப் போயிற்று? அஹேதுகீ பக்தி அவனுடைய இருதயத்தில் பூரணமாக நிறைந்ததே!

பிராண நாதனைக் கண்ணாரக் கண்டு களிப்புற்ற பக்தன் வேறு என்ன வரங்களை விரும்புவான், வேறு என்ன ஆசைகளை மேற்கொள்வான்? மதுபானம் செய்யும் மதுகாமனானது ஜலபானத்தை விரும்புமா? பிரமையில் மூழ்கி மானிடன் ஸஹேதுகீ பக்தியை மேற்கொண்டு ஏதோ வஸ்துக்கள் வேண்டுமென்று பகவானைப் பிரார்த்திப்பதற்கு முதலிடுவான். அவ்வாறு பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டு, பகவத் விஷயங்களைச் சர்ச்சிக்குமளவில் அகஸ்மாத்தாக அவன் ஆனந்த ரஸத்தின் சுவையை ஒருவாறு தெரிவான். ஆனந்த ரஸத்தின் சுவையுணர்ந்தவனுக்குப் பகவானிடத்தல்லாமல் வேறு வஸ்துக்களினிடத்தில் ஆசை யுண்டாகாதென்பது திண்ணம். அப்படிப் பட்டவனை நோக்கி "நீ ஏன் பகவானிடத்து ஆசை கொண்டிருக்கிறாய்?" என்றால் அவன், "ஏன் என்று எனக்குச் சொல்லத் தெரியவில்லை" என்று பதிலுரைப்பான். வைதீ பக்தி, ஸஹேதுகீ பக்தி, கௌணீ பக்தி, என்னும் இம்மூன்றும் முறையே ஏகாத்மிகா பக்தி, அஹேதுகீ பக்தி, முக்கிய பக்தி என்னும் இவைகளைப் பெறுவதற்குச் சோபானங்களெனத் தெரியத்தகும்.

## கௌணீ பக்தி

இது குண பேதங்களினால், 1. ஸாத்விகீ பக்தி, 2. இராஜஸீ பக்தி, 3. தாமஸீ பக்தி என மூன்று வகையாகவும், அக்கத்தின் பலவகைப் பேதங்களினால் 1. ஆர்த்த பக்தி, 2. ஜிஞ்ஞாஸா பக்தி, 3. அர்த்தார்த்தி பக்தி என மூன்று வகையாகவும் சொல்லப்படும். தாமஸீ பக்தியிலிருந்து இராஜஸீ பக்தியும், இராஜஸீ பக்தியிலிருந்து ஸாத்விகீ பக்தியும் உண்டாகும். அதன்மீது ஸாத்விகீ பக்தியே முக்கிய பக்தியாகப் பரிணமிக்கும்.

தாமஸீ பக்தி.—பிறர்க்கு அபகாரம் செய்யும் கள்வர் முதலான துர்மார்க்கர்கள் தத்தம் கோரகாரியங்கள் நிறைவேறும் பொருட்டுப் பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டிருத்தல் தாமஸீ பக்தி யெனப்படும். காளி பூஜை செய்து இருட்டித் தனத்திற்குப் புறப்படுகிற கள்வர்களையும், தப்பு வழக்குகள் ஜெயிக்க வேண்டுமெனக் காளி நாமத்தை ஜபித்துக் கொண்டு காளியைப் பூஜை செய்கிறவர்களையும் நாம் நாள்தோறும் காண்கின்றோமே. இவர்களுடைய பக்தி யெல்லாம் தாமஸீ பக்தி யாகும்.

இராஜஸீ பக்தி.—போக போகங்களில் விருப்புற்றுப் புத்திரர்கள் பெருமை, கீர்த்தி, பொருள், மற்றுமுள்ள ஐசுவரியங்கள் ஆகிய இவை வேண்டுமெனவும், தனக்கு அநியாயஞ் செய்தவர்களுக்கு கஷ்டம் அல்லது நஷ்டம் உண்டாகுக எனவும் பகவானைப் பிரார்த்திப்பது இராஜஸீ பக்தி யாகும்.

ஸாத்விகீ பக்தி.—பூவுலகத்துப் போகங்களில் இம்மி மாத்திரமும் இச்சையில்லாமல் பரோபகாரஞ் செய்து கொண்டு முக்தியை மாத்திரமே விரும்பிப் பகவானைப் பிரார்த்தித்துக் கொண்டிருப்பது ஸாத்விகீ பக்தியாகும்.

மேற்சொல்லிய மூன்று விதமான பக்திகளும் காமத்தோடு கூடினவை. முக்கிய பக்தி யென்பது நிஷ்காமமானது. ஆனதாலே, முக்கிய பக்தியில் முக்தி வேண்டுமென்னும்

விருப்பங்கூட முடிவில் இல்லாமற் போகின்றது. கௌணீ பக்தியினால் கிரமக்கிரமமாக முக்கிய பக்தி வாய்க்கும்.

ஆர்த்தபக்தி.—தான் அகப்பட்டுக் கொண்டிருக்கிற விபத்தி லிருந்து தப்பித்துக் கொள்ளும் பொருட்டுப் பகவானைப்பிரார்த்திப்பது ஆர்த்தபக்தி யாகும். அஃதாவது, நோய் நேர்ந்த காலத்தும், துக்கம் பீடிக்கும் பொழுதும், இக்கட்டிற் சிக்கின வேளையிலும் பகவானைப் பிரார்த்திப்பதாம். கடற்பிரயாணஞ்செய்கையில் கப்பல் மூழ்கு மெனத் தோன்றினால் நாமெல்லோரும் ஆர்த்தபக்தர்களே யாவோம்.

ஜிஞ்ஞாஸு பக்தி —பகவத தத்துவத்தைத் தெரிந்து கொள்ள வேண்டு மென்னும் விருப்பங்கொண்டு அவ் விஷயங்களை ஆலோசித்துக்கொண்டிருப்பது ஜிஞ்ஞாஸு பக்தியாகும். அஃதாவது, பகவான்மீது பிரேமையில்லா விடினும், அவரால் எந்தக் காரியம் எப்படி நடக்கின்றதோ வெனத் தெரிந்து கொள்வதற்காகப் பகவத் தத்துவத்தைப் பரிசீலனஞ் செய்வது.

அர்த்தார்த்தி பக்தி.—ஏதோ ஒரு பேறுபெற வேண்டு மென்று பகவானைப் பிரார்த்திப்பது அர்த்தார்த்தி பக்தி யாகும். அஃதாவது, புத்திரர்கள் வேண்டும், தனம் வேண்டும், யசஸு வேண்டும் எனப் பகவானைப் பிரார்த்திப்பது.

மேலே விவரித்த மூன்று வித பக்திகளும் இழிவானவை. ஆயினும், கிரமக் கிரமமாக இவைகளிற் பழகி வந்தால் சிரேஷ்ட பக்தி வந்தெய்தும். கஷ்டங்களில் அகப்பட்டுக் கொண்டபோது பகவானைப் பிரார்த்திப்பதற்கு வழக்கப்பட்டவனுடைய இருதயத்தில், கஷ்டங்கள் நீங்கின பின்னருஞ் சிறிது காலம் வரையில் அந்தப் பக்தியானது நிலை கொண்டிருக்கும். அதனால் அவன் பகவத் பிரார்த்தனையை விடா திருப்பான். ஆகையால், அவனுக்கு முக்கிய பக்தி வாய்க்கும். ஜிஞ்ஞாஸு பக்தன் பகவத் தத்துவத்தைக் குறித்து விசாரிக்கு மளவில் இனிமையான பக்தி

ரஸத்தின் சுவை அவனுக்குத் தோன்றும். அதனால் அவன் பகவத் விஷயமான சிந்தையை விடமாட்டாமல் முக்கிய பக்திப் பதவியை அடைவான். அர்த்தார்த்தி பக்தியுள்ளவனுக்கு எவ்விதமாக முக்கிய பக்தி யுண்டாகு மென்பதற்குத் துருவனே நல்ல சான்றாகும்.

## பக்திக்கு அதிகாரி

வைராக்கிய மென்பது எத்தன்மையதெனத் தெரியாவிடினும் சமுசாரத்தில் அத்தியந்த ஆசையில்லாமற் சந்தர்ப்பானுசாரமாக அதனில் ஒருவாறு சிரத்தைகொண்டு விவகரிப்பவனுக்குப் பக்தி மார்க்கம் சித்திக்கும். ஒவ்வொரு வேளையிலேனும் பகவான்மீது செல்லும் மனமுடையவனுக்கும் இது சாத்தியமாகும். பக்தி செய்வதற்கு ஜாதி, மதம், வயது முதலான பேதங்கள் தடை செய்வதில்லை. பக்தனுடைய ஜாதி, வித்தை, குலம், உருவம், தனம் முதலானவைகளை விசாரிக்கவேண்டியதில்லை. பக்தியினால் உபாசிக்கப்படுகிறவன் பகவான், உபாசிக்கிறவன் பக்தன். உபாசிக்கப்படுகிறவனுக்குச் சமஸ்தமும் சமானமாயிருப்பதுபோலப் பக்தனுக்கும் ஸமஸ்தமும் சமானமே. ஈசுவரன் ஸமஸ்த வஸ்துக்களுக்கும் தாய் தந்தையரைப் போன்றவன். தாய் தந்தையரை விளிப்பதற்குக் கல்வித்திறமையாவது வாக்சாதுர்யமாவது அவசியமில்லை. ஆகையால், அவர்களை யழைப்பதற்கு எந்தச் சாஸ்திரத்தையும் பயில வேண்டியதில்லை. பகுத்து வாஸனை யறியாத பக்தன் ஸரளமான இருதயத்தோடு தன் தாயை விளிக்கத் தொடங்கினால் அவ் வம்மை பிரேமையினால் மேற்கொள்ளப்படுகிறாள். அந்தப் பிரேமையை எண்ணிப் பார்ப்பதற்குத் தக்கவாறு ஞானேதயம் உண்டாகும். பக்தன் தன் தாயை அழைத்துக்கொண் டிருப்பதற்குத் தக்கபடி அந்தத் தாயார் அவனுக்குத் தன்னுடைய நிஜ ஸ்வ

ரூபத்தைக் காட்டிக்கொண்டிருப்பாள். அவள் ஞானஸ்வரூபி யல்லவா? ஆகையால், தாயினிடத்துப் பிரேமையினால் பக்தனுடைய இருதயத்திலுள்ள ஞானகோசம் விகசிக்கும். உதாரணமாக, கண்ணப்ப நாயனாருடைய குலமும் கல்வியும் எத்தன்மையன? துருவன் மிக்க இளம் பிராயத்தவனல்லனோ? கஜேந்திரன் படித்திருந்த படிப்பு எவ்வளவு? கஞ்சனுடைய பணிப் பெண்ணான குப்ஜை என்பவளுடைய வக்கிரமான தேகத்தின் அழகு எப்படிப்பட்டது? சுதாமன் என்னும் குசேலன் எவ்வளவு தனவான்? விதுரனுடைய வம்சம் யாது? யாதவபதியான உக்கிரசேனன் எவ்வளவு பௌருஷமும் பராக்கிரமமு முடையவன்?

## பக்த லக்ஷணம்

பக்தர்கள்—1. உத்தமர், 2. மத்தியமர், 3. அதமர் என மூவகைப்படுவார்கள்.

ஆத்ம பேத மில்லாமல், தனம் முதலானவைகளிடத்துத் தன்னுடையன பிறருடையன என்னும் வேற்றுமையை மறந்து சர்வ பூதங்களையும் சமானமாக எண்ணி, இந்திரியங்களையும் மனத்தையும் அடக்கி யாள்பவன் உத்தம பக்தனாவன்,

உத்தம பக்தன்

இவனுக்கு எல்லாப் பிராணிகளிடத்தும் ஈசுவரனுடைய விலாசமே தோன்றும். எல்லாப் பதார்த்தங்களும் ஈசுவரனிடத்தே அமைந்திருக் கின்றன வென்று இவன் எண்ணுவான். சமுசார விஷயங்களெல்லாம் விஷ்ணுவின் மாயையென உணர்வான்; போக்கிய வஸ்துக்களைத் தன் இந்திரியங்களின் மூலமாக அனுபவித்த போதிலும் சந்தோஷமாவது துக்கமாவது அணுமாத்திரமுங் கொள்ளான்.

**மத்திய பக்தன்**

ஈசுவரனிடத்துப் பிரேமையும், பக்தர்களிடத்து நட்பும், மூர்க்கர்களிடத்துக் கிருபையும், சத்துருக்களிடத்து உபேக்ஷையும் உள்ளவன் மத்தியம பக்தனாவன். இவனுடைய மனம் அதம பக்தனை விட அநேக விதங்களில் பரிசுத்தமானது. இவன் ஈசுவரனிடத்தில் சிரத்தைக்குப் பதிலாக அநுராகங் கொண்டுள்ளான்; பக்தர்களிடத்துப் பிரேமையுள்ளவனா யிருக்கிறான், சாதுக்களுடைய சகவாசத்தில் ஆசையுள்ளவனா யிருக்கிறான்; மூர்க்கர்களைக் கண்டு வெறுக்காமல் அவர்களிடத்துக் கிருபை கொள்கிறான்; சத்துருக்களை வதைக்க வேண்டுமென்னும் துவேஷத்திற்குப் பதிலாக அவர்களின் விஷயத்தில் பராமுகமா யிருக்கிறான். இவனுக்கு ஸமஸ்த மானிடர்க ளிடத்தும் சமத்துவ புத்தி இன்னும் ஏற்படவில்லை; பகவத் பக்திப் பிரவாகத்தினால் ஸமஸ்தமும் ஒரே வடிவ மெய்தவில்லை.

**அதம பக்தன்**

சிரத்தையாக விக்கிரக ஆராதனஞ் செய்து கொண்டு, பக்தர்களையும் அடியார்களையும் பூஜிக்காதிருப்பவன் அதம பக்தனாவன். இவன் இருதயத்தில் பக்தி உதிக்கப்பெற்றுக்கிரமக்கிரமமாக உத்தம பக்தனாகத் தக்கவன். விக்கிரகாராதனஞ் செய்யாதவர்களுள்ளும் ஈசுவரனிடத்தில் சிரத்தை மாத்திரம் உள்ளவர்கள் இருப்பார்கள். இவர்கள் ஈசுவரனுடைய நாமங்களை ஸ்மரித்துக் கொண்டு பகவதுபாசனை செய்யும் மார்க்கத்திலிருந்தும், பகவத் பக்தர்களின் மீதும் மற்றவர்களின் மீதும் விசேஷ சிரத்தையில்லா திருப்பார்கள். இவர்களும் நிகிருஷ்ட பக்தர்களே. இந்த வகுப்பைச் சேர்ந்த பக்தர்கள் கெட்ட காரியங்களைச் செய்வதற்குப் பின்வாங்காராயினும், அப்போதைக் கப்போது பச்சாத் தாபத்

திணால் மீளா வேதனை மாத்திரம் அடைவார்கள். இவர்களுக்கு மானிடர்மீது பிரேமையிராது. அகங்காரம் மிகுந்திருக்கும், சத்துருக்களை அடக்கி யொடுக்க வேண்டுமென்னும் எண்ணம் பூர்த்தியாக இருக்கும். இவர்கள் குரோதலோபங்களுக்கு வசப்பட்டிருப்பார்கள். ஆயினும், பகவானிடத்தில் அளவளாவு சிரத்தை இருக்கும். ஆகவே, இவர்களுடைய இருதயம் மிகவும் அற்ப மாத்திரமே பரிசுத்தமானதென்று தெரியத்தகும்.

## பக்தி ரஸம்

பக்தனுடைய பக்குவ பேதத்தை யனுசரித்துப் பக்தி ரஸமானது 1. சாந்தி, 2. தாஸ்யம், 3. ஸக்கியம், 4. வாத்ஸல்யம், 5. மாதுரியம் என ஐந்து விதமாகும்.

சாந்தி

சாந்த மெய்தும் வரையில் பக்தி தோன்றாது. சாந்தி ரஸமானது பக்திக்கு முக்கியமான ஸோபானமாகும். ஈசுவரனிடத்தில் நிஷ்டையும் சமுசார வாசனைகளை விட்டொழித்தலும் சாந்தி ரஸத்தில் அமைந்திருக்கும். இவ்விரண்டு குணங்களை யனுசரித்தே பக்தி இருக்கும். மற்ற பக்திரஸங்களெல்லாம் சாந்திரஸத்தை யனுசரித்தனவே யாதலின், அவைகளிலும் இவ்விரண்டு குணங்கள் இருக்கும். ஈசுவரனிடத்து மமதை சாந்தி ரஸத்தில் இராது; ஆனால், ஈசுவரனுடைய ஸ்வரூப ஞானம் மாத்திரம் இருக்கும். அஃதாவது, அவர் பரப்பிரம்மம், பரமாத்மா, பரந்தாமம் என்னும் ஞானம் மாத்திரம் இருக்கும்.

தாஸ்யம்

தாஸ்ய பக்தனுடைய மனத்தில் மமதை உதயமாகும். பகவானைப் பிரபுவென்றும், தான் தாஸனென்றும் திடமான விசுவாசங் கொண்டு இவன் பகவானுக்குச் சேவை செய்வான். அவரிடத்து அளவில்லாக் கௌரவம் பாராட்டுவான். பகவானுடைய தாஸனென்று சொல்லிக் கொள்வ

தில் ஆனந்தமடைவான். உற்ற சேவகனொருவன் பிரபுவின் சேவையில் தீவிரங் கொண்டிருப்பது போலத் தாஸ்ய பக்தன் பகவத் சேவையில் ஆதுரங் கொண்டிருப்பான். அந்தச் சேவையைத் தவிர மற்றெதுவும் இவனுக்கு இனிக்காது. இவன் பகவானிடத்தில் எவ்விதமான வரமும் வேண்டான்.

**ஸக்கியம்**

ஸக்கிய ரஸத்தில் கௌரவ சம்பிரமங்கள் இரா; ஜீவாத்மாக்களெல்லாம் ஸமம் என்னும் ஞானம், பகவான் மீது பரிபூர்ணமான விச்வாசம், பகவானோடு போராடுதல், பிரேமையினால் விவாதம், அபிமானம், களியாட்டங்கள் முதலானவை இருக்கும். பகவானைவிடப் பிரியமான வஸ்து வேறொன்று இல்லையென்னும் நம்பிக்கை கொண்டிருத்தலே ஸக்கியரஸத்தின் முக்கிய லக்ஷணமாகும்.

**வாத்ஸல்யம்**

வாத்ஸல்ய ரஸத்தில் பகவான் கோபாலனென்னுங் குழந்தை யாவர். அவரைப் பக்தன் தன்னுடைய புத்திரனெனப் பாராட்டிப் பிரேமை காட்டுவான், சிநேகம் மிகக் கொண்டாடுவான்; அவரை யெடுத்து மடியில் வைத்துக் கொள்வான். உண்பித்தல், உடுப்பித்தல், உறங்குவித்தல், தாலாட்டுதல் முதலாகக் குழந்தைக்குச் செய்யத்தக்க உபசாரங்களை யெல்லாம் ஆதரவுடன் இவன் அன்பாய்ச் செய்வான். ஆனால், இவ்விதமாக எல்லோரும் பக்தி பாராட்டுதல் மிகக் கஷ்டமாகும்.

**மாதுரியம்**

மதுர ரஸத்தைக் குறித்துச் சொல்வதெப்படி? மதுர ரஸமென்பது அதிமதுரம். இந்த ரஸம் மனத்தில் சஞ்சரிக்கத் தொடங்கின பக்தன், ஸதியானவள் எவ்விதமாகத் தன் பதியைத் தவிர வேறெவரையும் அறியாளோ அவ்விதமாக, பகவானைத் தவிர மற்றவர்களை அறியான். இவன்

சம்பூர்ணமாகப் பகவானுக்குத் தன் ஆத்மாவைச் சமர்ப் பணஞ் செய்தவனாவன்.

### பக்தி யநுஷ்டானம்

அநுஷ்டானத்தில் பக்தியை ஆந்தரபக்தி என்றும் பாஹ்ய பக்தி என்றும் இருவகையாகப் பிரிக்கலாம். ஆந்தர பக்தி யென்பது ஈசுவரனுடைய கலியாண குணங்களை நினைத்து மனனஞ் செய்து, மானஸிகமாக ஆராதித்து ஆனந்தித்துக் கொண்டிருத்தல். பாகிய பக்தியென்பது ஈசுவரனைத் தனக்கு வெளியில் கண்டு களித்து அர்ச்சிப்பது. இதுவே விக்கிரகாராதனைக்கு மூலமாகும். சைவ சாக்த காணாபத்திய ஸௌர காபாலிக வைஷ்ணவமாதியாக உள்ள சகல மதத்தவர்களும் தத்தம் இஷ்ட தேவதைகளை உத் தேசித்துச் செய்யும் பக்தி மேற்சொல்லிய ஆந்தர பாகிய பக்திகளுள் அடங்கும். இவர்கள் சிரவணம், கீர்த்தனம், ஸ்மரணம், பாதஸேவனம், அர்ச்சனம், வந்தனம், தாஸியம், ஸக்கியம், ஆத்ம நிவேதனம் என்று சொல்லப்படும் ஒன்பது வகைகளில் பக்தி செலுத்துவார்கள்.



# 14. முடிவுரை

தத்துவ ஆராய்ச்சி செய்து தெரிந்துகொள்ளத்தக்க முக்கியமான விஷயத்தை ஒருவாறு சுருக்கமாக எடுத்துரைப்போம். இந்த ஆராய்ச்சியின் நோக்கம் என்னவெனில், மனிதனாக விவகரிக்கும் ஜீவாத்மா தனக்குரிய நிர்ப்பந்தங்களையும் துக்கங்களையும் போக்கிக்கொண்டு என்றும் மழியாத சுகத்தை யடையும் வழியைத் தேடுவதேயாம். இந்த வழியைப் போதிப்பதற்கே வேதங்களும் மற்றுமுள்ள நூல்களும் ஏற்பட்டிருக்கின்றன. அவைகளில் ஜீவாத்மாவின் இலக்ஷணம், அதற்குள்ள துக்கங்களின் விவரம், துக்கங்களுக்குக் காரணமான பிரகிருதியின் தன்மை, பிரகிருதியைக் கடந்து துக்க நிவர்த்தியாகி முக்திபெற வேண்டுமென்னும் உண்மை, முக்தி பெறுவதற்கு இன்றியமையாத அருட்பிழம்பாகிய ஈசுவரனுடைய தன்மை என்பனவெல்லாம் விஸ்தரிக்கப்பட்டிருக்கின்றன. ஆனால், அந்த நூல்களுக்கு ஒவ்வொருவர் ஒவ்வொரு விதமாகப் பொருள் சொல்வதனால் வழிகள் பற்பலவாகத் தோன்றும். ஆயினும் இங்ஙனம் வேறு அபிப்பிராயங் கொண்டுள்ளவர்களெல்லோருமே

ஈசுவரன்

என்னும் பரமாத்மாவை அடைந்தாலன்றி மேற்சொல்லியவாறு நிரந்தர ஆனந்தம் வாய்க்காதென்று ஒப்புக்கொள்கிறார்கள். ஸாங்கிய சித்தாந்தம் ஒன்றில் மாத்திரம் இவ்விஷயம் தெளிவாகக் கூறப்படவில்லையே யல்லாமல் மற்ற சித்தாந்தக்காரர்களெல்லாரும் ஈசுவரனை யடைவதே முக்தி யென்று கூறுகிறார்கள். ஆகையால், இந்த ஈசுவரனை யடைவதற்கு மார்க்கங்கள் வேறு வேறாயினும் அந்த மார்க்கங்களினால் அடையத்தக்க ஈசுவரன் ஒருவனே யென்பது நிச்சயமாக ஏற்பட்டது.

இந்த ஈசுவரனே உலகத்திற்கெல்லாம் ஆதிகாரணமாயுள்ள நித்திய வஸ்து. இவர் எங்கும் நிறைந்தவர். இவருக்கு ஆதியந்தமில்லை. இவர் என்றைக்கும் மாறுபாடில்லாதிருக்கும் ஸத்தாகவும், ஞானமே வடிவமாயுள்ளவராகவும், ஆநந்த மயமாகவும் இருக்கிறார். இவருக்கு உருவமில்லை. இதையே இந்து மதமல்லாத மற்ற மதத்தவர்களுங்கூடத் தெய்வமென்று ஒப்புக்கொள்கிறார்கள். இந்தத் தெய்வத்திற்கு அவரவர்கள் வெவ்வேறு பெயர் வைத்துக்கொண்டிருக்கிறார்கள். இந்த அபிப்பிராயத்தைச் சொல்லுமிடத்து,

அங்கிங்கெனாதபடி யெங்கும்பிரகாசமா
யானந்தபூர்த்தியாகி
யருளொடுநிறைந்ததெது தன்னருள் வெளிக்குளே
யகிலாண்டகோடி யெல்லாந்
தங்கும்படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது மனவாக் கினிற்
றட்டாமனின்றதெது சமயகோடிகளெலாந்
தந்தெய்வ மெந்தெய்வ மென
றெங்குந் தொடர்ந்தெதிர் வழக்கிடவு நின்றதெது
வெங்கணும் பெருவழக்காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி யின்பமா
யென்றைக்கு முள்ளதெது மேற்
கங்குல்பக லறநின்ற வெல்லையுள தெதுவது
கருத்திற் கிசைந்ததுவே
கண்டனவெலா மோன வுருவெளிய தாகவுங்
கருதியஞ் சலிசெய்குவாம்

என்று தாயுமானவர் கூறினார். ஈசுவரன் ஒருவனே என்பதை வற்புறுத்தி,

ஓருங்கால் தேவனொருவனே என்றுரைப்பர்
ஆருமறியா ரவர் பெருமை—ஓரும்
பொருள் முடிவு மித்தனையே எத்தவஞ் செய்தார்க்கும்
அருள் முடிவ தாழிய ரன்பால்

என்று சிவஞான சித்தியாரிலும் கூறப்பட்டிருக்கின்றது. பரம்பொருளின் இலக்ஷணத்தை எம்மதத்தாருஞ் சம்மதமென்று சொல்லும்படி மறைநூல்கள் கூறுவதுபோலத் தென்னாட்டு ஞானிகளும் கூறியிருக்கிறார்கள்:—

நம்மாழ்வார்

உளன் எனில் உளன் அவன் உருவம் இவ்வுருவுகள்
உளன் அலன் எனில் அவன் உருவம் இவ்வுருவுகள்
உளன் என இலன் என இவைகுணம் உடைமையின்
உளன் இருதகைமையொடு ஒழிவிலன் பரந்தே.

திடவிசும் பெரிவளி நீர்நிலம் இவைமிசை
படர்பொருள் முழுவதுமாய் அவை அவைதோறும்
உடன்மிசை உயிரெனக் கரந்து எங்கும் பரந்துளன்
சுடர்மிகு சுருதியுள் இவையுண்ட சுரனே.

திருமங்கை யாழ்வார்

மின்னுருவாய் முன்னுருவில் வேதநான்காய்
விளக்கொளியாய் முளைத்தெழுந்த திங்கள் தானாய்
பின்னுருவாய் முன்னுருவிற் பிணிமூப்பில்லா
பிறப்பிலியாய் இறப்பதற்கே யெண்ணாதெண்ணும்
பொன்னுருவாய் மணியுருவிற் பூதமைந்தாய்ப்
புனலுருவா யனலுருவிற் றிகழுஞ்சோதி
தன்னுருவா யென்னுருவில் நின்ற வெந்தை
தளிர்புரையுந் திருவடியென் றலைமேற் கொண்
[டேன்.

அப்பர் சுவாமிகள்

விறகிற் றீயினன் பாலிற்படுநெய்போல்
மறைய நின்றுளன் மாமணிச் சோதியான்.

திருமூல நாயனார்

சிவனுக்குள்ளே சிவயனம் பூத்தது.

காலினில் உற்றும் கரும்பினிற் கட்டியும்
பாலினுள் நெய்யும் பழத்துள் இரதமும்
பூவினில் நாற்றமும் போலுளன் எம்மிறை
காவலன் எங்கும் கலந்து நின்றானே.

அன்புஞ் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிகிலார்
அன்பே சிவமாவது யாரும் அறிந்தபின்
அன்பே சிவமாய் அமர்ந் திருந்தாரே.

இப்படிப் பட்ட பரமேசுவரனைப் பலர் பல பாஷைக ளில் பல பெயர்களிட்டு வணங்குகிறார்கள். உற்றுப் பார்ப்ப வருக்கு இப் பெயர்களெல்லாம் ஒரே பரமேசுவரனுடைய பல குணங்களைப்பற்றிப் புகழ்ந்து புனைந்த பெயர்களேயாம். இந்தப் பரமேசுவரனே பரமபிதா வென்றும், இவரால் படைக்கப்பட்ட மானிடர் யாவரும் சகோதர வாஞ்சை மேற்கொண்டு சமரசமாக வாழவேண்டு மென்றும் பிரபல மதங்களெல்லாம கோஷிக்கின்றன :—

நம்மாழ்வார்

குலந்தாங்கு சாதிகள் நாலிலுங் கீழிழிந்தெத்தனை
நலந்தானிலாத சண்டாளர் சண்டாளர்க் காளாகிலும்
வலந்தாங்கு சக்கரத் தண்ணல் மணிவண்ணர்க் காளென்றுள்
கலந்தாரடியார் தம்மடியா ரெம்மடிகளே.

சகோதரர்களுள் அன்புக்குரியவர்கள் மாத்திரமேயல்ல மல் பூஜிதைக்குரிய பெரியாரும் உளரென்பது ஒவ்வொரு குடும்பத்து அனுபவத்திலுங் கண்டறியத்தக்க விஷயமே

யல்லவா? அது போல மானிடரெல்லாரிடத்தும் நாம் சகோதராவாஞ்சை பாராட்டுவதன்றி அவர்களுள் ஈசுவர பக்தியுடையவர்களைப் பூஜிதையாகப் பாராட்டவேண்டும்:—

திருநாவுக்கரசு சுவாமிகள்

சங்கநிதி பதுமநிதி யிரண்டுந் தந்து
தரணியொடு வானாளத் தருவரேனு
மங்குவா ரவர்செல்வ மதிப்போ மல்லோ
மாதேவர்க் கேகாந்த ரல்லா ராகில்
அங்கமெல்லாங் குறைந்தழுகு தொழுநோயாரா
யாவுரித்துத் தின்றுழலும் புலையரேனும்
கங்கைவார் சடைக்கரந்தார்க் கன்பாகி
லவர்கண்டீர் யாம் வணங்குங் கடவுளாரே.

ஈசனுக் கன்பில்லார் எவ்வுயிர்க்கும் அன்பில்லார்
தமக்கு மன்பில்லார்
பேசுவதென் னறிவில்லாப் பிணங்களை நாமிணங்கிற்
பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர் விடு நீ
ஆசையொடும் அரனடியா ரடியாரை அடைந்திட்
டவர்கருமம் உன்கரும மாகச்செய்து
கூசிமொழிந் தருண்ஞானக் குறியினின்று கும்பிட்டுத்
தட்டமிட்டுக் கூத்தாடித் திரியே.

ஈசுவரனே சகலபுவனங்களுக்கும் ஆதாரமென்று சொன்னோம், எல்லாம் அவரிடத்திலேயே தோன்றி, அவரிடத்திலேயே பெருகி, அவரிடத்திலேயே அடங்குகின்றன. மரஞ்செடிகள் மண்ணில் தோன்றி, மண்ணிலே வளர்ந்து, மண்ணிலே மடிவதைப் போலவே உலகங்களும் ஈசுவரனிடத்திலே தோன்றி நிலைத்து ஓங்கி ஒடுங்குகின்றன எனக் கூறலாம்.

## நிர்க்குணப் பிரம்மம்

மேற்சொல்லிய ஈசுவரனை இந்துக்கள் 'பிரம்மம்' என்பார்கள். இது சச்சிதானந்த சொரூபமானது; மனத்திற்கும் வாக்கிற்கும் எட்டாதது, ஆதியந்த மில்லாதது, அளவற்றது. அளவற்றதாகிய இந்தப்பிரம்மத்தை அற்பசக்தியோடு கூடிய இந்திரியங்களாலும் மனத்தினாலும் அளந்தறிய முடியாமையால் இதனை 'நிர்க்குணப் பிரம்மம்' என்பார்கள். ஆனால், ஒரு மனிதன் தனக்குள்ள ஐந்து இந்திரியங்களில் ஒவ்வொன்றையும் கொண்டு ஒவ்வொரு விஷயத்தைக் கிரகிப்பது போல இந்த நிர்க்குணப் பிரம்மமானது உலக சிருஷ்டியாதியில் மூன்று சக்திகளாகப் பரிணமிக்கின்றது. அப்படிப் பரிணமிக்கும் வேளையில் இந்தப் பிரம்மத்திற்கு

## ஸகுணப் பிரம்மம்

என்று பெயர். இந்த ஸகுணப் பிரம்மமானது நிர்க்குணப் பிரம்மத்திற்குச் சொல்லிய சச்சிதானந்த சொரூபத்தோடு ஸமஸ்த கலியாண குணங்கள் பொருந்தியதாய், ஒருதன்மையை மேற்கொண்டு உலகத்தைப் படைத்து, மற்றொரு தன்மையை மேற்கொண்டு அதனை வளர்த்துக் காத்துப் பின்னுமொரு தன்மையை மேற்கொண்டு அதனை யழித்து மறு சிருஷ்டிக்குச் சித்தமாக்குகின்றது.

இந்த ஸகுணப் பிரம்மத்தின் அறிவுக்கு அளவில்லை வல்லமைக்கு வரம்பில்லை, கருணைக்குக் கரையில்லை. இந்த ஒரே வஸ்து, மனிதன் கண்ணையும் மூக்கையும் காதையும் வேறு வேறு காரியத்திற்கு உபயோகிப்பது போலத் தன்னுடைய சக்திகளில் ஒவ்வொன்றைக் கொண்டு சிருஷ்டி ஸ்திதி சங்காரம் என்னும் முத்தொழிலையும் நடத்துகின்றது. இவ்வாறு இது நடத்தத் தலைப்படுகிற அவசரத்திலிருந்தே

இதன் தன்மைகளை நாம் அறிவதற்காகும். அதற்கு முன்னால் நிர்க்குணமாய் இருக்கும்பொழுது இதைப் பற்றி ஒன்றுமே சொல்ல முடியாது. குணங்களோடு கூடிச் சிருஷ்டி, ஸ்திதி சங்காரம் என்னும் காரியங்களை நடத்தத் தொடங்கும்போது இதனுடைய கலியாண குணங்களை மனிதன் மனத்தினால் சிறிது மட்டும் எட்டிப்பார்த்து ஒருவாறு தெரிந்து ஆனந்திப்பதற்காகின்றது. மனிதனுடைய பிரயத்தனங்களும் யோகம் ஞானம் முதலாகிய சாதனங்களும் அவன் இம்மட்டும் ஏறுவதற்கே உதவும். அதற்கு மேலே மனிதனுடைய சக்தி பயன்படாது. இந்த ஸகுணப் பிரம்மத்தையே ஒவ்வொருவர் சிவன் விஷ்ணு முதலான வேறு வேறு பெயர் வைத்து ஆராதிப்பார்கள். இந்த ஒரு மூர்த்தியே சிருஷ்டி ஸ்திதி சங்கார காரியங்களைச் செய்யுமளவில் முறையே

## திரிமூர்த்திகள்

என வேறு வேறு பெயரால் விவகரிக்கின்றது. உலகத்தைப் படைக்கும்போது பிரமன் எனவும், வளர்த்துக் காக்கும்போது விஷ்ணு எனவும், அழிக்கும்போது சிவன் எனவும் இதற்கே பெயர். பெயர்கள் வேறு வேறாயினும் மூர்த்தி ஒன்றேயாகும். இவ்வாறு திரி மூர்த்திகளென வழங்கப் பெறும் பிரமன், விஷ்ணு, சிவன் என்னும் மூவரும் உண்மையில் ஒரே மூர்த்தியாவர். இந்தப் பரம வஸ்துவானது உலகத்தைப் படைக்கும் பொருட்டுத் தன்னுடைய அனந்த சக்திகளுள் ஒன்றாகிய

## பிரகிருதி

யைச் சாதனமாகக் கொள்கின்றது. இந்தப் பிரகிருதி ஸத்துவம், இராஜஸம், தாமஸம் என்னும் மூன்று குணங்களு

டையாது. உலகமெல்லாம் இதனின்றும் உற்பத்தியான மையின் இதற்கு 'மூலப் பிரகிருதி' யென்று பெயர். இதுவே சராசரங்களனைத்திற்கும் மாதாவெனத் தகும். இப்படிச் சொல்லுமிடத்துப் பரம வஸ்துவாகிய ஈசுவரனைப் பிதா என்ன வேண்டியதாகும். உலகத்திலுள்ள சேதன ஸ்வரூபங்களெல்லாம் ஈசுவராமிசம் எனவும், ஜட ஸ்வரூபங்களெல்லாம் பிரகிருதியின் அமிசம் எனவும் கொள்ளல் தகும். இந்தப் பிரகிருதியானது பலவகையாக மாறுபாடெய்தி இவ்வுலகமாகப் பரிணமித்திருக்கின்றது. இந்தப்பரிணமம் என்றைக்கும் நிலையாய் இருக்கத்தக்கதன்று. இது ஒரு பொழுது தோன்றி ஒரு பொழுது மறையும். தோன்றுவதே சிருஷ்டி, மறைவதே பிரளயம். இங்ஙனம் தோன்றலும் மறைதலும் நிரந்தரமாக நடந்துகொண்டிருக்கின்றன. மறையும்போது பிரகிருதி யெல்லாம் ஈசுவரனிடத்தில் இலயமாயிருக்கும். இவ்வாறு இலயமாயிருக்கும் நிலைக்குக் 'காரணாவஸ்தை' என்று பெயர். வெளிப்பட்டு உலகமாக விவகரிக்கும் நிலைக்குக் 'காரியாவஸ்தை' என்று பெயர். எனவே பிரகிருதியானது காரணாவஸ்தை காரியாவஸ்தை என்று இரண்டு அவஸ்தைகளோடு கூடியதாகும். இப்படிப்பட்ட அவஸ்தாபேதம் (நிலை மாறுபாடு) ஈசுவரனுக்கு இல்லை. பிரகிருதியின் காரண காரியாவஸ்தைகளிரண்டிற்கும் சாக்ஷியாக ஈசுவரன் மாறுமல் ஒரே நிலையில் எப்போதும் இருக்கின்றார். காரணாவஸ்தையில் பிரகிருதியானது ஈசுவரனிடத்தில் இலயமா யிருக்குமென்று சொன்னோம். காரியாவஸ்தையிலும் அது ஈசுவரனை ஆதாரமாகக் கொண்டு, அவருடைய சம்பந்தத்தினலேயே விளங்கத் தக்கதே யல்லாமல், அவரை விட்டுப்பிரிந்து தனித்து விவகரிப்பதற்கு யோக்கியதை யில்லாதது. பிரகிருதி ஜடத்தன்மை

புள்ளது, ஈசுவரனே சேதனஸ்வரூபி. ஆதலால், பிரகிருதியானது எப்பொழுதும் ஈசுவரனுக்கு வசமாயுள்ளது.

## ஜீவன்

ஈசுவரன் சகல சராசரங்களுக்கும் இறைவனென்று சொன்னோம். சராசரங்களெல்லாம் பிரகிருதி புருஷ வடிவமாக இருக்கின்றன. அதாவது, கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட இப் பிரபஞ்சத்திற் காணும் பிராணிகளெல்லாம் இரண்டு அம்சங்கள் வாய்ந்திருக்கின்றன. அவ் வம்சங்களாவன—1. ஜீவன், 2. சரீரம். பிராணிகள் செய்யும் சகல விவகாரங்களும் ஜீவனாலேயே நடத்தப்படுகின்றன. அந்த விவகாரங்களுக்குச் சரீரம் சாதனமா யிருக்கின்றது. இந்த ஜீவன் உண்மை நூல்களில் 'புருஷன்' என விவகரிக்கப் பெறுவன்; ஜீவாத்துமா எனப் படுகிறவனும் இவனே.

**ஜீவனும் சரீரமும்**

இவன் நித்தியன், நிர்மலன், சக்தன் (சாமர்த்தியம் வாய்ந்தவன்), நிர்விகாரி, சேதனன் (நடப்பிக்கிறவன்), ஞானி, ஆனந்தன். சரீரம் அழிவுற்ற போதிலும் இவனுக்கு அழிவில்லை. தத்துவ நூல்களில் ஆத்துமாவின் இலக்ஷணங்களென்று கூறப்படுவன வெல்லாம் இவனுக்கும் பொருந்தும். பரமாத்துமா எனப்படும் கடவுளின் இலக்ஷணத்தையும், ஜீவாத்துமாவின் இலக்ஷணத்தையும் ஆராயுங்கால் இரண்டும் ஒரே தன்மையனவா மெனத் தத்துவ நூல்கள் கூறும்.

**ஜீவ தத்துவம்**

ஆனால், இவ் விருவரையும் ஒப்பிடுமிடத்துக் கடவுளைக் கடலாகவும், ஜீவனை அக் கடலிலுள்ளதொரு சிறிய நீர்த்துளியாகவும் சொல்லலாம்; கடவுளைப் பெரிய மரமாகவும், ஜீவனைச் சிறிய முளையாகவும் கூறலாம்; ஆயிரங் கிரணங்களுடன் பிரகாசிக்கிற சூரியனுக்கும் தீப்பொறிக்கும் மிக்க வித்தியாச

**ஜீவேசுவர பேதம்**

யிருப்பினும், அக்கினியின் தன்மையாகிய உஷ்ணாதிசயம் அவை யிரண்டினிலும் ஒன்று யிருப்பதுபோல ஜீவனுக்கும் கடவுளுக்கும் அளவிட வொண்ணு வித்தியாசங்கள் இருந்த போதிலும், பரமாத்துமாவின் இலக்ஷணங்கள் யாவும் ஜீவாத்துமாவினிடம் சூக்ஷ்மமாக அமைந்திருக்கின்றன. ஜீவனை ஈசுவரனுடைய அம்சம் என்று சொல்லலாம். சரீரத்தோதி சம்பந்தப்பட்டிருப்பதனால் ஜீவனிடத்தில் ஆத்ம குணங்கள் நன்றாகப் பிரகாசிப்பதில்லை. அந்தக் குணங்கள் கொஞ்சங் கொஞ்சமாக விகசிக்கத் தொடங்கிப் பூர்ணமாக விகாசமடையும்போது ஜீவன் சரீரமென்னும் கட்டினின்றும் விடுபட்டு முக்தனுகிறன்.

அதுவரையில் ஒவ்வொரு சரீரத்தினு மிருந்து 'நான்' என்று சொல்லிக் கொள்கிறவன் இந்த ஜீவனே. சரீரமானது பிரகிருதியின் ஆகாரம்; ஆதலால், பிரகிருதிக்குரிய ஸத்துவம் இராஜஸம் தாமஸம் என்னும் முக்குணங்களும் வாய்ந்தது. இது அறிவற்றது, அழிவுள்ளது, மாறுபடுந் தன்மை வாய்ந்தது, மலினத்தன்மை பொருந்தியது. சுருங்கச் சொல்லின், சரீரமானது ஜீவனுடைய லக்ஷணங்களுக்கும் குணங்களுக்கும் விரோதமான தன்மையுடையது.

சரீர லக்ஷணம்

ஜீவனுடைய சக்திகள் சரீரத்தினுல் தடைப்பட்டு விளங்காதிருக்கின்றமையின், சரீரத்திற்குப் 'பந்தம்' எனும் பெயர் வந்தது. சரீரத்தோடு கூடியிருப்பதனால், அதோடு அவசு, கட்டுண்டிருப்பதனால், ஜீவன் தன்னை அசக்தனுகவும், அற்ப சக்தியுள்ளவனுகவும், அற்ப அறிவுள்ளவனுகவும், பிறப் பிறப்பென்னும் அவஸ்தைகளுடன் கூடியவனுகவும் நினைக்கிருன். இந்த நினைவினுல் இவனுக்குத் துக்கங்கள் அதிகரிக்கின்றன. தனக்

பந்த லக்ஷணம்

குரிய உண்மையான இலக்ஷணங்களை நன்றாக அறிவானாயின் இவனுக்குத் துக்கமே யிராது. அந்த அறிவு உண்டாவதற்கு ஆத்மசக்திகள் கொஞ்சங் கொஞ்சமாகத் தெளிவுற்றுப் பரிபக்குவ மடையவேண்டும். அவை பூர்ண பரிபக்குவமடைந்த பின்னரே இவனுக்கு ஆனந்தநிலை கிட்டும்.

*சரீர யாத்திரை*

ஆத்ம சக்திகள் கொஞ்சங் கொஞ்சமாகப் பரிபக்குவ மடையும் பொருட்டே ஜீவன் துன்பங்கள் நிறைந்த இவ்வுலகத்தில் சரீரங்களை வகிக்கின்றான். ஒரு தடவை எடுத்த சரீரம் நசித்தால் வேறு சரீரத்தை அடைகிறான். சுகம் அடைய வேண்டுமென்னும் ஆசையும், அவ்வாசையினால் செய்யும் சங்கற்பங்களுமே இவனுக்கு நூதன சரீரங்களை யமைக்கின்றன. ஆத்மசக்திகள் அநேக ஜன்மத்து அனுபவங்களினாலல்லாமல் பரிபக்குவ மடைவதில்லை.

உலோகவர்க்கம், விருக்ஷவர்க்கம், பிராணி வர்க்கம், முதலானவைகளில் ஜீவன் சரீரங்களைப் பெற்று ஒவ்வொன்றிலும் கொஞ்சங் கொஞ்சமாகச் சக்திகளை அதிகப்படுத்திக் கொண்டு கடைசியாக மானிட சரீரத்தை ஏற்கிறான். மானிட சரீரத்தில் விவகரித்துத் தன் சக்திகளைப் பூர்ணமாக விகசிக்கும்படி செய்து கொண்டால், அப்பிராகிருதமான (பிரகிருதி சம்பந்தமல்லாத) சுகத்தை யனுபவிப்பதற்கு உரியவனாகிறான். மேற் சொல்லிய ஜன்மங்களில் இவன் தேறும் வரிசைக் கிரமம் எங்ஙனமெனின்,— உலோகங்களில் ஸத்தா ரூபனாகப் பிரகாசிக்கிறான்; விருக்ஷ வர்க்கத்தில் இரஸ ரூபனாக விளங்குகிறான்; இங்கிருந்து அதிக சக்தி வாய்ந்து பிராணி வர்க்கத்தில் சித்த ரூபனாக விவகரிக்கிறான்; சித்தம் என்பது மனம். இந்த நிலைமையில் ஜீவன் அனுபவிக்கும் சுகம் போதாதென்னும் எண்ணம் ஏற்பட்டு,

அதிக சந்தோஷ சுகங்களை விரும்பி ஜீவன் மானிட சரீரத்தைப் பெறுகிறான். இந்தச் சரீரத்தில் இவன் அகங்கார ரூபனாக இருக்கிறான். மானிட ஜன்மத்திலேயே அந்தக் காரண விருத்திகள் விகாஸமடைகின்றன (மலர்கின்றன). இந்த விகாஸத்தினால் ஜீவன் நிலையற்ற சரீரச் சேர்க்கையால் நேர்ந்த இன்ப துன்பங்களையெல்லாம் முற்றும் வெறுத்து நிலையான பேரானந்தத்தை யடைகிறான்.

ஜீவாத்துமாவானவன் எப்பொழுதும் ஒரு தேகத்தை ஒட்டியே விவகரிக்கத் தக்கவன். இந்த நிலைமையில் இவனுக்கு க்ஷேத்திரஜ்ஞன் என்று பெயர்; ஜீவனது விவகாரம் அதாவது, தேகத்து விவகாரங்களையெல்லாம் அறிகிறவன் என்று அர்த்தம். இவனுடைய சேதனத்தினாலே தேகமானது விவகரிக்கின்றது. இவன் இல்லையெனின் தேகத்திற்கு ஒரு விதமான யோக்கியதையும் இல்லை. இவன் தேகத்தின் மூலமாகச் சகல போகங்களையும் அனுபவிக்கிறான். அனுபவிக்கிற இவனுக்குப் 'போக்தா' என்று பெயர்; அனுபவிக்கப்படும் விஷயங்களுக்குப் 'போக்கியங்கள்' என்று பெயர்.

இவ்வாறு இவன் விஷயங்களை யனுபவிப்பதற்குக் காரணங்களும் தேகமும் வேண்டும். காரணங்களாவன இந்திரியங்களும் மனமும் ஆம். இவை தேகத்தின் மூலமாக விவகரிக்கின்றன. தேகம் ஸ்தூலமாகக் காணப்படுவது எல்லாருக்கும் பிரத்தியக்ஷம். இந்திரியங்களும் மனமும் கண்ணுக்குப் புலப்படுவதில்லை (சூக்ஷ்மமாக இருக்கின்றன).

தேகம்.

ஸ்தூலமாகக் காணப்படுவது மாத்திரமே தேகமென்று நினைக்கலாகாது கண்ணுக்குப் புலப்படாத இந்திரியங்களையும் மனத்தையும் தேக வகையிலேயே சேர்க்கவேண்டும்; அந்தத் தொகுதி

க்ஷ்ம தேகம் எனப்படும். பிராண சக்தி இல்லாவிடில் இந்திரியங்களும் மனமும் விவகரிக்க மாட்டாவாதலால் மேற்சொல்லிய சூக்ஷ்ம தேகத் தொகுதியில் பிராண சக்தியும் சேர்ந்ததே யாகும். இவ்வாறு ஏற்பட்ட ஸ்தூல சூக்ஷ்ம தேகங்களுக்குக் காரணமாயிருப்பது மற்றொன்று உண்டு. அது காரண சரீரம் எனப்படும். இம் மூவகைச் சரீரங்களை ம் ஐந்து கோசங்களாக வகுத்துக் கூறுவார்கள். 'கோசம்' என்னுஞ் சொல்லுக்கு 'உறை,' அல்லது 'மேற்போர்வை' என்று அர்த்தம். மானிட தேகம் ஐந்து போர்வைகளினால் அமைந்துள்ளது. போர்வைகளென்னும் அவ் வைந்து கோசங்களின் அமைப்பு விவரம் வருமாறு :—

| | | |
|---|---|---|
| அன்னமய கோசம் | ஸ்தூல தேகமானது அன்னத்தின் இரஸத்தினால் உண்டாகி வளர்கின்றமையின் 'அன்னமய கோசம்' எனப்பட்டது. இது தோல், மாமிசம், இரத்தம், மஜ்ஜை, மேதை, நரம்பு, எலும்பு என்னும் ஏழு தாதுக்களோடு கூடியது ; பிறப்பு, இருப்பு, திரிபு, வளர்ச்சி, தேய்வு, அழிவு என்னும் ஆறு மாறுபாடுகள் (விகாரங்கள்) உள்ளது. | ஸ்தூல சரீரம் |
| பிராணமய கோசம் | பிராணன், அபானன், வியானன், உதானன், ஸமானன் என்னும் ஐந்து பிராண பேதங்களும்; வாக்கு, பாணி, பாதம், பாயு, உபஸ்தம் என்னும் ஐந்து கர்மேந்திரியங்களும் சேர்ந்த தொகுதி. | சூக்ஷ்ம சரீரம் |
| மனோமயகோசம் | மனமும் மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐந்து ஞானேந்திரியங்களும் சேர்ந்த தொகுதி. | |
| விஜ்ஞானமய கோசம் | புத்தியும் ஐந்து ஞானேந்திரியங்களும் சேர்ந்த தொகுதி. | |

ஆநந்தமய கோசம் — ஜீவன் தனக்கு இஷ்டமான வஸ்துவைப் பார்க்கும் பொழுது சந்தோஷம் கொள்கிறான். இந்தச் சந்தோஷத்திற்குப் 'பிரியம்' என்று பெயர்; அதனை யனுபவிக்கும் பொழுது கொள்ளும் சந்தோஷத்திற்கு 'மோதம்' என்று பெயர்; அனுபவித்த பிறகு தோன்றும் சந்தோஷத்திற்குப் 'பிரமோதம்' என்று பெயர். இம்மூவகைச் சந்தோஷமும் அஜ்ஞானத்தினால் ஏற்படுகின்றன. இந்த அஜ்ஞானத்திற்கு 'அவித்தை' என்று பெயர். ஜீவத்தன்மை ஏற்பட்டது இந்த அவித்தையினாலே யாகும். இது எப்பொழுதும் ஜீவனோடு கூடியே யுள்ளது. உண்மையில் இஃது ஒரு கோச மல்லவாயினும் ஆத்மஸ்வரூபஞானத்தை மறைக்கும் தன்மையுடையதாதலால் இதுவும் கோச வகையிற் சேர்க்கப்பட்டது. } காரண சரீரம்

பஞ்சகோசங்களோடு கூடிய ஜீவாத்மாவானவன் எப்பொழுதும் ஒரே நிலைமையில் இருந்து விவகரிக்காமல் ஒவ்வொரு சமயத்தில் ஒவ்வொரு நிலையை மேற்கொள்கிறான்.

மூன்று அவஸ்தைகள் — அவன் விழிப் புற்றுப் பொறி புலன்களோடு கூடி ஸ்தூல தேக வுணர்ச்சியுடன் வெளி விஷயங்களைத் தெரியும நிலை ஜாக்கிராவஸ்தை யெனப்படும். ஸ்தூல தேக வுணர்ச்சி நீங்கி வெளி விஷய விவகாரங்களெல்லாம் விட்டு மனமே விஷய வடிவமாகத் தோன்றும் நிலை ஸ்வப்னாவஸ்தை யெனப்படும். மேற் கூறிய இருவகை யுணர்ச்சிகளு மற்று இந்திரியங்களும் மனமும் ஆதிகாரணமாகிய அவித்தையில் அடங்கி நிற்கும் நிலை ஸுஷுப்தி யவஸ்தை யெனப்படும்.

ஜாக்கிரதாவஸ்தையிலும் ஸ்வப்னாவஸ்தையிலும் சுக க்க வுணர்ச்சிகள் உண்டு. ஸுஷுப்தி யவஸ்தையில் ஓர் ணர்ச்சியும் இல்லை. ஓர் உணர்ச்சியும் இல்லாத நிலை ஒரு கை ஆனந்தமன்றோ? இவ் வானந்தம் இருள் போன்றது. னெனில், நன்றாகத் தூங்கி யெழுந்தவன் 'ஆனந்தமாகத் ங்கி யெழுந்தேன்' என்று தன் ஆனந்தானுபவத்தை ஜாக் தாவஸ்தையில் சொல்லுவனே யல்லாமல் சுஷுப்தி வஸ்தையில் அவ் வானந்த வுணர்ச்சி அவனுக்கு இல்லை.

ஜீவாத்மாவுக்குரிய சரீரங்கள் ஸ்தூல சூக்ஷ்ம காரணங் ள் என மூவகைப் படுமல்லவா? அவைகளுள் சூக்ஷ்ம சரீரமும் காரண சரீரமும் ஜீவாத்மாவை

**புனர் ஜன்மம்**

எப்பொழுதும் தொடர்ந்து நிற்கும். ஆனால், இவை ஸ்தூல சரீரத்தை ஆதார மாகக் கொண்டே நிற்கும். ஸ்தூல சரீரமோ வெனின், எப்பொழுதும் நிலையாய் இருப்பது அன்று; சிறிது காலத் திற்குப் பின்பு பயனற்றதாகும். அப்படி அது பயனற்ற தாகும் பொழுது ஜீவாத்மா அதனை விட்டுத் தன் சூக்ஷ்ம காரண சரீரங்களோடு மற்றொரு ஸ்தூல தேகத்தைக் கைப் பற்றுகிறான். அவ்வாறு ஜீவாத்மா ஸ்தூல தேகத்தை விடுவது மரண மெனவும், மற்றொரு ஸ்தூல தேகத்திற் புகுவது பிறப்பு (ஜனனம்) எனவும் சொல்லப்படும். இப்படிப்பட்ட பிறப்பும் இறப்பும் மாறி மாறி நிகழ்கின்றன. இங்ஙனமாக ஜீவாத்மாவுக்கு ஸ்தூல தேகம் அடிக்கடி மாறினும், சூக்ஷ்ம தேகமும் காரண தேகமும் மாத்திரம் மாறுவதில்லை.

ஸ்தூல தேகம் மாறி மாறி வருவதற்குக் காரணம் ஜீவாத்மாவின் வினையேயாம். வினை (கர்மம்) என்பது நல் வினை (புண்ணியம்), தீவினை (பாபம்) என

**இருவினைகள்**

இருவகைப்படும். அவனவன் செய்யும் வினைகளின் பயன்களை அவனவன் அனுப வித்தே தீரவேண்டும். வினை செய்வதற்குச் சாதனமாயுள்ள

ஸ்தூல சூக்ஷ்ம தேகங்கள் வினையின் பயனை யனுபவிப்பதற்கும் அவசியமே யாம் என்று சொல்லவும் வேண்டுமோ? வினைப்பயனை யனுபவிப்பதற்கேற்ற ஸ்தூலதேகமும் வாழ்க்கை நிலையும் மற்றுமுள்ள சந்தர்ப்பங்களும் ஒவ்வொரு பிறப்பிலும் ஜீவாத்மாவுக்கு அமைகின்றன. வினை செய்வதற்குக் காரணம் ஜீவாத்மாவுக்குள்ள விருப்பு வெறுப்புக்கள் (இராகத்துவேஷங்கள்) ஆகும். விருப்பு வெறுப்புக்களுக்கு மூல காரணம் அஜ்ஞானம் (அவித்தை) ஆகும்.

**ஜீவாத்ம லக்ஷணம்**

அவித்தையி லாழ்ந்து, பஞ்ச கோசங்களுடன் கூடி, விருப்பு வெறுப்புக்களுற்று, மூன்று அவஸ்தைகளை யுடைய வனாய் இருவினைகளைச் செய்து, அவ் வினைப் பயன்களை யனுபவித்துக் கொண்டு, அடிக்கடி பிறப்பிறப்புக்கள் வாய்ந்து உழலுந் தன்மை யுடையவனே ஜீவாத்மா.

**முக்தி**

மேலே விவரித்த நிலையில் ஜீவாத்மா, அற்ப சக்தி யுடையவனாகவும், தன் தன்மையை யுணராதவனாகவும், பிரமைகளை மேற் கொண்டவனாகவும், பிறப் பிறப்பென்னும் சமுசாரப் பெருஞ் சுழலில் அகப்பட்டவனாகவும், ஸ்தூல சூக்ஷ்ம காரண தேகங்களாற் கட்டுண்டவனாகவும் இருக்கின்றான். இவ் வனைத்திற்கும் காரணம் அறியாமை (அஜ்ஞானம், அவித்தை) என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறோம். அறியாமை நீங்கி மேற் சொல்லிய பந்தத்தினின்றும் விடுபடுவதே 'வீடு' (முக்தி, மோக்ஷம்).